An Interesting - -
- - - Tamil Novel.

# Sundari Manoharan

PUBLISHED
BY
P. Rajagopalacharriar.



PRINTED
AT
SRI PADMANABA VILASUM PRESS,
Madras.

1905.

உ

கடவுள் துணை.

—:*:—

# சுந்தரிமனோகரன்

என்னும்

ஓர் விநோதகதை.

ப. இராசகோபாலாசாரியரால்

பதிப்பிக்கப்பட்டது.

முதற் பதிப்பு.

சென்னை:

ஸ்ரீபத்மநாபவிலாசம் பிரஸ்ஸில்

அச்சிடப்பட்டது.

1905.



 [விலை அணா-12.

# விஷய சூசிகை.

உ

கடவுள்துணை.

# சுந்தரிமனோகரன்.

## 1. மனோகரன்.

ஒருநாள் காலை மகததேசத்தைச்சார்ந்த சத்தியபுரி என்னும் சிறிய பட்டணத்தின் பக்கமா யோடும் பம்பா நதிக்கரையின்மீது உட்கார்ந்து தந்தசுத்தி செய்துகொண்டிருந்த ஓர் பெரியவர் தன் அருகாமையில் நின்றுகொண்டிருந்த சிறுவனை நோக்கி, "என் அப்பா! இன்றைக்கு என்ன விசேஷம்?" என்று கேட்டார். "ஐயா! இன்றைக்குப் பிரபுவின் சம்பந்திகளுக்கு விருந்து. இரவு தாசி விசாலாட்சியின் வீணைக்கச்சேரி. இதன் மத்தியில் சிறிது அகஸ்யம் நடக்கும். இன்றைய விசேஷ மிவ்வளவுதான்" என்று அச் சிறுவன் பதில் கூறினன். இதைக்கேட்ட அப் பெரியவர் சொல்லுகிறார். ஹே! சம்பாதி! கலியாணமென்றால் உங்கள் பிரபு வீட்டுக் கலியாணந்தான் கலியாணம். பணமிருந்தாலும் அதைச் செலவிடும்வகை எல்லாருக்கும் நன்றாய்த் தெரியாது. பந்துக்களை அதிக மரியாதையாக வரவழைத்து உபசரிக்குந் திறமையும், சிநேகிதர்களைக் கண்டவுடன் பிரியமுடனழைத்து விசாரிக்கும் அன்பும், பந்துவுமல்லாமல் சிநேகிதனு மல்லாமல் என்னைப்போல் வந்திருக்கும் அநேகர்களை ஆதரவுடன் அழைத்து அங்கீகரிக்கும் நற்குணமும், ஏழைகளுக்கிரங்கி அவர்களுக்கு வேண்டுபவற்றை யளிக்குங் கொடையும் உங்களுடைய சந்திரசேகரப் பிரபுவினிடத்து அமைந்திருப்பதுபோல மற்ற

வரிடத்து நான் கண்டதில்லை. கலியாணம் நடந்து இன்றைக்குப் பதினைந்து நாளாகியும் இன்னும் பிரதி தினம் விருநது நடக்கிறது. அநேக வரிசைகள் வருவதும் போவதுமா யிருக்கின்றன. காலைமுதல் மாலைவரையில் மேளவாத்தியம் முழங்குகிறது. இரவில் நல்ல பாட்டுக்கச்சேரிகளும் ஆட்டக்கச்சேரிகளும் நடக்கின்றன. இப்படியாக நித்திய கலியாணம்போல நடப்பது வெகு ஆச்சரியமென்று அப் பெரியவர் புகழ்ந்து பேசினார். இராமதாசரே! இவர்கள் வீட்டில் இந்த விவாகம் இப்படி நடப்பது ஓர் ஆச்சரியமன்று. இப்போ திருக்கும் சந்திரசேகரப் பிரபுவின் பாட்டனார் இந்த மகத தேசத்தை யெல்லாம் ஆண்டு கொண்டு மகாராஜாவாக விருந்தார். யானை படுத்தால் குதிரை உயர மிருக்காதாவென்று சம்பாதி கூறினான். ஆகா! அப்படியா! இவர்கள் இராஜவமிசத்தைச் சேர்ந்தவர்களா? இந்தச் சங்கதி எனக்குத் தெரியாது சம்பாதி. சந்திரசேகரரின் பாட்டனார் இராஜாவா யிருந்தால் இவர்கள் இராச்சியத்தை யிழந்துவிட்டதற் கென்ன காரணமென்று இராமதாசர் கேட்க, சம்பாதி சொல்லுகிறான். சந்திரசேகரரின் பாட்டனார் அவரது முன்னோர்களைப்போலவே மகததேசத்தை யறுபதுவருஷம் ஆண்டு, இராச்சியத்தைத் தன் பிள்ளையினிடத்து ஒப்புவித்து, மூதோர் சென்ற நெறியை யனுசரித்து, மண்ணாசை பொன்னாசை பெண்ணாசையென்னும் மூவகை யாசைகளையும் முற்றுந் துறந்து, காட்டிற்குச் சென்று தனியே யோர் ஆசிரமத்தி லிருந்து பகவானிடத்து அந்தரங்க பக்தி செய்ய வேண்டுமென்று எண்ணி யிருக்கையில், இப்போது மகததேசத்தை யாளும் சந்திரவதனனுடைய பாட்டன் சார்வபூமன் பழய விரோதத்தால் மகததேசத்தின்மீது படையெடுத்து யுத்தஞ் செய்து தேசத்தைப் பிடித்துக் கொண்டார். தோல்வியடைந்த பின் சந்திரசேகரருடைய பாட்டனார் தன் புதல்வனையழைத்துக்கொண்டு சார்வபூமனால் கொடு

க்கப்பட்ட இந்தச் சத்தியபுரியில் சிலநாள் வாழ்ந்து கொண்டிருந்தார். அவர் காலத்திற்குப் பிறகு சந்திரசேகரரின் பிதா சந்திரசூடன் என்பவர் பிரபுவென்னும் பட்டம் பெற்று மகத வரசனுக்கு வருஷந்தோறுங் கப்பங் கட்டிக் கொண்டு சிலநாள் வாழ்ந்து சந்திரசேகரரைப் பெற்றுப் பூலோக வாழ்க்கையைத் துறந்தார். அன்று முதல் சந்திர சேகரப்பிரபு சத்தியபுரிக்கு அதிபதியா யிருக்கிறார். இவ்வளவுதான் எங்கள் பிரபுவினுடைய பூர்வ சரித்திரமென்று சம்பாதி கூறி, இராமதாசனை சீக்கிரம் ஸ்நானஞ் செய்து அநுஷ்டானம் முடித்துக்கொண்டு பிரபுவின் வீட்டிற்கு வரவேண்டுமென்று சொல்லி விரைவாக நடந்தான்.

சம்பாதி என்பவன் சத்தியபுரியின் சிற்றரசனாகிய சந்திரசேகரப் பிரபுவினுடைய வேலைக்காரர்களில் ஒருவன். இவன் இருபதுவயதுள்ள சிறுவனானாலும் நல்லபுத்திசாலி. உலகத்தை யறிந்தவன். மனிதர்களைப் பார்க்கும்போதே அவர்களுடைய கருத் தின்னதென் றுணரும் சக்தியுள்ளவன். நற்குணமும் நன்னடக்கையு முள்ளவர்களை நோக்கும் பரமநேயன். தன் எஜமானனைத் தெய்வம்போலெண்ணிச் சகல வேலைகளையுஞ் செய்யு மியல்பினன். இவனுடைய முன்னோர்கள் மகத இராஜாங்கத்தில் சேவகஞ் செய்து பிழைத்தவர்க ளாதலால் அவர்கள் மூலமாகச் சம்பாதி மகதவரசர்களுடைய சரித்திரத்தை நன்கறிந்தவன். வேலைக்காரனா யிருந்தபோதிலும் உலக நடவடிக்கையை நன்றுணர்ந்தவனாதல்பற்றி எவரெவர்களுக்கு எப்படி எப்படி நடக்கவேண்டுமோ அவை அவனுக்கு நன்றாய்த் தெரியும். அவனிடத்தில் சந்திரசேகரருக்கு அதிகப் பிரியமுண்டு. அவனுடன் பேசிக்கொண்டிருந்த இராமதாசர் என்பவர் ஓர் யாத்திரிகர். அவர் சத்தியபுரிக்கு வந்தகாலத்தில் சந்திர சேகரருக்கு விவாகம் நடக்குங் காலமா யிருந்தது. சத்தியபுரியில் வசிப்பதற்குச் சௌக்கியமா யிருந்த

தால் சிலநாள் அவர் அவ்வூரில் தங்கினர். அவர் சிறந்த பக்தரா யிருந்ததைக் கண்ட சம்பாதி அவரைத் தன் பிரபுவின் கலியாணத்திற்குக் கூட்டிக் கொண்டுபோய் உபசரித்து வந்தான்.

சத்தியபுரிக்குச் சமீபமாக இரண்டுமெயில் தூரத்தில் ஓர் காடுள்ளது. சம்பாதியும் இராமதாசரும் பம்பாநதிக் கரையின்மீது பேசிய யன்று சாயந்திரம் அந்தக் காட்டின் வழியாக ஓர் ஸ்திரீ சத்தியபுரியை நோக்கி வந்துகொண்டிருந்தாள். அவள் பார்ப்பதற்குச் சுமார் முப்பது வயது சென்றவளாய்த் தோன்றுவாள். அவள் முகத்தி னழகையும், சாதாரணமான ஓர் ஆடையைத் தரித்து அதன்மேல் துப்பட்டியால் அவள் போர்த்துக்கொண் டிருப்பதையுங் கண்டால், அவள் நல்ல அந்தஸ்தி லிருந்தவளென்றும், ஏதோ ஒரு அபாயத்திலிருந்து தப்பித்துக்கொள்ள மாறு வேஷம் பூண்டவளென்றும் விளங்கும். அவள் அடிக்கடி திரும்பிப்பார்த்துக் கொண்டும், சிறிது தூரம் மெள்ள நடந்தும், சிறிது தூரம் விரைவாக நடந்தும் வருவதை நோக்கின், யாராவது தன்னைப் பின் தொடர்ந்து துரத்திக்கொண்டு வருகிறார்களோ வென்று ஐயமுற்று அஞ்சி நடப்பவள்போலக் காணப்படுவாள். அங்கங்கே சிறிது நின்று பெருமூச்சுவிட்டு, ஆகா! தெய்வமே! இப்படியும் முடியுமாவென்று அலறும்போது கேட்டவர்கள், ஏதோ கொடிய துன்பம் அவளுக்குநேரிட்டிருக்கவேண்டுமென்று எண்ணுவார்கள். அவள் கையில் ஏதோ ஒன்றை வஸ்திரத்தால் மறைத்து ஏந்திக்கொண்டு நடந்தாள். சத்தியபுரிக்குச் சமீபமாக வரும்போது, வஸ்திரத்தைநீக்கிக் கையிலிருந்த வஸ்துவை நோக்கி, இன்னும் நித்திரை போகிறாயோ? உன்னையும் அங்கேயே கொன்றுவிடாமற் போனேனே யென்று சொல்லி அதை உடனே வஸ்திரத்தால் மூடிக்கொண்டு விரைவாக நடந்தாள். அவள் கையிலேந்திக்கொண்டு வந்

தது பன்னிரண்டு மாதஞ்சென்ற ஒரு ஆண் குழந்தை. சத்தியபுரிக்கு இன்னும் சமீபமாக வரும்போது கதிரவனும் இவளுக்கு உதவி செய்பவன்போல அஸ்தமித்து விட்டான். சிறிது இருளா யிருந்தபோதிலும், அவ்வூர் ஜனங்கள் வ்ருவதையும் போவதையுங் கண்ட அவள் அஞ்சினவளாய் கையில் மூடி வைத்திருக்கும் குழந்தையை ஏதோ ஒரு மூட்டையை எடுத்துக்கொண்டு போகிறவள்போல நடித்து நடந்தாள். ஓரிடத்தில் சிறிதுநேரம் நின்று இந்த மூட்டையை எங்கே அவிழ்ப்பேனென்று எண்ணிப் பெருமூச்செறிந்து, மறுபடியும் நடந்து அநேக வீதிகளைத் தாண்டிப் பிரபுக்கள் வசிக்கும் வீதியில் வந்துகொண்டிருக்கையில் ஓர் வீட்டில் மேளவாத்தியம் வாசிக்கக்கேட்டு, அவ்வீட்டி னருகிற்சென்று அவள் பார்த்தபோது, அது வெண்சுதை தீற்றப்பட்டு மிகவும் நன்றாய் அலங்கரிக்கப்பட்ட ஓர் பெரிய வீடாயிருந்தது. அவ்வீட்டில் கூட்டம் நிறைந்து அதிக சந்தடியா யிருப்பதைக் கண்டு அது ஒரு கலியாணவீடென்றறிந்து, இதுதான் நல்ல சமயம், இந்த வீட்டிற்புகுந்து இச்சுமையை இறக்கிவிடவேண்டுமென்று அவள் தீர்மானித்தாள். மேளவாத்தியம் நின்றது. அநேக புருஷர்களும் ஸ்திரீகளும் கும்பல் கும்பலாய் வந்து கலியாண வீட்டில் நுழைந்தார்கள். முதலில் எண்ணிய வண்ணம் அந்த ஸ்திரீயானவள் கும்பலுடன் கலந்துகொண்டு ஒருவரும் தன்னைக் கவனிக்காவண்ணம் அதிக தந்திரமாய் உட்சென்று ஜனக்கூட்ட மில்லா திருக்கு மிடத்தை நாடினாள். அச் சமயத்தில் அவ் வீட்டிலுள்ளவர்கள் மேன்மாடியில் நடக்கும் அகஸ்யத்தைக் கேட்கச் சென்றதால் சமயற் கட்டில் ஒருவரு மில்லா திருப்பதைக் கண்டு அவ்விடத்தி லிருந்த ஓர் அறையில் கையிலிருந்த குழந்தையைப் படுக்க விட்டு ஒருவருக்குந் தெரியாமல் அவள் மறுபடியும் வெளியே சென்றாள்.

மேன் மாடியில் அகஸ்யம் முடிந்து சபை கலைந்த வுடன் அநேகர் கீழிறங்கிவந்து வெளியே போயினர். சிலர் அன்றிராத்திரி போசனஞ் செய்ய அவ்விடத்திலேயே தங்கினர். அவ்வீட்டுப் பிரபுவானவர் தன் வேலைக்காரர்களில் ஒருவனைப் பார்த்து, ஹே! சம்பாதி! சீக்கிரம் போசனத்திற்கு ஏற்பாடு செய், பிரபுக்கள் காத்துக்கொண் டிருக்கிறார்கள் என்று சொன்னார். அப்படியே மகாப்பிரபோ! இதோ முடிந்தது என்று பதில் கூறிச் சம்பாதி துரிதமாக மேன் மாடியை விட்டுக் கீழிறங்கி, மூன்றாவது கட்டிற்குச் சென்று சுயம்பாகிகளுக்கு வேண்டிய உத்தரவை யளித்தான். அப்போது சுயம்பாகிகளி லொருவன் விருந்து பரிமாற அங்கு மிங்கு மோடிக்கொண் டிருக்கையில் ஓர் அறையில் நுழைந்தான். அவ்வறையில் ஓர் சிறிய குழந்தை படுத்துறங்குவதைக் கண்டு ஆச்சரியமடைந்து, இது யார் குழந்தை? இவ்விடத்தி லிருப்பானேன்? ஸ்திரீகள் இவ்விடம் வருவதில்லையே? என்று தனக்குள்ளேயே கேள்விகளைக் கேட்டுக்கொண்டு, அக் குழந்தையி னருகிற் சென்று அதனுடைய உருவத்தையும் அழகையுங் கண்டு அதிசயித்தவனாகி, அவன் எந்த வேலையாக அவ் வறையிற் சென்றானோ அதை மறந்தவனாய் வெளியே வந்து சம்பாதியினிடத்துச் சங்கதியைச் சொன்னான். அக் காலத்துத் தன்னுடன் பேசிக்கொண் டிருந்த பெரியவருடன் சம்பாதி அவ் வறைக்குட் சென்று குழந்தையைப் பார்த்து சற்று நாழிகை யொன்றும் பேசாமல் யோசித்திருந்து பிறகு, இராமதாஸரே! இக் குழந்தையைப் பார்த்தீர்களா? எவ்வளவு அழகா யிருக்கிறதென்று சொன்னான். ஆமாம். வெகு அழகாய்த்தா னிருக்கிறது, இது யாருடைய குழந்தை யென்று அவர் கேட்க, அதைத் தான் கண்டுபிடிக்க வேண்டும், எங்கள் பிரபு வீட்டில் குழந்தை யில்லை யென்று சம்பாதி சொல்ல, குழந்தையைப் பார்த்தால் இராஜ வமிசத்தைச் சேர்ந்ததென்று தோன்றுகிறது. சுமார் ஒரு வயது

இருக்கலாம். இக் குழந்தை இவ்விடத்தில் தனியே விடப் பட்டிருப்பானேன் என்றார் இராமதாசர். இன்றையதினம் இவ்விடம் வந்தவர் யாராவது தூங்கவிட்டார்களோ வென்றால், இவ்வளவு அழகான குழந்தையை தனியே சமயற் கட்டிலா விடுவார்கள்! ஒருவேளை யாராவது துஷ்டர்கள், இதன் தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல் கொண்டு வந்து நகைகளை கழற்றிக் கொண்டு இவ்விடத்தில் தனியே விட்டுப்போ யிருக்கலாமென் றெண்ணுகிறேனென்று சம் பாதி கூற, அப்படி யிருக்கலாமென்று இராமதாசரும் ஒத்துக்கொண்டனர். அக் காலத்தில் பிரபுக்கள் மேன் மாடியில் சாப்பிட்டுக்கொண் டிருந்தார்கள். ஆகவே குழந் தையி னிடத்து இராமதாசனை உட்காரச் செய்து சம் பாதி மேன்மாடிக்குச் சென்றான்.

அன்றிராத்திரி அவ்வீட்டில் அனைவரும் போசனஞ் செய்தபின்பு வீணைக்கச்சேரி நடந்தது. பிறகு சபை கலை ந்து அவரவர்கள் தத்தம் வீடு சென்றார்கள். பிரபுவின் வீட்டிற்கு வந்த பந்துக்கள் மாத்திரம் படுக்க அவ்விடத்தி லேயே தங்கினர். எல்லாரும் படுக்க சமயம் வந்துவிட்டது. அதுவரைக்கும் குழந்தையைத் தேடி யொருவரும் வர வில்லை. அவ்விடத் திருந்த இராமதாசர் ஓர் தாதியை வர வழைத்து அக் குழந்தைக்குப் பால் கொடுப்பித்தனர். பிறகு சம்பாதி அவ்விடம் வந்து, இராமதாசரே! இதெ ன்ன புதுமை! ஒருவராவது குழந்தையைத் தேடிவரவில் லையே? பிரபு பள்ளியறைக்குச் சென்றார். அவரிடத்து இந்தச்செய்தியைச்சொல்ல சமயமகப்படவில்லை. நாளையத் தினங் காலையில்தான் தெரிவிக்க வேண்டுமென்று சொல்லி, அக் குழந்தைக்குக் காவலாக ஓர் தாதியை ஏற்படுத்தி விட்டு, இராமதாசனை யழைத்துக்கொண்டு அவ்விடத்தை விட் டகன்றனன்.

மறுநாட் காலை சந்திரசேகரப் பிரபுவின் வீட்டு மேன் மாடியில் சிலர் உட்கார்ந்து பேசிக்கொண் டிருந்தனர். அவர்கள் மத்தியில் ஓர் ஸ்திரீ ஆண்குழந்தை யொன்றை இடுப்பில் வைத்துக்கொண்டு நின்றாள். சிலர் அக் குழந் தையை யருகில்வந்து பார்த்து அதிசயித்து தலை யசைத்து மூக்கின்மேல் கைவைத்தனர். சிலர் குழந்தையின் அழகை வர்ணித்தார். குழந்தையைப் பார்த்த வண்ணமே சிலர் பேசாது நின்றனர். அப்பாலகன் அழகைக் கண்டு அதை யெடுத்து அணைத்து முத்தமிட சிலர் முந்தி வந்தனர். முத்தமிட்ட சிலர் குழந்தையின் கன்னம் சிவந்ததைக் கண்டு மனந் தளர்ந்தனர். இவ் வருமையான குழந்தை யைப் பிரிந்த தாய் தந்தையர்கள் என்ன செய்வார்க ளென்று எண்ணி சிலர் மனம் நொந்தனர். இவ்வா றிருக் கையில் பேசுஞ் சத்த மடங்கிற்று. உடனே அக்குழந் தையை வைத்துக்கொண் டிருந்த ஸ்திரீயானவள் அவ்விட த்து விரித்திருந்த இரத்தின கம்பளத்தின் மீது குழந் தையை மெள்ள உட்காரவைத்துச் சிறிது தூரத்தில்போ யொதுங்கி நின்றனள். உட்கார்ந்திருந்தவர்களில் சிலர் எழு ந்து நின்றனர். அப்போது சுமார் இருபத்தைந்து வயதுள் ளவராயும், அகன்ற மார்பில் இரத்தினங்க ளிழைத்த ஆப ரணங்களையணிந்தவராயும், விசாலமான கண்களில் கருணை நிறைந்தவராயும் ஒருவர் வந்தார். அவரைக் கண்டவுடன் சம்பாதி அதிக வணக்கத்துடன் கைகூப்பி நின்று, மகாப் பிரபோ! இக்குழந்தை நேற்றிராத்திரி தங்கள் மாளிகையில் மூன்றாவது சமயற்கட்டில் ஓர் அறையில் தனியேவிடப்பட் டிருந்ததைக் கண்ட சுயம்பாகிகளில் ஒருவன் என்னிடம் சொல்ல, நானும் இராமதாசரும் போய்ப் பார்த்தோம். அப்போது குழந்தை நித்திரை செய்துகொண் டிருந்தது. இதுவரையிலும் இது இன்னாருடையதென்று ஏற்பட வில்லை. இது இன்னவிதம் இந்த மாளிகைக்கு வந்ததென் றுந் தெரியவில்லை. இந்த விஷயத்தை நேற்றிராத்திரியே

தங்களுக்குத் தெரிவிக்கச் சமய மகப்படவில்லையென்று அதிக வினயத்துடன் சொன்னான். இதைக்கேட்ட சந்திர சேகரர், இதென்ன வாச்சரியம்! என்று சொல்லி குழந்தையி னருகிற் சென்று பார்த்தார். உடனே மந்திரி சுதந்திரனை யழைத்து வரும்படி பிரபு கட்டளையிட, சம்பாதி விரைவாயோடினான். குழந்தையை நன்றாய்ப்பார்த்து பிரபுவானவர் மிகவும் அதிசயித்து, அச்சமய மவ்விடத்திருந்த இராமதாசனைப் பார்த்து, "ஐயா! பக்த சிகாமணியே! இக்குழந்தையைப் பார்த்தீர்களா? நீங்க ளென்ன நினைக்கிறீர்கள்?" என்று கேட்டார். "ஹே! பிரபோ! நேற்றிராத்திரி இக் குழந்தையைத் தங்கள் மாளிகையில் கண்டேன். யாரோ துஷ்டர்கள் சில நகைகளுக் காசைப்பட்டுக் குழந்தையை யெடுத்துக்கொண்டு வந்திருக்கவேண்டும். கோரிய நகைகள் கிடைத்தவுடன் குழந்தையை உயிருடன் தங்கள் மாளிகையில் விட்டது அதனுடைய அதிர்ஷ்டம். வேறொன்றுந் தோன்றவில்லை" யென்று இராமதாசர் கூறும்போது, காலடி சத்தங்கேட்டது. உடனே மந்திரியும் சம்பாதியும் வந்தார்கள். பிரபு மந்திரிக்குக் குழந்தையின் வரலாற்றைக் கூறி, இனிச் செய்யவேண்டிய தென்னவென்று கேட்கும்போது, அவ்வழகிய குழந்தை மெள்ளத் தவழ்ந்துபோய்த் தன் இருகரங்களாலும் சந்திரசேகரருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு நின்று, அண்ணாந்து அவரது முகத்தைப் பார்த்துச் சிறித்தது. அதை நோக்கிய பிரபு சந்தோஷங்கொண்டு, இளங் குழந்தையின் மெல்லிய கரங்கள் தன் தேகத்திற்படவும் மெய்மறந்தவராய் அக்குழந்தையி னழகைக்கண்டு மகிழ்ந்து வாரியெடுத்து மார்பிலணைத்து முத்தமிட்டனர். உடனே இராமதாசர், இக்காட்சி எனக்கு மிகவும் ஆனந்தமா யிருக்கிறதென்று கூறி நகைத்தனர். அப்போது மந்திரி, இராமதாசரே! கொஞ்சம் விவரமாகச் சொல்லவேண்டு மென, இராமதாசர், மகாப்பிரபோ! நட

ந்த விவாகத்தில் தங்களுக்கும் இரதியம்மணிக்கும் பெரி
யோர்கள் அநேக ஆசிர்வாதங்கள் செய்தார்கள். அவை
களில் தங்களுக்குச் சீக்கிரம் புத்திரசந்தானம் உண்டா
கவேண்டு மென்பதொன்று. தங்களிடத்துக் குழந்தை
தவழ்ந்துவந்து பாதங்களைப் பிடித்து நின்றதையும், உட
னே தாங்க ளதையெடுத்து முத்தமிட்டதையுங் கண்ட
போது பகவானது கிருபையால் அப்பெரியோர்கள் ஆசிர்
வாதம் அதிசீக்கிரமாய்ப் பலித்துவிட்டதென்று ஆனந்த
மடைந்தேன். பிறகு குழந்தையின் உண்மையான வரலா
ற்றை நினைத்தபோது என்ன மூடத்தனமென்று நகைத்
தேன். இதைத் தவிர வேறொன்றுமில்லையென, அதற்குச்
சுதந்திரர்,இராமதாசரே! எனக்கு வேறொருவிதமாய்த்தோ
ன்றிற்று என, அதென்னவென்று பிரபுகேட்க, மந்திரி,இக்
குழந்தை நமதுபிரபுவினுடைய பாதத்தைப் பிடித்து அவ
ரதுமுகத்தை நோக்கியதைக்காணும்போது, அதுதான்நிரா
தரவாயிருப்பதையறிந்து பிரபுவின் பாதத்தில் சரணமடை
ந்து தன்னைக் காப்பாற்றவேண்டுமென்று கெஞ்சிக் கேட்
பதுபோலும், உடனே பிரபுவானவர் அதையெடுத்து மா
ர்பி லணைத்துக்கொண்டதானது, அப்படியே காப்பாற்று
கிறேன், நீ ஒன்றுக்கு மஞ்சவேண்டாமென்று தைரியஞ்
சொல்லியதுபோலும் எனக்குத் தோன்றிற்று என்று கூறி
யதைச் செவியுற்ற பிரபு உள்ளமகிழ்ந்து, மந்திரி குறிப்
பாகக்காட்டிய வண்ணந் தான் அக்குழந்தையைக் காப்பா
ற்றவேண்டுமென்று நிச்சயித்து, மந்திரியை நோக்கி, இப்
போது என்னசெய்யலாம்? குழந்தையின் தாய் தந்தையர்
களை யெப்படிக்கண்டுபிடிப்பது? என்றுகேட்டார். சுவாமி!
நாம் எல்லாத் தேசத்தரசர்களுக்கும் தூதுவர் மூலமாகச்
செய்தியைத் தெரிவிக்கவேண்டும். அந்த இராசாக்கள் அவ
ர்கள் தேசத்தில் வீதிகள்தோறும் பறையடிக்கச்செய்து
ஜனங்களுக்குப் பகிரங்கமாய்ச் சங்கதியை யறிவிக்கவேண்
டும். இதைக்காட்டிலும் சிறந்த யுக்தியொன்றுமில்லை. இக்

குழந்தைக்குரியவர்கள் இன்னொன்று ஏற்படுகிறவரையில் தாங்களே இப்பாலகனை வளர்த்துவரவேண்டுமென்று மந்திரி கூறினர். பிறகு இராமதாசர் இது நல்லயோசனைதான் என்று தலையசைத்து, மகாப்பிரபோ! கண்டவர் மனதைக் கவரும் இவ்வழகுவாய்ந்த குழந்தைக்கு மனோகரன்என்று பெயரிடலாமோவென்று கேட்க, மந்திரியும் பிரபுவும் அப்பெயரை யங்கீகரித்தனர். மந்திரி சொல்லியவண்ணம் எல்லாத் தேசத்தரசர்களுக்கும் கடிதங்கள் அனுப்பும்படி பிரபு கட்டளையிட்டு மனோகரனைச் சௌக்கியமாய்க் காப்பாற்றுவதற்குத் தகுந்த ஏற்பாடுசெய்தார்.

## 2. மனோகரன் வேட்டையாடல்.

சத்தியபுரியிலிருந்து அநேக தூதுவர்கள் வெளிதேசத்தரசர்களுக்குக் கடிதங்கள் கொண்டு போனார்கள். சில நாள் சென்றன. ஒருவரும் குழந்தை என்னுடையதென்று வரவில்லை. சில மாதங்கள் கழிந்தன. என் குழந்தைதானிதுவென்று ஒருவராவது சொல்லவில்லை. சில வருஷங்களும் சென்றன. குழந்தைக்குரியவர்கள் இன்னாரென்று ஏற்படவில்லை. விவாகம்நடந்த இரண்டு வருஷத்திற்குள் சந்திரசேகரரின் மனைவியாகிய இரதியென்பவள் சந்திரசூடனென்னும் புதல்வனைப்பெற்றாள். புத்திரனைப்பெற்ற இரண்டு வருஷத்திற்குள் இரதியானவள் சுந்தரியென்னும் அழகுவாய்ந்த ஓர் பெண்ணையுமீன்றனள். சந்திர சேகரர் தன்னிரு குழந்தைகளையும் அருமையாய் வளர்ப்பதுபோலவே மனோகரனையும் அன்புடன் வளர்த்துவந்தார். மனோகரன், சந்திரசூடன், சுந்தரிஆகிய மூவரும் ஒரேவிதமான உணவையுண்டு, விலையுயர்ந்த வஸ்திரங்களையணிந்து, ஒரேவிதமான படுக்கையில்படுத்து எல்லாவிதத்திலும் ஏற்றக்குறைவின்றி வாழ்ந்துவரக் காண்போர்கள் மனோகரனும் சந்திரசேகரரின் புத்திரன்தானென்று நினைப்பார்கள். சந்திரசூடனும் மனோகரனும் எப்போதும் ஒன்றாய்க்கூடி விளை

யாடுவதுவழக்கம். ஒரேகாலத்தில் அவர்களிருவரும் உண்டு விளையாடி உறங்கி இணைபிரியாத சகோதரர்கள்போல வளர்ந்துவந்து, அக்ஷராப்பியாஸமானவுடன் இருவரும் நல்ல உபாத்தியாய ரிடத்துச்சென்று படித்து க்ஷத்திரிய வமிசத்திற்கேற்ப வில்வித்தை முதலானவைகளைக்கற்று வந்தார்கள். இருவரும் ஒரு உபாத்தியாயரிடத்து வித்தைகற்றாலும் ஒரே மாதிரியாகவே அவர் இவர்களுக்குப்போதித்து வந்தபோதிலும், மனோகரன் அதிகசீக்கிரமாயும் சூக்ஷமமாயும் வித்தைகளைக் கற்றுக்கொண்டபடியால் உபாத்தியாயர்க்கு அவனிடத்தில்தான் அதிகப்பிரியமுண்டு. மனோகரன் பெரியோர்களைக்கண்டால் அதிக மரியாதையுடன் விசாரித்தும், எளியோரைக்கண்டால் அவர்களுக்கு மனமிரங்கியும், மிதபாஷியாயும், சாந்தமாயுமிருந்ததால் கண்டவர்யாவரும் அவனிடத்து அன்புபாராட்டுவார்கள். அவனைக்காணும்போது எல்லாருக்கும் அவனிடம் ஏதாவது பேசவேண்டுமென்ற இஷ்டமுண்டாகும். அவனுடைய ஆழ்ந்த கருத்தையும் கூர்மையான புத்தியையும் கண்டவர்கள் அவனைவியந்து பேசாமலிரார்கள். அவன் உபாத்தியாயரிடத்துப் போய்ப்படித்து வீட்டிற்கு வந்தவுடன் தன் சகோதரி என்று எண்ணிவந்த சுந்தரிக்குத் தமிழ்பாஷை கற்பிப்பான். சுந்தரி அதிக புத்திசாலியாதலால், எடுத்த புத்தகங்களை வாசிக்கவும நன்றாய்எழுதவும் கற்றுக்கொண்டாள். அவளது தகப்பனார் அவளுக்குவீணை கற்பிக்கும்படிக்கு ஏற்பாடுசெய்தார். சுந்தரி சிலவேளைகளில் மனோகரன் சொல்லியவண்ணம் படித்தும், சிலவேளைகளில் வீணை வாசித்துங் காலத்தை இனிதாகக் கழிப்பாளேயன்றி வீணுக்கமாட்டாள். ஒருநாள் சாயந்திரம் இரதியானவள் தன் புத்திரியைப்பார்த்து, சுந்தரி! கொஞ்சம் வீணைவாசிக்கிறாயா? என்றுகேட்டாள். அம்மா! முத்தண்ணாவரும் வேளையாச்சுது. என் பாடங்களைச் சரியாகச்சொல்ல இப்போது படித்துக்கொண்டிருக்கிறேன். இராத்திரிக்குவீணை

வாசிக்கிறேனம்மாவென்று சுந்தரி பதில்கூறியதைக்கேட்ட இரதி மிகவும் ஆனந்தங்கொண்டு, படிப்புவிஷயத்தில் சுந்தரிக்கு இருக்கும் ஆசையையும், அவளுக்கு மனோகரனிடத்திருக்கும் பயத்தையுங்கண்டு வியந்து சென்றாள்.

உடனே மனோகரனும் சந்திரசூடனும் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டிற்குவந்தார்கள். மனோகரன் வந்ததைக் கண்டு சுந்தரி வழக்கம்போல் தன் புத்தகங்களை யெடுத்துக்கொண்டு அவனிடம் சென்றுநிற்க, என்ன சுந்தரி! இன்றையபாடம் நன்றாய்த்தெரியுமா? என்று மனோகரன்கேட்டான். ஆகா தெரியுமென்றுசொல்லி சுந்தரி தன் பாடங்களையெல்லாம் ஒப்பித்தாள். மனோகரன் மிகவும் சந்தோஷங்கொண்டு அதை வெளியில்காட்டாமல் புத்தகங்களைத் தள்ளிப் பார்த்துக்கொண்டிருக்கையில், முத்தண்ணு! இன்றைக்கு அம்மா என்னை வீணைவாசிக்கச்சொன்னாள், அப்போது நான் பாடம்படித்துக்கொண் டிருந்தபடியால், முத்தண்ணுவரும் வேளையாச்சுது இப்போது வீணைவாசிக்க மாட்டேனென்று சொன்னேன் என்று சுந்தரிகூறினாள். சுந்தரி! நீ அப்படிசொல்லி யிருக்கக்கூடாதுஎன்று மனோகரன் சொன்னவுடன், இல்லை முத்தண்ணு! நான் வாசிக்க மாட்டே னென்றுசொல்லி நிறுத்தவில்லை, இராத்திரிக்கு வாசிக்கிறேனென்றுசொல்லி யிருக்கிறேனென்று சுந்தரி கூற, மனோகரன், எப்போது நம்முடையதாயார் உன்னை வீணைவாசிக்கச்சொன்னாளோ அப்போதே நீவாசித்திருக்க வேண்டும். அப்படி நீ செய்திருந்தால் அம்மாவுக்கு எவ்வளவு சந்தோஷமாயிருந்திருக்கும். அவ்வாறு நீ செய்யாததால் அம்மாவுக்கு ஒருவேளை உன்னிடத்தில் அதிருப்தியுண்டாயிருக்கலாமென்று சொன்னான். நீ சொல்லுவதைப்பார்த்தால் அம்மா ஏதோ கோபித்துக்கொண் டிருப்பாளென்று நீ நினைக்கிறதாகத் தெரிகிறது. அப்படி அம்மா ஒன்றுங் கோபித்துக்கொள்ளவில்லை முத்தண்ணு! என்று

சுந்தரிசொல்ல, பிறகு அம்மா என்னசொன்னாளென்று மனோகரன்கேட்க, அதற்குச்சுந்தரி,ஒன்றும் சொல்லவில்லை சும்மாயிருந்து விட்டாள்என, சரி அதுதான் கோபமேவறென்னவேண்டுமென்று மனோகரன் சொன்னான். சுந்தரி இதைக்கேட்டவுடன், அம்மா வாய்திறந்து கோபமாகவொன்றுஞ் சொல்லவில்லையே முத்தண்ணா! நீதான் என்னென்னமோ பழி சொல்லுகிறாய். சும்மா யிருந்துவிட்டால் அது கோபமாகுமோ? நான் சொன்னது சரியென்று நினைத்துச் சும்மா யிருந்தாள் என்று சுந்தரி மறுத்துக் கூறினாள். ஓகோ! வாயால் வைதால்தான் கோபமாகுமோ என்று மனோகரன் சிறிது நகைத்துப்பேசினான். ஆமாம், முத்தண்ணா! நீ எப்போதும் என்மேலேயே பழிசுமத்துகிறது என்று சுந்தரி சிறிதுமுகஞ்சுளித்துக் கோபித்தவள்போலும் அல்லவள்போலும் சிறிது சிறித்துச் சொன்னாள். பிறகு மனோகரன் மிகுந்தபாடங்களைக் கேட்கவும் சுந்தரி சரியான சமாதானங்களைச் சொல்லிக்கொண்டிருக்கையில், சந்திரசூடன் இருவரையும் சாப்பிடக் கூப்பிட மூவருமாகச்சென்றார்கள்.

சுந்தரிக்கும் மனோகரனுக்கும் சற்றுமுன்நடந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த இரதி தன் பர்த்தாவினிடத்துச் சொல்லி மனோகரனைப் புகழ்ந்தாள். இப்படியாக மனோகரன் சந்திரசேகரப் பிரபுவின்வீட்டில் அவரது சொந்தப்பிள்ளையைப்போல்வளர்ந்துகொண்டுவந்தான். இரதியைத் தன்தாயென்றும், சந்திரசேகரரைத் தன் பிதாவென்றும், சந்திரசூடனையும் சுந்தரியையும் தன்னுடன் பிறந்தவர்களென்றும் மனோகரன் முழுநம்பிக்கையுடன் எண்ணிவந்தான். இதனாலேயே அந்தப்பிரபுவும் அவர்மனைவியும் எவ்வளவு அன்புடன் மனோகரனைக் காப்பாற்றிவந்தார்களென்று நன்றாய்விளங்குகிறது. அவ்வீட்டிலுள்ள வேலைக்காரர்களும் மனோகரனையும் சந்திரசூடனையும் ஒரே

மாதிரியாகவே பார்த்துவந்தார்கள். வேலைக்காரர்களில் சில ருக்கு மனோகரனுடைய விருத்தாந்தம் நன்றாய்த்தெரிந் திருந்தபோதிலும், அவர்கள் எப்பொழுதும் அதை வெளி யிட்டதேயில்லை. மனோகரனுக்குப் பதினெட்டுவயதாகிவிட் டது. அவன் நல்லயௌவன பருவத்தையடைந்து பார்ப் போர்மனதைக் கவரும்படியான அழகையடைந்து விளங் கினான். மனோகரன் என்னும்பெயர் அவனுக்கே தகுமென் பார் அநேகர். அவன் வீதியிற்போகும்போது அவனழகை க்கண்டு மயங்காதவர்களில்லை. அநேககன்னிகைகளும் அவ ர்கள்வீட்டில் மறைந்துநின்று சாளரத்தின்வழியாய் அவ னைக் கண்குளிரக்கண்டு அகமகிழ்வார்கள். அவன் வில்வித் தையில் அர்ச்சுனனைப்போலவும் அழகில் மன்மதனையொ த்தும் வித்தையில் பிரகஸ்பதியைப்போலவும் காணப்பட் டான். மனோகரனும் சந்திரசூடனும் அடிக்கடி வேட்டை யாடக்காட்டிற்குப்போவதுண்டு. ஒருநாள்காலை இருவருமா கச் சத்தியபுரிக்குச் சுமார்நாலைந்துமைல்தூரத்திலிருக்கும் காட்டிற்குச் சென்றார்கள். சரியானமிருகங்கள் அகப்ப டாததால் அவர்கள்காட்டில் வெகுதூரம்போகவே, அவ் விடத்தில் அவர்களைநோக்கி சிலர் அதிகவிரைவாக ஓடி வந்தார்கள். ஓடிவந்தவர்களைப் பின்தொடர்ந்து சில கரடி கள் அதிக கோபத்துடன் துரத்திக்கொண்டு வந்தன. இதைக்கண்ட சத்தியபுரி மைந்தர்கள் கையில் ஆயுதமொ ன்றுமின்றி நிராதரவாயிருந்த அந்தஜனங்களுக்கு ஒத்தா சை செய்யும்பொருட்டு, தங்கள் குதிரைகளை அதிகவிரை வாயோட்டினார்கள். கரடிக்கூட்டங்களுக்குச் சமீபத்தில்வந்து அவைகளையெல்லாம் சிறிதுநேரத்தில்கொன்று சின்னபின் னமாக்கி அம்மனிதர்களை மனோகரன் காப்பாற்றினான். இதைக்கண்ட அம்மனிதர் அவனது தைரியத்தையும் பரா க்கிரமத்தையுங்கண்டு அதிசயித்து அவனை ஸ்தோத்திரஞ் செய்தார்கள். அவன் அவர்களைநோக்கி நீங்கள்யார்? இந் தக்காட்டில் ஏன்வந்தீர்கள்? என்றுகேட்டான். சுவாமி!

நாங்களிருப்பது மகதபட்டணம், ஓர்வேலையாக சத்தியபுரிக்குவந்து திரும்பிப்போகையில் கரடிகள் எங்களைத்துரத்திவந்தன. நீங்களில்லாமற்போனால் நாங்களெல்லோரும் இக்கொடிய மிருகங்களுக்கு இரையாகிவிட்டிருப்போம் என்று ஒருவன்கூறினான். சரி, இனி நீங்கள் தைரியமாய்ப் போகலாம் என்று மனோகரன்சொல்லி அவர்களை யனுப்பிவிட்டான். சற்றுநாழிகை அக்காட்டிலேயே இங்குமங்குந்திரிந்து வேட்டையாடி இன்னும் சில துஷ்டமிருகங்களைக் கொன்றபின் அவ்விரு சகோதரர்களும் வீட்டுக்குத் திரும்பினார்கள்.

காட்டில் இவர்களைச்சந்தித்த மகதபட்டணத்துச்சனங்கள் தங்களுடைய பட்டணஞ்சென்று மனோகரனைப் புகழ்ந்துபேசினார்கள். அவனது பராக்கிரமத்தையுந் தைரியத்தையும் பிரியத்தினால் அளவுக்குமிஞ்சி மகாவீரனென்றும் மகாராசனென்றும் அவர்கள் துதித்ததைக்கேட்ட அப்பட்டணத்து மந்திரி அரசனுடன்சொன்னான். மகததேச முழுவதையும் நாம் ஆண்டுகொண்டிருக்கிறோம். நமது தேசத்திலுள்ள சிற்றரசர்களில் இச்சனங்கள் துதிக்கும் வீரன் யாரா யிருக்கலாமென்று அரசனும் மந்திரியும் ஆலோசித்து ஒன்றுந்தெரியாமல் தாங்களே அக்காட்டிற்குச்சென்று ஆளைக்கண்டுபிடிக்க வேண்டுமென்று தீர்மானித்து, மறுநாட்காலை மாறுவேஷம் பூண்டு கால்நடையாய் அவர்கள் அக்காட்டிற்குச் சென்றார்கள். அன்று வழக்கம்போல்மனோகரன்வெள்ளைக்குதிரையின்மீதும்சந்திரசூடன் ஓர்சிகப்புக்குதிரையின்மீதும் ஏறிக்கொண்டு இருவருமாக வந்தார்கள். இவர்களுக்கு முன்னமேவந்திருந்த மகதவரசனும் மந்திரியும் ஓர் தடாகத்தினருகாமையிலிருந்த ஆலவிருட்சத்தினடியில் நின்றுகொண்டிருந்தார்கள். அவ்வழியே மனோகரனும் சந்திரசூடனும் வருவதைக்கண்ட மந்திரி, அரசனைப்பார்த்து "இதோ இருவர் வருகிறார்கள். இவர்க

ளாகத்தானிருக்கலாம். ஜனங்கள் வர்ணித்தவீரன் அந்த வெள்ளைக் குதிரையின்மீது வருகிறவன்தான்போ லிருக்கிறது'' என்றுசொல்ல, அரசன், நாமிவர்களோடு இப்போது ஒன்றும் பேசவேண்டாம். இவர்கள் என்ன்செய்கிறார்களென்றுபார்ப்போமென்று சொல்லி சும்மாயிருக்க, சத்தியபுரி வீரர்களிருவரும் இவர்களைக்கடந்து சென்றார்கள். அவர்களருகில் வந்தபோது அரசனும் மந்திரியும் மனோகரனைத்தான் உற்று நோக்கினார்கள். சந்திரசூடனை அவர்கள் நன்றாகக் கவனிக்கவில்லை. "ஜனங்கள் சொல்லியது நிசந்தான்போலும். மனிதனைப் பார்க்கும்போதே தெரிகிறது'' என்று மந்திரிசொல்ல, அரசனும் தலையசைத்து, "இவன் இராசகுமாரன்தான், இதில் ஐயமில்லை. இவர்கள் இந்தமார்க்கமாய் எவ்விடத்திலிருந்து வருகிறார்கள்?'' என்று மந்திரியைக்கேட்க, "இதற்குச் சமீபத்திலிருப்பது சத்தியபுரி, அவ்வூரிலிருந்துதான் இவர்கள் வரவேண்டும்''என்றுஅவன் பதில்கூற,சத்தியபுரியில் நமக்குத் தெரியாதவர்கள் யார்? அவ்விடத்திலிருப்பது சந்திரசேகரப்பிரபு, அவருக்கு ஓர் பிள்ளையுண்டு. அவனாயிருக்கலாமோ இவன் என்று அரசன் ஐயுறும்போது, மந்திரி, "இரண்டுபேர் போகிறார்களே, பார்த்தால் இருவரும் சமானமான ஸ்திதியிலிருப்பவர்கள் போலத் தோன்றுகிறதே, இருவரும் சகோதரர்களா யிருக்கவேண்டுமென் றெண்ணுகிறேன்'' என்றான். இப்படியாக இவர்கள்பேசிக்கொண்டு, மனோகரனும் சந்திரசூடனும் சென்றமார்க்கத்தை நோக்கி மெள்ள நடந்தார்கள். செடிகளும் புதர்களும் அதிக நெருக்கமாயுள்ள விடத்தில் சத்தியபுரிவீரர்கள் ஒன்றாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் சந்திரசூடன் சிறிது பின்னால்நின்றான். அக்காலத்தில் அவனைக் காட்டுமிருகமொன்று அதிகக்கோபத்துடன் வந்தெதிர்த்தது. அதைக்கண்டுபயந்து சந்திரசூடன் ஓட அம்

மிருகமும் பின்தொடர்ந்து துரத்தக்கண்ட மனோகரன், உடனே அவ்விடத்திற்கோடிவந்து சந்திரசூடனுக்குத் தைரியமான பேச்சுகளைச் சொல்லிக்கொண்டு சிறிதும் பயமின்றி அம்மிருகத்தை எதிர்த்து தன்கையிலிருந்த ஆயுதத்தால் அதைக்கொன்றுமடித்து துண்டந்துண்டமாக்கினான். இக்காட்சியை தூரத்தில் நின்றுகொண்டு கவனித்த மகதவரசனும் மந்திரியும் அதிசயங்கொண்டு மனோகரனது தைரியத்தையும் வல்லமையுங்கண்டு மெச்சிப்பேசினார்கள். வீரன் என்றால் அவனுக்குத்தான் தகுமென்று வெள்ளைக்குதிரையின்மீதிருந்த மனோகரனைச் சுட்டிக்காட்டி மந்திரி புகழ்ந்து பேசினான். சிறிது நாழிகைக்கெல்லாம் இன்னும் நெருக்கமான காட்டிற்கு அச் சிறுவர்கள் வேட்டையாடப்போனார்கள். மகதவரசனும் மந்திரியும் அவர்கள் திரும்பிவரும்போது பேசவேண்டுமென்றுஓர்மரத்தின்கீழ்த்தங்கினார்கள். "என்னஅழகுள்ளசிறுவன், எல்லா இலட்சணங்களும் பொருந்தியபுனிதன், பெரிய அரசனுக்கிருக்கவேண்டிய சின்னங்களெல்லாம் அமையப்பெற்றஅதிககம்பீரன், இவன் இன்னானென இப்போது தெரியாவிட்டாலும் க்ஷத்திரிய வமிசத்தைச்சேர்ந்த இராசகுமாரனென்பது திண்ணம்" என்று வெள்ளைக் குதிரையின்மீதுசென்ற மனோகரனை அரசன் வியந்துபேசினான். சிகப்புக் குதிரையின்மீது சென்றவன் அவன்தம்பியாக விருக்கவேண்டுமென்று அரசன்சொல்ல, "சுவாமி! இவர்கள் அண்ணன் தம்பியாயிருந்தால் சத்தியபுரியைச் சேர்ந்தவர்களல்ல, சந்திரசேகரனுக்கு ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணுந்தாண்டு" என்று மந்திரி சொல்ல, "இக்காட்டிற்குச் சமீபமாக வேறே என்ன பட்டணமிருக்கிறது. ஜயபுரிதானே? அதுவெகுதூரம். அவ்விடத்திலிருந்து இவர்கள் வந்திருக்கமாட்டார்கள். ஜயபுரி இப்போது நம்முடைய ஆளுகையிலிருக்கிறது. அதை யாண்டுவந்த சிற்றரசன் நரேந்திரன் இறந்துபோய் சுமார் பதினாறுவருஷ மாகிறது. நரேந்திரன் தம்பி சுலோசன் சத்தியபுரியி லிருக்கி

ருன். வேறெந்த தேசத்திலிருந்தாவது இராச குமாரர்கள் சத்தியபுரிக்கு வந்திருப்பார்களோ?" என்று அரசன் கேட்க, "சுவாமி அன்னியதேசத் தரசர்களாவது அவரைச் சேர்ந்தவர்களாவது தங்களுடைய உத்தரவின்றித் தங்கள் தேசத்திற்கு வரமாட்டார்கள்." என்று மந்திரி பதில்கூற, இவ்வாறு பலவழியில்யோசித்தும் ஒருமுடிவுக்கும்வராமல் அரசனும் மந்திரியும் பேசிக்கொண்டிருக்கையில், குதிரைகள் ஓடிவரும் சப்தம்கேட்டது. மனோகரனும் சந்திரசூடனும் திரும்பிவருவதைக்கண்டு அரசனும் மந்திரியும் பேசுவதை நிறுத்தினார்கள். சத்தியபுரிவீரர்கள் இன்னும் சமீபமாக வந்தார்கள். அதிக சமீபத்தில் வரும்போது மந்திரி அவர்களைநோக்கி, அருமைநேயர்களே! நீங்கள் யார்? என்றுகேட்டான்.

சந்திர:—"நாங்கள் சத்தியபுரி சந்திரசேகரப் பிரபுவினுடைய புத்திரர்கள்." என்று கம்பீரமான தொனியுடன் பதில் கூறினான்.

மந்:—"சந்திரசேகரப் பிரபுவுக்கு எத்தனை குமாரர்கள்?"

சந்:—"நாங்களிரண்டுபேர்கள்."

மந்:—"அவருக்கு ஒருபிள்ளையும் ஒரு பெண்ணுந்தானே?"

சந்:—"இல்லை, இரண்டு பிள்ளைகளும் ஒருபெண்ணும்."

மந்:—"உங்கள் பெயரென்ன?"

சந்:—"என்பெயர் சந்திரசூடன், என் பக்கத்திலிருக்கும் என் தமயன்பெயர் மனோகரன்."

மந்:—"சந்திரசேகரப்பிரபு சௌக்கியமா?"

சந்:—"ஆகா! சௌக்கியமே, நீங்கள் யார்?"

மந்:—"நாங்கள் மகதபட்டணத்திலிருக்கும் வியாபாரிகள். இன்றையத்தினம் ஒருவேலையுமில்லை. இக்காட்டைச் சுற்றிப்பார்க்கலாமென்று வந்தோம்."

இச்சமயத்தில் மனோகரன் சந்திரசூடனைநோக்கி, இவர்கள்நிஜமாக வியாபாரிகள் தானா? கேள்என்று சொன்னான். இதைக்கேட்ட மந்திரி, சந்திரசூடன் அந்தக் கேள்வியைக் கேட்குமுன்னமே மனோகரனைப்பார்த்து, "ஆம் நிஜமாக நாங்கள் வியாபாரிகள் தான்" என்றுசொன்னான்.

மனோ."நீங்கள் வியாபாரிகள் அல்லவென்று நினைக்கிறேன்."

மந்:—"அதற்கென்னகாரணம்.?"

மனோ:—"உங்கள்பேச்சும் முகமுமே."

இதைக்கேட்டவுடன் அரசன் அதிசயித்து சிறிது புன்னகைசெய்தார்.

மந்:—"எங்கள் பேச்சும் முகமும் எங்களை யார் என்று தெரிவிக்கிறது?"

மனோ:—"நீங்கள் வியாபாரிகளல்ல வென்று தெரிவிக்கிறது. சற்றுமுன்னமே நான் நீங்கள் வியாபாரிக ளல்ல வென்று சொன்னபோது, உங்கள்பக்கத்திலிருப்பவருடைய (அரசனுடைய) முகம்மாறியது. அம்மாறுதலானது நான் சொல்லியதைச் சரியென்றுகாட்டியது."இதைச்சொன்னவுடன் மனோகரனுடையபுத்திகூர்மைக்கு மந்திரி அதிசயித்து மறுபடியுங்கேட்கிறான்.

மந்:—"வியாபாரிகளல்லவென்றால், நாங்கள் யார்?"

மனோ:—"நீங்கள்யாரென்று சொல்லுவது எனக்கொரு கஷ்டமல்ல. நீங்கள் ஏதோ ஒரு காரணத்திற்காக உங்களை மறைத்துச்சொல்லி எங்களை ஏமாற்றிவிடப் பார்த்தீர்கள். எங்களை ஏமாற்றிவிடுவது சுலபமலலவென்பதை மாத்திரங் காண்பிக்க நீங்கள் வியாபாரிக ளல்லவென்றேன். அது போதும். அதற்குமேல் உங்களை யின்னாரென்றுசொல்லி உங்களுடைய எண்ணத்தைக்கெடுக்க எனக்கிஷ்டமில்லை. அது நியாயமுமன்று." இதுவரைக்கும் சும்மாயிருந்த மக

தவரசன் மனோகரன் பேசியதைக்கேட்டவுடன் அவனு டையபுத்தித் தெளிவையும் வரம்புகடவாத மரியாதையுங் கண்டு சந்தோஷங்கொண்டு அவனைநோக்கிப் பின்வருமாறு கேட்கிறார்.

அர:—"ஹே! மனோகரப்பிரபோ? நாங்கள் யார்தான் சொல்லுங்கள்பார்ப்போம்.?"

மனோ:—"நீங்கள் போட்டிருப்பதுவேஷம். அது இன் னகாரணத்திற்காக வென்பது எனக்குத்தெரியாது. நீங்க ளின்னாரென்று உங்கள் ஊர்பெயருடன் சொல்லவல்லவன ல்ல. ஆனால் ஒருவாறு உங்கள் ஜாதியையும் தொழிலையும் சொல்லுவேன்."

அர:—"அதைச்சொன்னால் போதுமானது."

மனோ:—"நீங்கள் க்ஷத்திரிய வமிசத்தைச் சேர்ந்தவர் கள். பெரிய இராஜாங்கத்தை நடத்துபவர்கள். இதுவரைக் கும் எனக்குச் சந்தேகமில்லை. இனி எந்த இராஜாங்கம்? உ ங்கள் பெயரென்னவென்றால் என்னால் சொல்லமுடியாது." இதைக்கேட்டமந்திரி இனி அதிகமாய்மனோகரனிடத்துப் பேசுவது மோசமாய்முடியுமென்றெண்ணிஅரசனைப்பார்த் து அரசர்களுக்குயாரைக்கண்டாலும்அரசர்கள்போலத்தா ன்தோன்றுமாக்கும். இதென்ன நியாயமென்று சில அர் த்தமில்லாத வார்த்தைகளைச்சொல்லி, மனோகரனைப் பார்த் து, "நாங்கள் க்ஷத்திரியர்களுமல்ல, இராஜாக்களுமல்ல, நா ழிகையாகிறது, நீங்கள்போகலாம். உண்மையில் நாங்கள் வியாபாரிகளே! உங்களை இத்தனைநேரம் நிறுத்திவைத்த தற்கு எங்களை மன்னிக்கவேண்டும்" என்றுசொன்னான்.

மனோ:—"இன்னும் நீங்கள் உங்கள்வேஷத்தையே ஸ் தாபிக்கிறீர்கள். வேண்டுமானால் உங்களை இன்னாரென்று ஊர்பெயருடன் உங்கள்வாயிலிருந்தே வரவழைப்பேன். இ ந்தவேஷம் எங்கள் நிமித்தம்போட்டீர்களோ அல்லவோ

வென்றுசந்தேகமிருப்பதால்உங்களைச் சும்மாவிடுத்தேன்'' என்று கோபித்தவன்போல் நடித்துச் சொல்லும்போது அவன் வலதுகையானது இடுப்பில்கட்டித்தொங்கும் வாளாயுதத்தைக்கிட்டியது.

மனோகரன் பேசியதையறிந்த மந்திரி தங்கள் நிலைமையை யறிந்து பேசாது சும்மாயிருக்க, அவ்விரு சகோதரர்களும் தங்கள் குதிரைகளைத் தட்டிவிட்டார்கள். சத்தியபுரிக்கருகாமையில்போய்க் கொண்டிருக்கும்போது சந்திரசூடன், மனோகரனைநோக்கி, "ஏன் அண்ணா! அவர்களிடத்து அவ்வளவு கோபம்வந்தது?'' என்று கேட்டான்.

"அவர்கள் தங்களை மறைத்துச் சொல்வானேன்? நம்மிடத்தில் ஏதோ சூதுசெய்ய நினைத்திருப்பார்கள். நாம் அப்படி ஏமாந்துபோகிறவர்க ளல்லவென்று காண்பித்துவிட்டால் அதன்மேல் அவர்கள் பிரயத்தினம் அவலமாய்ப் போய்விடும். ஒருமனிதன் நம்மை கேள்விகள் கேட்கும் போது எந்தக்கருத்துடன் கேட்கிறானென்று நாம்அறிந்த பின்னரே அம்மனிதனுக்குப் பதில்சொல்லவேண்டும். இந் நியாயத்தை நீ ஞாபகம்வைக்கவேண்டும் சந்திரசூடா'' என்று மனோகரன்பதிலளிக்க, "ஆமாம், நான்கூடமுதலில் அவர்களைக்குறித்து சந்தேகங்கொண்டேன். ஆனால் அவர்கள் ஏதோ கேள்விகள் கேட்கவே அதற்குப் பதில்சொல்லுவதில்மறந்தேன்'' என்று சந்திரசூடன் சொன்னான். "என்ன அவர்கள் தர்க்கநியாய சாஸ்திரங்களைக் கேட்டுவிட்டது? அதற்குத் தீர்க்கமாய் ஆலோசித்து சரியானபதில் சொல்லுவதில் அவர்களிடத்துவந்த சந்தேகங்களை மறந்துவிட்டாய். எனக்கு நீ சொல்லுவது ஒன்றுந் தெரியவில்லை. நான் அநேகதரம் உனக்கு சொல்லியிருக்கிறேன் சந்திரசூடா, நீ அதை மறந்துவிடுகிறாய். யார் என்ன கேள்வி கேட்டாலும் யோசித்துத்தான் பதில் சொல்லவேண்டும். யோசிப்பதில் அதிக தாமதமுங்கூடாது. மரியாதைக்குக்

குறைவில்லாமல் உடனே பதிலும் சொல்லவேண்டும். நம்மையுங் காப்பாற்றிக் கொள்ளவேண்டும்.'' என்று மனோகரன் சொல்லிக்கொண்டுபோகையில் சத்தியபுரிக்கு வந்து சேர்ந்தார்கள்.

அன்றையதினம் போசனஞ்செய்தபிறகு மனோகரன் தனியே ஓர் அறையில் படுத்துக்கொண்டிருந்தான். அன்று காலைகாட்டில் இருவர்பேசியதை மறுபடியும் யோசிக்கலானான். அவர்கள்வேஷம் போட்டிருந்த போதிலும் நல்ல விவேகிகளாகிய க்ஷத்திரியர்களே யாவார்கள். அவர்கள் நமது பிதா சந்திரசேகரப்பிரபுவை நன்றாய்த் தெரிந்தவர்கள்போலக் காண்கிறது. நமது பிதாவுக்கு ஒருபிள்ளையும் ஒரு பெண்ணுந்தானேயென்று ஏன் கேட்க வேண்டும்? இதில் ஏதோ இரகசியமிருக்கிறது. இதேமாதிரியாக முன்னொருநாள் சத்தியபுரியிலேயே கேள்விப்பட்டேன். இந்தச் சங்கதியின்னதென்று நான் கூடியசீக்கிரத்தி லறியவேண்டும். இவ்விடத்திற்கு அடிக்கடி வருகின்ற இராமதாசர் நம்மிடத்து அதிகப் பிரியமாகவிருக்கிறார். அவர் பழைய கதைகளெல்லாம் அடிக்கடிசொல்லுகிறார். அவர் எல்லாந் தெரிந்தவர். அவரைத்தான் கேட்கவேண்டும் என்று எண்ணினான். உடனே சம்பாதி என்னும் வேலைக்காரன் மனோகரனிருக்கும் அறைக்குவந்து ஐயா! இன்றைக்கேன் தாங்கள் குருவினிடத்து படிக்கப்போகவில்லை? உங்கள் தம்பியார்மாத்திரம்போனாரே'' என்று கேட்டான். "இன்றையத்தினம்வேட்டையாடிவந்தேன் எனக்குதேகம் சிறிதுசௌக்கியமாயில்லை யாதலால் நான்போகவில்லை'' என்று மனோகரன் பதில்கூறி, சம்பாதி இவ்வரண்மனையில் நெடுநாளாயிருக்கிறவன், இவனைக்கேட்கலாமாவென்று யோசித்தான். இதை யறிந்த சம்பாதி "ஐயா! நீங்களென்னமோ யோசிக்கிறப்போ லிருக்கிறது? அந்த யோசனையானது தங்கள் மனதை வேறெந்தவேலையிலும் போகவிடவில்லை யெனவும்

அறிகிறேன். ஏதாவது அப்படியுண்டா?" என்றுகேட்க, மனோகரன் " நீசொல்லியது உண்மையேசம்பாதி, நான் உன்னை ஒருவிஷயம் கேட்கப்போகிறேன். அதற்கு உண்மையான பதில்சொல்லவேண்டும்" என்றுசொன்னான்.

மனோ:—"உன்னுடைய சந்திரசேகரப் பிரபுவுக்கு எத்தனைகுமாரர்கள்? எத்தனைபெண்கள்?"

சம்:—"இதுதானா? நீங்கள் என்னமோ கேட்கப்போகிறீர்களென்றிருந்தேனே, இது உங்களுக்குத் தெரியாதோ? இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணுந்தான்."

மனோ:—"இது எனக்குத் தெரிந்தவிஷயமே, ஆனால் சில சனங்கள் ஒருபிள்ளையும் ஒரு பெண்ணுந்தானுண்டு என்று சொல்ல நான்கேட்டேன். அதிலென்னவோ இரகசிய மிருக்கவேண்டும். நீ அதை எனக்குச்சொல்லவேண்டும்."

சம்:—"எனக்குத்தெரிந்தவிஷயத்தை உங்களுக்குச்சொல்லவேண்டியது என் கடமையாயினும் சந்திரசேகரப்பிரபுவின் கட்டளைப்படி நான் நடந்துகொள்ள வேண்டியது என் பெருங்கடமையா யிருக்கிறதே."

மனோ:—"ஹே சம்பாதி! நீ என்னிடத்தில் எதையும் பயமின்றிச் சொல்லலாம். அதனால் உனக்கு ஒரு தீங்கும் வராது. உடனே சங்கதியைச்சொல்."

சம்:—"அப்படியல்ல. பிரபுவின் உத்தரவுகடந்து நான் இதுவரைக்கும் நடந்ததில்லை. ஆனால் நான் ஒன்று சொல்லுகிறேன். பம்பாநதிக் கரையோரமாய் ஒரு சிறிய தோட்டமிருக்கிறது. அதிலுள்ளபேர்வழி உங்களுக்கு இந்த விஷயத்தைச் சொல்லலாம்."

மனோ:—"இராமதாசர்தானே?"

சம்:—"ஆமாம்."

மனோ:—"அதை நான் முன்னமே யோசித்திருக்கிறேன். சரி, நீ சொல்லாமற்போகிறாய்" என்றுசொல்லி சம்பாதியின் குணாதிசயத்திற்குச் சந்தோஷப்பட்டு அவனுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டான்.

அன்று சாயந்திரம் பம்பாநதியைநோக்கி மனோகரன் தனியே சென்றான். அவ்வாற்றின் பக்கமாயுள்ள சிறிய தோட்டத்தில் ஒருபெரியவர் உலாவிக் கொண்டிருந்தார். மனோகரன் அத்தோட்டத்திற் குட்சென்று அப்பெரியவரை நமஸ்கரித்துநின்றான். பெரியவரும் உடனே அவனை அதிக மரியாதையுட னழைத்துக்கொண்டுபோய் ஓர் ஆசனத்திலிருத்தி தானும் எதிரே உட்கார்ந்துகொண்டு அவனுடைய க்ஷேமத்தை விசாரித்துப்பேச வாரம்பித்தார்.

## 3. சந்திரசேகரரும் இராமதாசரும்.

சிலநாள் சென்றபின் சந்திரசேகரப்பிரபு தன் அரண்மனையில் மந்திரியுடன் பேசிக்கொண்டிருக்கையில், மகதவாசனிடத்திலிருந்து ஓர் கடிதம்வந்தது. அதைப்பிரபு படித்துக்கொண்டு வரும்போது அவரதுமுகம் திடீரென்று மாறுதலையடைந்து, முதலில் சிறிது விசனத்தையும் பிறகு கோபத்தையுங் காட்டியது. கடிதத்தைப் படித்தவுடன் இவர்கள் வழக்கமிதுதா னெப்போது மென்றுசொல்லி அதை மந்திரியினிடத்துக் கொடுத்தார். மந்திரி அதை முழுவதும்படித்துப் பிரபுவினுடையகோபத்திற்குத் தக்க காரணமிருக்கிறதென்று அறிந்தார். பிரபு சிறிது நேரம் சும்மாயிருந்து பிறகு மந்திரியைநோக்கி, காரணமில்லாமல் அரசன் இப்படிச் செய்வது நியாயமாவென்றார். அதற்குமந்திரி, "இந்த அரசன் எப்போதும் இப்படித் தான் செய்கிறான். அரசனிட்டது சட்டமென வெண்ணி

யிருக்கிறான். காரணமிராது நியாயமிராது. மனதில் தோன்றியபடி செய்கிறாப்போலக் காண்கிறது. காரணம் பின்னால் சொல்லப்படுமாம். அது எப்போதோ? ஊரையெல்லாம் பிடித்துக்கொண்டு நிராதரவாக்கியபிறகோ?" என்று கடிந்துபேசினார். "அரசனுக்குப் பலமிருக்கிறதென்று தர்மத்தைக் கைசோரவிட்டு அதர்மத்தை நடத்துகிறான். இவனது தேசத்தில் ஓர் சிற்றரசனா யிருப்பதைக்காட்டிலும் ஒரு ஏழைக்குடியாயிருப்பதுநலம். மந்திரி! இப்போது நாமென்ன பதில் எழுதுவது?" என்று பிரபுகேட்க, "சுவாமி! ஒரு நியாயமுமில்லாமல் தங்களைச் சத்தியபுரியை விட்டு இருநூறு மயிலுக்கப்பால் மகததேசத்தின் எல்லையோரமாகப்போய் வசிக்கும்படி கட்டளையனுப்பப்பட்டிருக்கிறது. நியாயம் பிறகு சொல்லப்படுமாம். நமக்குத்தெரிந்தவரையில் ஊரைவிட்டு ஓட்டுவதற்கு ஒருகாரணமுமில்லை. அரசனது சைன்னியபலமும் மனத்தூய்மையில்லா, மந்திரிகளின் துர்ப்போதனையுமே இச்செய்கைக்குக் காரணம். அரசன் என்னநினைத்தாலும் அதைச்செய்ய வலியுள்ளவனா யிருக்கிறான். அப்படியிருக்க, சத்தியபுரியை விட்டு வேறிடத்திற்போய் வசிக்கும்போது பிரபுவென்னும் பட்டத்தை யிழக்கமாட்டேர்களாம். வருஷத்திற் கிவ்வளவென்று தங்களுடைய செலவிற்குக் கொடுக்கப்படுமாம். இந்த ஏற்பாடு அரசன்செய்தது நம்முடைய அதிர்ஷ்டமே. அரசனது கட்டளை யெப்படி யிருந்தாலும் அதன்படி நடப்பது நம்முடையகடமை. ஆகையால் நாமிப்போது பதில் எழுதவேண்டிய தெப்படியெனில், அரசனது ஆக்கினைக்கு விரோதமாக ஒன்றுஞ் செய்யவல்லோம். கட்டளைப்பிரகாரம் குறித்தகாலத்திற்குள் சத்தியபுரியைவிட்டு நீங்குவோம். எவ்வூரில்போய் வசிப்போமோ யதை பிறகு தெரியப்படுத்துவோமென்று சுருக்கமாய்ப் பதிலெழுதவேண்டும்" என்று மந்திரி சொன்னதற்குப் பிரபுவிசைந்து அவ்வாறே கடிதமொன்று எழுதிவிட உத்தரவளித்தனர்.

பிறகு பிரபுவும் மந்திரியும் நெடுநேரம்வரைக்கும் அரசனிவ்வாறு கட்டளையிடுவதற்கென்ன காரண மிருக்குமென்றுலோசித்து, மகததேசத்தி னெல்லையோரமாக 'விருக்கும் அநேக ஊர்களிலெந்த ஊருக்குப்போவதென்று ஆராய்ந்து, அதைக்குறித்து அன்றையதினம் ஓர்தீர்மானமுஞ் செய்யாமல் மறுநாள் யோசிப்போமென்று தீர்மானித்து அவர்கள் பேசியிருந்த விடத்தைவிட் டகன்றனர். அரசனது ஆக்கினை கிடைத்தபின்பு பிரபு மனக்கவலையுற்றார். இதன் காரணத்தையறிந்த அவர்மனைவி இரதியும் மனம் நொந்தனள். தாய் தந்தையர்கள் மனக்கிலேச மடைந்திருப்பதையறிந்த சுந்தரியும் சந்திரசூடனும் காரணமின்னதென்றறிய ஆவல்கொண்டனர். ஒருநாள்காலை இவர்கள் அரண்மனை மேன்மாடியி லோர் அறையில் பேசிக்கொண்டிருந்தார்கள். "ஏன் அண்ணா! நம்முடைய அரண்மனை யிப்படியொளிகுன்றி யிருக்கிறதே? இரண்டுநாளாக நம்முடைய அப்பாவும் மந்திரியும் அதிக கவலையுடன் ஏதோ யோசித்துக்கொண் டிருக்கிறார்கள். பட்டணத்து விசாரணை நடக்கவில்லை. நம்முடைய அம்மாவும் விசனங்கொண்டிருக்கிறாள். அவள் முகமும் வாடியிருக்கிறது. என் சகிகள், சுபாங்கனை, சுநந்தை இருவரும் அம்மா தனியே யுட்கார்ந்து சிறிது கண்ணீர்விட்டுப் புலம்பினதைக்கண்டு, அவர்களருகிற்சென்று காரணங்கேட்டதற்கு ஒன்றுஞ் சொல்லவில்லையாம். நமது அப்பாவும் அம்மாவும் இவ்வாறிருக்க, முத்தண்ணாவெனக்கிப்போதுபாடஞ்சொல்லுவதில்லை. அவர் தன் அறையைவிட்டு வெளியேவருவதுமில்லை. நாமெல்லாரும் உட்கார்ந்து சாப்பிடும்போது முத்தண்ணா எவ்வளவு வேடிக்கையாகப் பேசுவது வழக்கம். இப்போது அவர் தனியே சாப்பிடவருகிறார். அவரும் ஏதோ சதா சிந்தித்துக்கொண் டிருக்கிறார். இவர்களெல்லா மிப்படியிருக்கக் காரணமென்ன?'' என்று சுந்தரிகேட்டாள். அதற்குச்

சந்திரசூடன், "சுந்தரி! நம்முடைய தாய் தந்தையர்களில்
மாறிருப்பதை நானுங்கவனித்தேன். இதைக்குறித்து மந்
திரியைக் கேட்கலாமென் றெண்ணியிருக்கிறேன். மனோ
கரன் சங்கதி எனக்குத்தெரியும். இதுவரைக்கும் அவனை
நம்முடைய சகோதரனென் றெண்ணியிருந்தோம். அவ
னும் நம்மையப்படியே நினைத்திருந்தான். இப்போது
அவனை நம்முடைய சகோதர னல்லவென்று நீ தெரிந்து
கொள்ளவேண்டும்" என்று சொல்லும்போது சுந்தரி திடு
க்கிட்டு, அதிக வாச்சரியங்கொண்டு, "என்ன சொன்னாய்
அண்ணா? மனோகரன் நம்முடைய சகோதரனல்லவா? நீ
சொல்லியது எனக்குத் தெரியவில்லை" என்றாள். "நிச்சய
மாய் மனோகரன் நம்முடைய சகோதரனல்ல. அவனையின்
னானென்று யாருமறியார்கள். இளங் குழந்தையாயிருக்
கும்போது அவனையாரோ நமது அரண்மனையில் கொண்டு
வந்து விட்டுப்போனார்களாம். அன்றுமுதல் அவன் இவ்
விடத்திலேயே வளர்ந்து வருகிறானாம். இது காறும் அவன்
தன்னை இவ்வீட்டு மூத்தப்பிள்ளையென் றெண்ணியிருந்
தான். இப்போது அவனுக்குத் தன்வரலாறு தெரிந்து
விட்டபடியால் விசனமுற் றிருக்கிறான்." என்று சந்திர
சூடன்சொல்ல, "என்ன அண்ணா! உண்மைதானோ? நான்
இதை நம்பமுடியவில்லையே, வேடிக்கையாக யாராவதுகூறி
னார்களோ?" என்று சுந்தரிகேட்க, "இல்லை, சுந்தரி! இது
நிச்சயந்தான், மனோகரன் என்னகுழந்தையா வேடிக்கை
செய்வதற்கு? நமது அரண்மனைக்கு வந்துகொண்டிருக்கிற
இராமதாசரே அவனுக்குச் சொல்லியிருக்கிறார். நம்மு
டைய சம்பாதிக்கு இவையெல்லாம் நன்றாய்த்தெரியுமாம்"
என்று சந்திரசூடன், தான் சம்பாதியினிடத்து அறிந்த
விஷயத்தையும், முன்னொருநாள் தானும் மனோகரனும் வே
ட்டையாடப்போனகாலத்து மாறுவேஷம்பூண்டுவந்த இர
ண்டு க்ஷத்திரியப் பிரபுக்கள் தங்களைக்கேட்ட கேள்விகளை
யும் சுந்தரி விரும்பும்படியாக விவரமாகக்கூறினான். "மனோகரன்

சொந்தப்பிள்ளையல்லாமற்போனால் நம்முடையதாய்தந்தையர்கள் அவருக்கு நல்லஉடையும் உண்டியுங்கொடுத்து நம்மைப்போலவே அன்புடன் காப்பாற்றுவார்களோ? அவருக்குக் குதிரையென்ன! வண்டியென்ன! வித்தைகற்கச் சிலவென்ன! இவையெல்லாங் கொடுப்பார்களா? நீ சொல்லியதை நான் நம்பமாட்டேன் அண்ணா! நான் அம்மாவைக் கேட்கிறேன். இன்னொரு சங்கதியண்ணா! மனோகரன் பார்ப்பதற்கு நம்முடைய க்ஷத்திரியவமிசத்தில் பிறந்தவரைப் போலவே அழகுள்ளவராயும் மனோதைரிய முள்ளவராயுமிருக்கிறார். இவ்வளவு இலட்சணம்பொருந்திய பிள்ளையை யார்தான் பிரியத்துணிவார்கள்? ஆனால் இராமதாசர் பொய்சொல்லுகிறவரல்ல. அவர்கூறியது உண்மையாயிருக்கலாம். இப்போது எனக்கொரு சந்தேகம் வந்துவிட்டது அண்ணா! நான் இந்தவீட்டுப்பெண்தானோ? அல்லது என்னையும் யாராவது கொண்டுவந்து விட்டார்களோ? என்று சுந்தரிகேட்க, அதற்குச்சந்திரசூடன், "நல்லகேள்வி சுந்தரி! உன்னைப்பற்றிச் சந்தேகிக்கவேண்டாம்" என, "அதுசரிதான், நீ என் சகோதரன்தானோ?" என்று சுந்தரிவினவ, "ஆம் இதிலுஞ் சந்தேகமில்லை. எல்லாம் சம்பாதி எனக்குச் சொல்லியிருக்கிறான். இதை ருசுப்படுத்த இன்னொரு வழியுண்டு. நம்மிருவருக்குந்தான் ஜாதகம் குறிக்கப்பட்டிருக்கிறது. அதில் என்னைத்தான் முதல்பிள்ளையாகக் கண்டிருக்கிறது. மனோகரனுக்கு ஜாதகமேயில்லை. இதனாலேயே உன் சந்தேகமெல்லாம் ஒழியவேண்டும்" என்று சந்திரசூடன் சுந்தரியின்சந்தேகத்தை யொருவாறு நீக்கினான். பிறகு சுந்தரி, "அண்ணா! நம்முடைய தாய் தந்தையர்களுடைய விசனத்திற்குக் காரணங் கண்டறிவதெப்படி?" என்றுகேட்க, அதற்குச் சந்திரசூடன், "சுந்தரி! அதைத்தான் நாம்முக்கியமாய் அறியவேண்டும். அவர்களையே நேராகக்கேட்பது அவ்வளவு நன்றாகத் தோன்றவில்லை. ஒருவேளை அவர்கள் நமக்குச் சரியானபதிலும்

சொல்லமாட்டார்கள். நான் மந்திரியைக் கேட்பதாக உத்தேசித்திருந்தேன். அதுவும் சரியாகயில்லை. எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது. இங்குவந்து கொண்டிருக்கும் இராமதாசரின் மூலமாக சங்கதியை யறியவேண்டும்'' என்று கூறினான். இதைக்கேட்ட சுந்தரி, "அது நல்லயுக்திதான். ஆனால் இராமதாசர் இவ்விடம்வந்து பத்துநாளாகிறது. அவருக்கு இந்தச்சங்கதி யின்னும்தெரிந்திராது. ஆதலால் நீ அவரைக்கண்டு, நமது அன்னையும் பிதாவுமிருக்கிற மாதிரியைச்சொல்லி, அவரை யிவ்விடம்வந்து நமது பிதாவை விசாரிக்கும்படி செய்துவிடு. அவருக்கு அப்பா சங்கதியைச்சொல்வார். அச்சமயத்தில் நாம் காரணத்தையறியவேண்டும்'' என்றாள். "இது நல்லயுக்தி. நான் அப்படியே செய்கிறேன்'' என்று சந்திரசூடன் இராமதாசரிடத்துச் சென்றான். பிறகு சுந்தரி மேன்மாடியில் ஏதோ ஒரு புத்தகத்தைப்படிக்க வாரம்பித்தாள்.

சந்திரசூடனும் சுந்தரியும் மேன்மாடியில் பேசிக்கொண்டிருந்த அன்று சாயந்திரம் மனோகரன் தன் அறையின் கதவை மூடிக்கொண்டு உள்ளே யுட்காரந்து யோசிக்கலானான். "என்ன ஆச்சரியமான சங்கதி! நமக்குத் தாய்தந்தை யாரென்று தெரியவில்லை. நமக்கு மாத்திரமல்ல, இந்த ஊரிலுள்ளவர்களுக்குந் தெரியக்காணோம், இது ஓர் விந்தையே! எல்லாத்தேசத் தரசர்களுக்கும் கடிதங்களெழுதி பறையடிக்க விட்டார்களாம். அக்காலத்தில் பத்துமாதஞ் சுமந்துபெற்றெடுத்த எனது தாய் உயிருடனிருந்திருப்பின் சும்மா யிருந்திருப்பாளா? தாயிறந்திருப்பினும் தந்தையென்பானொருவன் பிழைத்திருந்தால் பிள்ளையைத் தேடியிரானோ? தாய்தந்தை யிருவரும் மரித்திருப்பினும் தன்னூரவினனென்றுதேட ஒருபந்துவுமின்றி என் சுற்றத்தாரெல்லாம் ஒருமிக்க ஒழிந்தனரோ? எல்லாரையுமிழந்த என்னை ஆதரவுடன் அருமையாய்வளர்த்துவந்த சந்திரசேகரப்பிர

புவுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். இப்போது எனக்கு பதினெட்டு வயதாகிவிட்டது. இனி இவர் வீட்டிலிருப்பது நியாயமா? உலகத்தையறிந்து பிழைக்க வழிதேடவேண்டிய சமயம் வந்தபின்னும் இனுமாய் ஒருவர்வீட்டில் சாப்பிட்டுவருவது ஓர் ஆண்மகனுக்கழகோ? ஆகையால் கூடிய சீக்கிரத்தில் பிரபுவுடைய வுத்தரவுபெற்றுக்கொண்டு வேறு தேசத்திற்குப்போய் பிழைப்பேன். குழந்தைப்பருவமுதல் இதுகாறும் தாய் தந்தையில்லாத எனக்கு மிக்கவன்புடன்வளர்க்க அன்னையும் பிதாவையுமேற்படுத்திய ஜகதீசன் கருணைக்கிணையுமுண்டோ? இதுகாறும் காப்பாற்றிய எங்கருணைப்பிரான் இனிக்காவாது விடுவனோ? நான் ஏன் சிந்திக்கவேண்டும்? இராமதாசர் சொல்லியது நல்லயுக்தி. "சென்றதைக் கருதவேண்டாம். நாளைச்சேர்வதை நினைக்கவேண்டாம். இன்றுநடப்பதை ஈசன்செயலெனக்கண்டினிது வாழ்ந்திடுக." வென்று அவர் அன்புடன் உபதேசித்ததை நான் மறவேன். எல்லாம் ஈசன் செயல், அவனன்றி யோரணுவுமசையாது. நமக்கென்ன தொழில்? நமக்கேன்கவலை?" என்றிவ்வாறு மனோகரன் தன்னைப்பற்றியும் தானின்னது செய்யவேண்டு மென்பதை குறித்தும் நினைத்துக்கொண்டிருந்து, அஸ்தமனவேளையானபடியால் சற்றுவெளியே போய்வருவோமென்று கதவைத்திறந்தான்.

என்னப்பா! பிரபு எங்கே யிருக்கிறாரென்று அப்போது அங்கேவந்த இராமதாசர் மனோகரனைக்கேட்க, அதற்கு அவன், மேன்மாடியில் கொலுமண்டபத்தி லிருக்கிறாரென்றுசொல்ல, இராமபக்தர் பிரபுவினிடத்துச் சென்றார். அவரைக்கண்டவுடன் பிரபு, "வாருங்கள் இராமதாசரே! ஏது இந்தப்பக்கம் வருகிறதேயில்லை" என்றார். "பத்துநாளாக தேகம் அசௌக்கியமாயிருந்ததால் வரவில்லை" என்று பக்தர்கூற, "இப்போது எப்படியிருக்கி

றது. சுகந்தானா?" என்று பிரபுகேட்க, "ஆகாசுகமே, அதனால்தான் வெளியேவந்தேன்" என்று பக்தர்சொன்னார். பிறகு பிரபு மேலேயொன்றுங் கேட்காமல் கவலையுற்றுப் பேசாமலிருந்தார். சந்திரசூடன் கேட்டுக்கொண்ட வண்ணம் பிரபுவின் மனக்கவலை யின்னதென்றறியவந்த இராமதாசர் பிரபுவை யென்னகேட்பதென்று ஆலோசிக்கலானார். சிறிதுநேரம் இருவரும் மௌனமா யிருந்தனர். பிறகு தைரியங்கொண்டு பக்தர், "மகாப்பிரபுவே! தாங்களிப்போது யோசிக்கும் மாதிரியாலும், கதிரவன்என்னும் நாயகன் பிரிவால்வாடிய பங்கசத்தைப்போல தங்கள் முகம்வாடியிருப்பதாலும், ஏதோ தங்களுக்கு மனக்கவலை யுண்டாயிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. அதைநான் தெரிந்து கொள்ளலாமோ?" என்று கேட்டார். அதைச் செவியுற்ற பிரபு பக்தரின் கேள்விக்குவியந்து, "இராமதாசரே! தங்களிடத்துச் சொல்லக்கூடாத விஷயமொன்றுமில்லை." என்று, மகதவரசன் அனுப்பிய கட்டளைமுழுவதையும், அதற்குமேல் தான் செய்திருக்கிற யோசனையுஞ் சொன்னார். காரணமின்றி அரசன் அனுப்பிய ஆக்கினையை பக்தர்அறிந்து, அதற்காக மனங்கலங்கிய பிரபுவின் கருத்தையுந் தெரிந்து பேசலுற்றார். "பிரபுவே! இச்சமயத்தில் யான்கூறுவன சில வுண்டு. ஊருமின்றி உறவினருமின்றி எல்லாஊர்களிலுஞ் சஞ்சரித்து எல்லா மனிதர்களையும் நேசித்துக் காலங்கழிக்கும் யான் கூறுவதில் ஐயம் சிறிதும் கொள்ளாமல் செவிகொடுத்துக் கேட்கவேண்டும். யான் கூறப்புகுவது தங்களுக்கு முன்னரே தெரிந்தவிஷயமாயினும் அதை இச்சமயத்தில் ஞாபகப்படுத்துகிறேன். தன் கீழ்வாழ்வோராலே செய்யப்பட்ட குற்றத்தை யாவரிடத்தும் முகம் கோணாமல் நடுவுநிலைமையைப் பொருந்தி விசாரித்து, அக்குற்றத்திற்குச் சொல்லப்பட்ட தண்டனையை சாஸ்திர நூல்களில் வல்லவரோடு ஆராய்ந்து விதித்தலே அரசனுக்கு முறை. முறையைச் செய்யாத அரசனது

கொடுங்கோலின் கீழ்வாழின் யாவருக்கும் பொருள் நஷ்டமும் துக்கமும் நேரிடும். அரசன் முறை செய்யாமையினலே குடிகள் துன்பப்பட்டு அதனைப் பொறுக்கமாட்டாமல் அழுதகண்ணீரே அவ்வரசனது செல்வத்தைக் கெடுக்கும். குடிகளால் அஞ்சப்பட்ட செயல்களைச் செய்யும் அரசன் கெடுவான். அரசன் முறைதப்பி நடந்தால் அவன்தேசத்தில் பசுக்களும் பால்கரவா; அந்தணரும் வேதமோதல், ஓதுவித்தல், யாகஞ்செய்தல், செய்வித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகைத் தொழில்களையுஞ் செய்யாதுவிடுவர். அதனுல் தேவர்களுக்கு யாகம் நடவாமையால் காலத்தில் மழைபெய்யாது. மழையானது பெய்யவேண்டுங் காலத்துப் பெய்யாதொழியின் உலகத்தில் பசியென்னுங் கொடியநோய் நிலைபெற்று உயிர்களை வருத்தும். இவைக்காட்டிலும் கெடுதி தேசத்திற் கென்னவேண்டும்? தகுந்த காரணமின்றி மகதவரசன் தங்களை ஊரைவிட்டுப் போகும்படி உத்தரவளித் திருப்பாணுயின் மேற்கூறியவையெல்லாம் அவனைச்சாரும்.

இதுநிற்க, தாங்கள் அரசனது ஆக்கினைக்காக மனவருத்தமுறுவது அழகல்ல. தங்கள் தைரிய மெங்கேபோயிற்று? குலகுருவின் உபதேச மொழிகளை மறந்தீர்களா? இப்போது வருந்துவதெல்லாம் தற்கால நிலைமையினின்று பிறிதோர் நிலைமைக்குப் போகும்படி நேர்ந்ததற்காகவோ? அதாவது இப்பொழுதுள்ள அதிகாரம், செல்வம் இவைகளைப் பிரிந்துபோகிறேமே யென்றுதானே வருந்தவேண்டும்? இவ்வதிகாரம் செல்வம் யாவும் ஓரிடத்தில் நிலைபெற்றிருப்பவைகளல்லவே? நிலைபெறுத் தன்மையுடைய தென்பதைத் தாங்கள் மறந்துவிட்டீர்கள். ஆதலால் தங்களுக்கு அவைகளிடத்துப் பற்றுண்டாயிற்று. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு மாறிக்கொண்டேயிருப்பதல்லவோ செ

லாம். கூத்தாடுகிற சபையினிடத்துத் திரளான ஜனக்கூ
ட்டம்சேர்ந்து அக்கூத்தாட்டம் நிகழும் வரைக்குமிருந்து,
அவ்வாட்ட முடிந்தவுடன் கூட்டமுங்கலைந்துபோகிற தன்
மைபோல, செல்வமானது ஒருவனது நல்வினை காரணமாக
அவனிடத்தில் பலவிதத்தால் வந்து, அந்நல்வினை முடிந்த
வுடன் தானும் போகின்றது. செல்வத்தை படைப்பதற்கும்
அதையிழப்பதற்கும் அவரவர்செய்த வினையே காரணம்.
வினையின் பயனை யனுபவித்தே தீரவேண்டும். தண்ணீரை
யே காரணமாக வைத்துக்கொண்டு உற்பவித்த தாமரையா
னது எப்படித் தண்ணீரில் பற்றறிருக்கிறதோ, அவ்வண்ண
மே வினையே காரணமாக ஜென்மமெடுத்து வினையின் பய
னை யனுப்பவிக்கும்போது அதில் மனம்பற்றாது, அவ்வ
னுபவத்தைச் சாட்சிபோல் பார்ப்பதல்லவோ துன்பத்தை
படையாமலிருப்பதற்கு நல்லசாதனம். பிரபுவே தங்களுக்
கிது தெரியாததல்லவே. இழிவான பல ஜென்மங்களையெ
டுத்துப் புண்ணியத்தால் உத்தமமான மனிததேகத்தைப்
பெற்றது, நீர்க்குமிழிபோல நிலையில்லாத செல்வத்தையும்
அதிகாரத்தையும் படைத்து அதில் சிலநாள் சுகித்து, அ
வைபிரிந்தபின் துக்கிப்பதற்குத்தானோ? உண்டு களித்து
உறங்குவதுதானோ மனிதன் செய்யுந் தொழில்? மிருகங்
களும் இத்தொழிலைச் செய்கின்றன. பகுத்தறிவைப்பெற்
று மிருகங்களைக்காட்டிலும் உயர்ந்து மனிதனாய்ப் பிறந்த
தெதற்கோ? பிரபுவே! தாங்கள் சிறிது யோசிக்கவேண்
டும். மனிதன் பற்றுடன் செய்யுந்தொழில் வேறாயிருக்க,
அதை யொழித்துக் காலத்தை வீணாக்கல் நன்றோ? இது
என்தேசம், அது உன்தேசம் என ஒருவன் எல்லை வரைந்
தானாற் தேசமானது பிரிந்ததோ? அது முன்போலவேயி
ருக்கிறது. உனது எனது என்று சொந்தம் பாராட்டுவ
தெல்லாம் அவரவர் மதிமயக்கமல்லவோ? பரிசுத்தப்புருஷ
னாயினவர்க்குத்தானே உலகத்தை யென்று நினைக்கக்கூடும்.
கேடில்லாமல் சதா பாதுகாத்துக்கொண்டிருக்கும் வெளிவிஷயங்

களைப்பற்றிய மனமும் சங்கற்பித்துக்கொண்டு சதா மாறிக்கொண்டேயிருக்கிறது. அதனால் துக்கம் விளைகிறது. உலக வியவகாரத்தை நடத்தும்போது விஷயங்களிடத்து பற்றுவைக்காமல் மனதை அகமுகமாய்த் திருப்பி நித்தியமான ஆத்மாவினிடத்துச் சேர்ப்பின், மனம் சங்கற்பமற்று ஓட்டமடங்கிச் சாந்தத்தையடையும். அதனால் சுகமுண்டாகிறது. உலக வியவகாரத்தையும் நடத்தவேண்டும், நாமும் துன்பத்தி லாழாமல் சுகத்தை யடையவேண்டும். நான் சொல்லும் சமாதான மிவ்வளவே. முற்காலத்தில் அநேக சக்கரவர்த்திகள் செல்வம் நிலையாமை யறிந்து, அதில் மனம் பற்றினால் விளைவது துக்கமெனத் தெளிந்து, பற்றில்லாமல் இராச்சியத்தை யாண்டு, பிறகு அழிவற்ற பரம்பொருளைத் தெரிந்து, அதை யெங்குங்கண் டானந்தித்து நித்திய பரிபூரணமான பேரின் வாழ்வை யடைந்தார்கள்." என்று இராமதாசர் அநேக இராசாக்களுடைய சரித்திரங்களைப் பிரபுவுக்குச் சொல்லி முடித்தார்.

இவையெல்லாங் கேட்ட பிரபு அதிக தைரியங்கொண்டவராய் முகமலர்ச்சிகொண்டு இராமதாசனைத் தன் குருவென மதித்து அவரை நமஸ்கரித்து மனதாரத் துதித்து வாயாரப் புகழ்ந்து அவர் வசனங்களால் தானடைந்த இலாபத்தைப் பலதரஞ் சொல்லி ஆனந்தப்பட்டார். பிறகு பக்தர் தன்னிருப்பிடமேகினர். அவருக்கும் பிரபுவுக்கும் நடந்த சம்பாஷணையை அடுத்த அறையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த சந்திரசூடனும் சுந்தரியும் தங்கள் பிதாவின் மனவருத்தத்திற்குத் தகுந்த காரண மிருக்கக் கண்டு விசனமுற்றார்கள். இராமதாசர் உபதேசங்களை அவர்கள் முற்றுமுணரவில்லை. சமுசாரத்தை விட்டுத் துறவிகளாயிருப்போர் வார்த்தைகளில் சந்திரசூடனுக்கு நம்பிக்கையில்லை. சமுசாரத்தைநடத்தமுடியாது அதைவிட்டுத் தனியே வந்து வயிறுவளர்க்க ஏதோ சில பழயகதைகளைப்

பாடம் பண்ணிக்கொண்டு துறவிகளெனப் பெயர்வகித்துத் திரிபவர்கள் பேச்சினால் பயனில்லையென்றும், க்ஷத்திரியனாயிருப்பவன் தன்குலத்திற்கேற்ற தர்மங்களை மேற்கொண்டு வீரனாயிருந்து இராச்சியத்தை யாளாமல், எல்லாவற்றையுந் துறந்து உண்டோயில்லையோ வென்னும் பரமசந்தேகமாகிய பரம்பொருளை நாடுவது அழகோ வென்றும் சந்திரசூடன் சுந்தரிக்குச் சொல்லி, பக்தரின் வாக்கியங்களையுணராமல் அவரை இகழ்ந்துபேசி, சுந்தரியுடன் மேன்மாடியைவிட்டுக் கீழிறங்கினான்.

---

## 4. சுலோசனர்.

மகதவரசன் அனுப்பிய கடிதம் வந்து பத்துநாளாகின்றன. சந்திரசேகரர் தன் ஊரைவிட்டுப் போவதற்கு இன்னும் ஐந்துநாள்தானிருக்கின்றன. இந்தச் சமாச்சாரம் சத்தியபுரி முழுவதும் பரவியது. அவ்வூர் சனங்களெல்லாம் பிரபுவுக்கு மனமிரங்கி, காரணமின்றித் துன்பத்தையுண்டுபண்ணும் மகதவரசனை நிந்தித்தனர். உத்தரவுவந்து பத்துநாளாகியும் இன்ன ஊருக்குப் போவதென்று சந்திரசேகரர் நிச்சயஞ் செய்யவில்லை. அவர் கொலுமண்டபத்திலுட்கார்ந்து எந்த ஊருக்குப் போகலாமென்று யோசித்துக்கொண்டிருக்கையில், அதிக வயது சென்றபோதிலும் அதை மறைக்கும்பொருட்டு நல்லயௌவனச் சிறுவர்களைப்போல உயர்ந்த பட்டாடைகளை யணிந்து நன்றாயலங்கரித்துக்கொண்டு ஒருவர் வந்தார். அவரைக் கண்டவுடன் சந்திரசேகரர் எழுந்து நின்று, "வாருங்கள், சுலோசனரே!" என்று சொல்லி, அவரை ஒரு ஆசனத்தி லுட்காரச்செய்து, தானுமவருக் கெதிராக மற்றோர் ஆசனத்திலுட்கார்ந்துகொண்டு, "யாத்திரை சுகமாகவிருந்ததா? எப்பொழுது வந்தீர்கள்? என்று கேட்டார். அதற்குச் சுலோசனர், "யாத்திரை பெருவாறு சுகமாயிருந்தது. நான் இவ்விடம் வந்து பத்துநாளாகிறது" என்றார்.

"அதென்ன யாத்திரை ஒருவாறு சுகமாகயிருந்ததெ ன்றீர்களே?"

"நான் எத்தனைச் சினேகிதர்களோடும் வேலைக்காரர்க ளோடும் போயிருந்தபோதிலும் என்னை யன்புடன் ஆதரி க்கத்தக்கப் பந்துக்களில்லாமற்போனது அவ்வளவு திருப் தியாக விருக்கவில்லை."

"ஆமாம். அது உண்மையே. தங்களிடத்துப் பகவா னுக்கின்னும் கிருபையுண்டாகவில்லையே."

"நான் தங்களைப்பற்றி யொரு சமாச்சாரங் கேள்விப் பட்டேன், அது உண்மைதானோ? எனக்கு மிகவும் விச னமாயிருக்கிறது."

"ஆமாம் சுலோசனரே! அரசனது கட்டளைப்படி நட க்கவேண்டாமோ? விசனப்பட்டாவதென்ன?"

"என்ன கட்டளை, காரணமின்றி யோர் காரியமா?"

"காரணமின்றிக் காரியங் கண்டதில்லை. ஆகையா லித ற்கும் ஒரு காரணமிருக்கலாம். அது நமக்குத் தெரிய வில்லை."

"காரணத்தை யுங்களுக்குச் சொல்லாமல் கட்டளையி டுவது நியாயமா?"

"காரணம் பின்னால் சொல்லப்படுமென்று எழுதியிரு க்கிறது சுலோசனரே!"

"என்னமோ யிதெல்லாம் எனக்குச் சரியாகத் தோ ன்றவில்லை. அரசனுக்கு அழகல்ல."

"இதற்காக நான் முதலில் சிறிது மனவருத்தங்கொ ண்டேன். இப்போது எனக்கு அதைக்குறித்துக் கவலையே யில்லை. எல்லாம் ஜகதீசனது செயலானபடியால், இது என்னுடைய நன்மைக்காகவே நடக்கக்கூடும்."

"சந்திரசேகரரே! உங்கள் தைரியத்தை நான் மிகவும் மெச்சுகிறேன். எந்த ஊருக்குப் போவதாய்த் தீர்மானித் தீர்கள்?"

"அதுதான் இன்னு மேற்படவில்லை. யோசித்துக்கொண்டிருக்கிறேன்."

"மகததேசத்தினெல்லையோரமாக என்னுடைய சிறிய ஊர் ஆனந்தபுரியிருக்கிறது. அவ்விடத்திற்கு வேண்டுமானால் நீங்கள் போகலாம். தக்க ஏற்பாடு நான் செய்கிறேன்."

இதைச் சொல்லும்போது கேட்டுக்கொண்டிருந்த சந்திரசூடன், "ஆனந்தபுரியில் திருடர்கள் உபத்திரவமதிகமென்று சொல்லுகிறார்களே" என்றான்.

"சந்திரசேகரரே! அவ்வூரில் கோட்டையைப்போல என்னுடைய அரண்மனையிருக்கிறது. அநேக காவலாளர் உண்டு. நீங்கள் திருடர்களுக்குப் பயப்படவேண்டாம். சந்திரசூடன் சிறுவனானபடியால் சிறிது அஞ்சுகிறான்."

"மிகவும் சந்தோஷம் சுலோசனரே! நான் இன்னும் இரண்டுநாளையில் புறப்படுகிறேன். நீங்கள் அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்துவிடுங்கள்."

இவ்வண்ணம் சந்திரசேகரர் கூறியதைக் கேட்ட சுலோசனர் தான் எண்ணின காரியம் முடிந்ததென்று சிறிது சந்தோஷங்கொண்டு ஆனந்தபுரியைக் குறித்து விவரமாக அநேக சங்கதிகளைச் சொல்லி, சந்திரசூடனையுஞ் சம்மதிக்கச் செய்தபின்பு சும்மாயிருந்தார். பிறகு சந்திரசூடன் அவ்விடத்தை விட்டுப்போகவே, இது நல்ல தருணமென்றெண்ணிச் சுலோசனர் மறுபடியும் பேசவாரம்பித்தார்.

"சந்திரசேகரரே! ஒரு சங்கதி. இப்போது தங்கள் சகோதரிக்கு விவாகம் நடக்கக் காலமாய்விட்டதன்றோ?"

"ஆமாம். அதுவும் ஒரு யோசனைதான்."

"அதற்காக என்ன செய்யப்போகிறீர்கள்?"

"அதைக்குறித்து யோசிக்கையில் நான் அரசனுடனே வந்தது. பிறகு அதை நினைக்க சாவகாசமில்லை."

"யாருக்கு விவாகஞ் செய்துகொடுக்க எண்ணியிருக்கிறீர்கள்.?"

"தகுந்த கணவன் இன்னும் அகப்படவில்லை சுலோசனரே!"

"நான் தங்களுக்கு மருமகப்பிள்ளையாக அருகன்ருனே?"

"ஆகா நல்லகேள்வி! தங்களுக்கென்ன பெரிய இராசாக்களுடைய பெண்கள் கிடைக்குமே. என்பெண்ணை விவாகஞ் செய்துகொள்வீர்களா? என்னைப்பரிகாசஞ் செய்கிறீர்களோ?"

"பரிகாசமொன்றுமில்லை. தாங்களென்னசொல்லுகிறீர்கள்?"

"சுலோசனரே! தாங்கள் சொல்லிய துண்மையாயின் எனக்கு மிகவும் சந்தோஷமே. நான் ஆனந்தபுரிக்குப் போனபின்பு உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன்."

"உடனே சொல்லமுடியாத விஷயந்தான். பெண்ணைப்பெற்ற தாயாரையுங் கேட்கவேண்டுமல்லவா?"

"அதற்காகவல்ல. என்னிஷ்டப்பிரகாரம் நடக்க எனக்கு அதிகாரமுண்டு. நான் ஸ்திரீகள் சொற்படி நடப்பவனல்ல."

"அப்படியிருந்தால் மிகவும் நல்லதாயிற்று. மறந்துவிடாதேயுங்கள். சுந்தரிக்கு வயதாகவேண்டுமென்றெண்ணியே நான் இதுவரைக்குங் கலியாணமில்லாமலிருந்தேன். தங்களுடைய சம்பந்தம் எனக்குக் கிடைத்தால் போதுமானது. எனக்கிருக்கும் தனம், தான்னியம், பூமி, இவைகள் உங்களுக்குத் தெரியுமல்லவோ?"

"ஆகா தெரியும். அதற்கென்ன குறைவு? நீங்கள் நல்ல வமிசத்தைச் சேர்ந்தவர்கள். உங்கள் தமையனார் நரேந்திரனை நான் நன்றாயறிவேன். அவரிருந்தபோது ஜயபுரி;

ஆனந்தபுரி, இரத்தினபுரி முதலான அநேக ஊர்களை யாண்டுவந்தார். அந்நியாயமாய்க் கொலைபாதகர்கள் அவரைக் கொன்றுவிட்டதால் தங்களுக்குச் சிறிது கஷ்டம் நேர்ந்தது. அப்போது அரசன் தங்களுக்கெல்லாப் பட்டணங்களையுங் கொடாமல் சிறிய ஊர்களாகிய ஆனந்தபுரி, இரத்தினபுரி இவைகளை மாத்திரங் கொடுத்தான். இத்துடன் நரேந்திரருடைய நகைகளும் பொக்கிஷமும் தங்களுக்கே கொடுக்கப்பட்டதையு மறிவேன். இவ்வளவு ஆஸ்திகளையுடைய தங்களுக்குப் பெண்ணைக் கொடுக்க யோசிக்கவேண்டிய தொன்றுமில்லை.''

"மிகவும் சந்தோஷம். இன்றைக்கு நான் இவ்விடத்திலிருந்து ஆட்களை யானந்தபுரிக்கனுப்பி அரண்மனையைச் சுத்தஞ்செய்து தங்கள் வரவை யெதிர்ப்பார்த்திருக்கும்படி உத்தரவிடுகிறேன். தாங்கள் இனி ஒன்றுக்கு மஞ்சவேண்டாம். நீங்கள் குடும்பத்துடன் தானே போகிறீர்கள்?''

"ஆமாம். யாரை யிங்கே விடமுடியும்?''

"சிறிய சேனை ஏதாவது கூட வருகிறதோ?''

"ஐம்பது போர்வீரர்களை யழைத்துப் போகலாமென்று அரசனது உத்தரவு அப்படியே அழைத்துக்கொண்டுபோவேன். சம்பாதி, சாம்பன் முதலான வேலைக்காரர்களும் வருவார்கள்.''

"மனோகரன் சங்கதியென்ன? வெகுநாளாச்சுதே?''

"அவன் ஏதோ மனக்கவலையுற்றிருக்கிறான். அவன் தன்சங்கதியைத் தெரிந்துகொண்டவன்போலக் காண்கிறான். அவனையுங் கூட்டிக்கொண்டுதான் போகவேண்டும். இதுகாறும் சொந்தப் பிள்ளையைப்போல் வளர்த்துவிட்டு அவனை இனி எங்கே போகச்சொல்வேன்?''

"நீங்கள் போகச்சொல்லலாமா? அவனுக்கு நல்ல வயது வந்துவிட்டபடியால் அவனே யோசிக்கவேண்டியது

எத்தனைநாளைக்குத் தங்கள் வீட்டிலிருக்கலாம்? அவன் தங்கள் பந்துவாயிருந்தால், ஒன்றும் யோசிக்கவேண்டாம். அவன் இன்னசாதியானென்றும், இன்ன ஊரானென்று மேற்படவில்லை. அன்னிய புருஷனை யாண்மனையில் வளர்ப்பது ஒரு காலத்தில் அனர்த்தமாய் முடியும். சிறியபேதைசுந்தரியிருக்கிறாள். என்னபுத்திசாலியானாலும் பெண்தானே. ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளவேண்டும். நீங்கள் ஆனந்தபுரிக்குப் பிரயாணப்பட வாரம்பிக்கலாம். நான் உங்களைப் பிறகு வந்து பார்க்கிறேன்.'' என்று சொல்லிவிட்டு, சுலோசனர் பிரபுவின் உத்தரவு பெற்றுக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றார்.

சுலோசனர் என்பவர் க்ஷத்திரியப் பிரபுவாயினும் மிக்க இழிவான குணமுடையவர். பார்ப்பதற்குக் கம்பீரமான தேகப்பருமனுடையராய் நல்லுடையாபரணங்களணிந்தவராயினும் தீயமனத்தினர். நல்லவார்த்தைகளைப் பேசி உதவிபுரிகிறவர்போலத் தோற்றினும் தன் காரியத்திலேயே கண்ணுள்ள கபடநெஞ்சினர். தன் காரியமாக வேண்டின் எவ்விதமான கெட்டத் தொழிலையுஞ் செய்யத்துணியுங் கடினசித்தர். எவ்வளவு இரகசியமான விஷயங்களையும் பிறரிடத்து வேடிக்கையாகப் பேசியறியும் சமர்த்தர். எவ்வளவு அற்பமானதாயினும் தன் விஷயத்தைப் பிறருக்கு எளிதில் காட்டாத கெட்டித்தனமுள்ளவர். இவர் நாற்பதுவயதாகியும் கலியாணமில்லாமலே காமவலையிற் சிக்கி கணக்கிலா மாதர்களின் கற்பையழித்த பிரபு. சேலைகட்டிய எவ்வுருவையுங் கண்டு, ஆவென்று வாயைத்திறந்து, கன்னம் நோவெடுக்கப் பார்த்து மனமுருகு மியல்பினர். பிரபுவமிசத்தில் பிறந்து சில ஊர்களுக்குச் சொந்தக்காரராகி மிக்கதனத்தை யுடையவராதல்பற்றி, இவருக்கு நற்குணமுள்ள சில பிரபுக்களுடைய சினேகமுண்டு. அதனாலிவரடைந்த பலனொன்றுமில்லை. நற்சிந்தையராகி தர்மவழியி

லொழுகுவதற்கு வலியின்றேனும், இவருக்குக் கொடியபாவச் செயல்களைப்புரியச் சிறிதும் அச்சமில்லை. இவரதுபிதா மகததேசத்துச் சிற்றரசர்களிலெல்லாந் தலைமைபூண்டு அரசனைப்போலவே அநேக பட்டணங்களுக் கதிபதியாயிருந்தனர். அவரது காலத்திற்குப் பிறகு சுலோசனர் தமையனார் நரேந்திரன் பிரபு பட்டம் பெற்று நல்லொழுக்கத்துடன் ஆனந்தபுரியில் சிலவருஷங்கள் வாழ்ந்து, இளம்பிராயத்திலேயே தன் மனைவியுடன் துர்மரணத்தை யடைந்தார். அக்காலத்தில் எல்லாருக்கு மதிபதியான மகதவரசன் சுலோசனருடைய நடவடிக்கையைக் குறித்துக் கேள்வியுற்று, நரேந்திரன் ஆண்ட ஊர்களி லநேகம் பிடித்துக்கொண்டு, அவருக்குச் சில ஊர்களைமாத்திரங் கொடுத்தான். அவைகளில் ஆனந்தபுரி யொன்று. நரேந்திரன் இறந்தபின் அவ்வூரில் வசிப்பதற் கிஷ்டமிலராய்ச் சுலோசனர் சத்தியபுரிக்கடுத்த இரத்தினபுரியில் ஓர் சிறிய அரண்மனை கட்டிக்கொண்டு அதில் வசித்துவந்தார். சந்திரசேகரருடைய சத்தியபுரி வசிப்பதற்கு மிகவும் ஆரோக்கியமானவூரானபடியால், அதிற் சில காலம் அவர் வந்திருப்பது வழக்கம். சந்திரசேகரர் சுபாவமாய் மிக்க நல்லவராதலால் சுலோசனருடைய துர்க்குணங்களை யறிந்திலர். இப்படியாக அநேக நாட்களை தன்னிஷ்டப்பிரகாரம் வீணிலே கழித்துவிட்டதை நினைந்து, தன்முன்னோர்களின் பெயரையும் ஊரையுங் காப்பாற்ற சந்ததி விர்த்தி செய்யும்பொருட்டு ஓர் பெண்ணை விவாகஞ் செய்துகொள்ள வேண்டுமென்று சுலோசனர் எண்ணினார். தனக்குப் பெண்ணைக்கொடுக்க ஏமாந்திருக்கும் பிரபு சந்திரசேகரர்தானென்று நன்றாயறிந்து அவர் பெண்மீது நாட்டம் வைத்தார். "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்பதற் கிணங்க, இப்போது நல்ல சமயம் வாய்த்ததென்று தன்னெண்ணத்தைச் சந்திரசேகரருக்குத் தெரிவித்துப் போயினார்.

## 5. சிருங்கமலைக் கள்ளர்கள்.

மகததேசத்தினெல்லை யோரமாய் ஆனந்தபுரிக்கடுத் தாப்போல அநேக மலைகள் ஒன்றன்பக்கத்தி லொன்ருய்க் கிளம்பி வட்டமிட்டு நடுவிலே சமபூமியிருக்கப்பெற்று விள ங்கின. அம்மலைகளுக்கு வேலியிட்டதுபோல, அவைக ளைச்சுற்றிச் சுமார் இரண்டுமெயில் அகலமுள்ள ஆரண்யம் சூழ்ந்திருந்தது. மலைகள் ஓரமாய் அக்காட்டி லெங்குபார் த்தாலும், அடிபருத்து வானளவோங்கி நெருக்கமாய் வள ர்ந்து இலைகள் தழைத்த அநேக கிளைகளுடன் பரந்த பல வித மரங்களும், அவைகளுக் கிடையே முட்செடிகளும் நிறைந்திருந்தன. ஒருமரத்தை மற்ருென்ருேடு கட்டுப்படு த்துவதுபோல, மெல்லிய இலைகளும் முட்களும் நிறைந்து ள்ள பலசாதிக் கொடிகள் அம்மரங்களின்மீது படர்ந்த தால் அக்காடு முழுவதும் பந்தலிட்டதுபோலத் தோன் றும். அதனுல் சூரியகிரணங்களும் உள்ளே நுழைவதற் கரியதா யிருந்தமையால் அக்காட்டி லெப்போதும் இரு ளே குடியிருந்தது. இத்தகைய காட்டில் துஷ்டமிருங்கங் கள் இருக்குமாவென்று சந்தேகிக்கவேண்டாம். எப்போ தாவது அக்காட்டிற்குள் வேட்டையாடுவதி லதிக சமர்த் தர்களான இராசாக்கள் போவார்களே யல்லாமல், சாதார ணமான குடிகள் அத்திக்கையே நோக்குவதில்லை. அக்கா ட்டிலிருந்து ஊர்களுக்குச் சமீபமாக வரும்போது, அதிக மரங்களும், முட்செடிகளும், துஷ்டமிருகங்களு மில்லா மலிருந்ததால், அத்தகைய விடங்களைச் சில ஊரார்கள் அழகான தோட்டங்களாக வமைத்துளர். மேற்கூறிய சிரு ங்க மலைக்கு மத்தியிலிருந்த சமபூமியில் கோட்டையை ப்போல கருங்கற்களால் வீடொன்று கட்டிக்கொண்டு, கள்ளச் சாதியைச் சேர்ந்த ஜாதன் அஜாதன் என்னு மிரு சகோதரர்கள் வசித்துவந்தார்கள். அவர்களிட்ட வேலை யைச் செய்ய இருபது கள்ளர்களுண்டு. இக்கள்ளர்கள்

யாருடைய ஆளுகைக்கும் உட்பட்டவரல்லர். அவர்கள் அம்மலை நடுவில் வசித்துவரும் சங்கதியை யொருவரும் அறிந்திலர். ஆனால் அவர்கள் இரகசியமாய் அம்மலையை விட்டு வெளியே வரவும் போகவும் ஓர் வழி கண்டுபிடித்திருந்தார்கள். அவ்வழியாக இராக்காலங்களில் வெளியே வந்து ஊர்களிற்பிரவேசித்துக் கொள்ளையடித்துச் சம்பாதித்த பொருள்களையெல்லாம் அவர்கள் சிருங்கமலைக் கோட்டைக்குள் பத்திரப்படுத்துவார்கள். இரவில் அவர்கள் ஊர்மீது வந்தால் சூரியவுதயமாகுமுன்னமே மேலேகூறிய காட்டிற்குட் சென்று சிருங்கமலையைப் போயடைவார்கள். ஒருவேளை பொழுதுவிடிந்துவிட்டால், மறுபடியும் சூரியன் அஸ்தமிக்கும் வரைக்கும் அவர்கள் நின்ற வூரிலேயே தங்கி, இரவில் தங்கள் மலைக்குப் புறப்படுவார்கள். கள்ளர்களுக்குத் தலைவர்களான ஜாதன் அஜாதன் என்னும் சகோதரர்கள் பகற்காலத்தில் ஊர்களில் தங்கும்படி நேர்ந்தால், அவர்கள் தனவான்களைப்போல நல்லாடையைத் தரித்து ஆபரணங்களை யணிந்து, வெளிதேசத்திலிருந்து யாத்திரையாக வந்தவர்களைப்போல நடித்துத் திரிவார்கள். சிருங்கமலைக் கடுத்தாப்போலிருக்கும் ஊர்களில் அநேகர் எவ்வளவோ பணங்களைக் கொள்ளைகொடுத்தும், கொள்ளையடிய திருடர்களைக் கண்டுபிடிக்க அவர்களுக்கு வலியில்லை. ஆனால் அவ்வூர்களில் திருடர்களுண்டென்பது மாத்திரம் வதந்தி. ஜாதன் அஜாதன் என்னும் சகோதரர்களுக்குத் தெரியாத அரசனாவது பிரபுவாவது கிடையாது. ஜாதன் என்பவனுக்குச் சுமார் முப்பதுவயதிருக்கும். அஜாதனுக்கு இருபத்தைந்திருக்கலாம். கள்ளராயினும் அவர்கள் பார்ப்பதற்குப் போர்வீரர்களைப்போ லிருப்பார்கள். வில்வித்தை, வாள்வித்தை, குத்துச்சண்டை முதலிய வித்தைகளி லவர்கள் நன்றாய்த் தேர்ந்தவர்கள். அவர்கள் தடியெடுத்துச் சுற்ற வாரம்பித்தால் ஒருவருங் கிட்ட நாடமுடியாது. வாளாயுதத்தைக் கையி லெடுத்துவிட்டால் வாழைக்

காயைத் துண்டம் போடுவதுபோல எதிரிகள் தலைகளைத் துண்டித்து விடுவார்கள்.

ஒருநாள் சாயந்திரம் கள்ளச் சகோதரர்களுடைய தலைமை வேலைக்காரன் நீலன் என்பவன் ஆனந்தபுரியில் போய்க் கொண்டிருந்தான். அவ்வூர் அரண்மனையில் அநேக வேலைக்காரர்கள் கிலமாயிருந்த கட்டிடங்களைப் பழுது பார்த்துக்கொண் டிருந்தார்கள். சிலர் அரண்மனைக் கெதிரில் பந்தல் போட்டுக்கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் பந்தலின்கீழ் நுண்ணிய வெண்மணலைக் கொட்டினர். வேறு சிலர் அநேக பூஞ்செடிகளை வரிசை வரிசையாக வைத்து அரண்மனையை யழகுபடுத்தி, சுற்றிலும் அநேக தீபக்கம்பங்களை நாட்டினார்கள். இவையெல்லாம் பார்த்த நீலன் இவ்வரண்மனையி லென்ன விசேஷமென்று அவ்விடத்துள்ள சில வேலைக்காரர்களைக் கேட்டுச் சங்கதியை விசாரித்தறிந்தான். சூரியன் அஸ்தமிக்கும்போது அவன் காட்டிற் பிரவேசித்து சிருங்கமலையை நெருங்கிக் கள்ளர் கோட்டையை யடைந்தான். அச்சமயத்தில் ஜாதன் தம்பியுடன் ஏதோ பேசிக்கொண்டிருக்க, நீலன் அவர்கள்முன் நின்று, "ஆண்டவர்களே! இன்றைக் கோர்சங்கதி. ஆனந்தபுரியரண்மனையில் விசேஷம். என்னகாரணத்தினாலோ சத்தியபுரி சந்திரசேகரப் பிரபு தன் குடும்பத்துடன் ஆனந்தபுரி யரண்மனையில் வந்து வசிக்கப்போகிறாராம். அதற்காகச் சுலோசனர் அரண்மனையை யலங்கரிக்கும்படி உத்தரவனுப்பினாராம். வேலை தடபுடலாய் நடக்கிறது. பந்தல் என்ன! தீபக் கம்பங்களென்ன! சேவகர்களென்ன! ஆனந்தபுரி அமளி குமளியாயிருக்கிறது. சந்திரசேகரருக்கும் மகதவரசனுக்கும் ஏதோ விரோதமாம். அதனால் பிரபுவை யரசன் ஊரைவிட்டு ஓட்டிவிட்டாரென்று சிலர் மெள்ளப் பேசிக்கொள்ளுகிறார்கள்" என்று சொன்னான். இதைக்கேட்ட ஜாதன், "நீலா அந்தப் பிரபுவுடன் இன்னும் யார்வருகிறார்கள்?" என்று கேட்க, "சுவாமி! குடும்பத்துடன் வரு

கிறாராம். அப்பிரபுவுக்குப் பேரழகுவாய்ந்த ஓர் பெண் மணியுண்டு. அவளுக்கின்னும் கலியாணமில்லையாம். அவளும் வருகிறாளாம். அவள்மீது சுலோசனர் காதல்கொண்டு அவளைக் கலியாணஞ் செய்துகொள்ளத் தீர்மானித்திருக்கிறாரென்று அரண்மனையிலிருக்குங் கிழச்சேவகன் சாத்தன் தன் பெண்டாட்டிக்குச் சொல்லிக்கொண்டிருக்கும் போது கேட்டேன்." என்று நீலன் சொல்ல, ஜாதன், "நீலா! நல்ல சமாச்சாரங் கொண்டுவந்தாய். இன்னும் ஏதாவது விசேஷமுண்டோ?" என்றான். அதற்கு நீலன், "வேறு விசேஷ மொன்றுமில்லை. நமக்குவேண்டிய திவ்வளவு தானே?" என்று பதிலளித்தான். பிறகு நீலனைத் தன்னிருப்பிடம் போக உத்தரவு கொடுத்தனுப்பிவிட்டு, ஜாதன் தன் தம்பியுடன் யோசிக்க வாரம்பித்தான். "ஊரைவிட்டுத் துரத்தப்பட்டப் பிரபுவினிடத்து என்ன பணமிருக்கும் அண்ணே?" என்று அஜாதன் கேட்க, ஜாதன், "ஆளைபடித்தால் அரைப்பணம் என்று பழமொழி. ஒரு பிரபுவின் வீட்டிற்குச் சென்றால் குறைந்தது ஆயிரம்பொன் னகப்படாதா? அட பணந்தான் அகப்படவில்லை, அவன் பெண்ணுக்கென்ன கருப்பா? நாம் எத்தனைநாளைக்குப் பெண்சாதியில்லாம லிருப்பது? பெண்தான் கிடைக்கட்டுமே போதும்" என்றான். "நீலன் சொல்லியது உண்மையாகத்தானிருக்கவேண்டும். சந்திரசேகரரின் பெண்மீது நாட்டம் வைத்திருப்பதால், சுலோசனன் தன்னரண்மனையை யலங்கரிக்க ஏற்பாடு செய்தான். சுலோசனன் கண்வைத்த பெண் மிகவும் அழகாயிருப்பாள்" என்று அஜாதன் சொல்ல, அதற்கு ஜாதன், "தம்பி! சாதாரணமாய் க்ஷத்திரியப் பெண்களெல்லாம் அழகாய்த்தா னிருப்பார்கள். அதிலும் சுலோசனன் பொறுக்கியெடுத்தப் பெண்மிகவும் அழகாயிருப்பா ளென்பதில் சந்தேகமேயில்லை. சுலோசனன் ஸ்திரீலோலன். உனக்குத் தெரியுமா?" என, "ஆகா எனக்குத் தெரியும். ஒருநாள் இரவு காட்டு அம்மன் கோயி

வில் சுலோசனன் ஓர் ஸ்திரீயுட னிருக்கக் கண்டோமே?" என்று அஜாதன் கூறினன். "ஆமாம். அவசரத்திற் ககப்பட்டதை விடாதேயென் றெண்ணினுலும் சுலோசனன் விவாகஞ் செய்துகொள்ள நல்ல பெண்ணைத்தான் தேடுவான். அவன் தேடிய பெண் நமக்குப் போதும். நாம் அப்பெண்ணை மெள்ள நமது கோட்டைக்குக் கொண்டுவந்துவிட்டால் பிறகு நமக்கென்ன குறை? எவ்வளவு பணமிருந்தபோதிலும் நமக்கென்ன பிரயோசனம்? இப்போது நமக்கென்று சொந்தமாய் ஒரு பெண் இரத்தினமிருந்தால் என்ன சுகமாயிருக்கலாம். நம்முடைய பூந்தோட்டத்தில் தினம் எவ்வளவு புஷ்பங்கள் பூக்கின்றன. அவ்வளவும் வீணுய்ப்போகிறது பார்." என்று ஜாதன் சிறிது காமவசத்தனுய்ப் பேசினன். பிறகு அஜாதன், "அதெல்லாம் சரிதான் அண்ணே? நாமிதுவரைக்கும் பெண்ணைத் திருடியதில்லை. கள்ளர்கள் பெண்ணைத் திருடினர்களென்று கேட்டதுமில்லை. நாம் எண்ணியது நடக்குமா? என்று கேட்க, ஜாதன், "தம்பி! பெண்கள் தேவையில்லாததினல் கள்ளர்கள் இதுவரைக்குந் திருடியதில்லை. நமக்குத் தேவையான வஸ்துவைப் பிறனைவஞ்சித்து அபகரித்தலே திருடு. பணத்தை யபகரிப்பது மாத்திரம் திருடல்ல. இது சாமான்னித்திருடு. நாம் செய்யவெண்ணுவது மகா புத்திசாலிகளாயும் தைரியமாயுமுள்ள கள்ளவீரர்கள் செய்யத்துணியும் பலமான திருடு. நாம் எண்ணியதேன் நடக்காது? அதற்கெல்லாம் சரியான வழியிருக்கிறது. அதை யனுசரித்து நடந்தால் காரியம் முடியும். நம்முடைய கோட்டை யிவ்விடத்திலிருக்கிறதென்று ஒருவருக்குந் தெரியாது. பெண்ணை யிவ்விடம் கொண்டுவந்துவிட்டால் பிறகு அவள் நம்முடையவளே." என்முன். "இவ்விடம் கொண்டுவந்த பிறகு நம்முடையவள்தான். கொண்டுவருவ தெப்படி?" என்று அஜாதன்கேட்க, ஜாதன், "சமயம்பார்த்துத் தைரியமாய்ப் பிரவேசிக்கவேண்டும். ஆனந்தபுரி யரண்மனையில் இடைப

மியிருக்கிறுளல்லவோ, அவளைக் கொஞ்சம் சரிப்படுத்திக் கொண்டு காரியத்தை முடிக்கவேண்டும்.'' என்றுன். "நல்ல ஆசாமியைக் கண்டு பிடித்தாயே. இலட்சுமியா நமக்கு ஒத்தாசை செய்வாள்? அவள் மகா கெர்வியாச்சுதே. ஒரு சமயம் நான் அவளிடத்துப் பேசும்படி நேர்ந்தது. அப்போது என்னை அவள் இலட்சியமே செய்யவில்லை. வேலைக்காரியாயிருந்தாலும் மிகக் கூர்மைபுத்தியுள்ளவள். அவள் நமக்கு வழிப்படுவாளென்று தோன்றவில்லையண்ணே.'' என்று அஜாதன் கூற, ஜாதன், "நீ சொல்லுவதுண்மையே. அவள்தான் அழகாயிருப்பதை யறிந்து அதிக ஆடம்பரம்பண்ணிக்கொள்ளுவாள். எனக்கு அவளை நன்றுய்த் தெரியும். காரியமாகவேண்டுமானுல் கழுதையின் காலைப் பிடியென்றபடி, நாம் அவளைத் தான் பிடிக்கவேண்டும். பணத்திற்குப் படியாதவர் யாருமில்லை. அப்பணத்தைக் கொடுத்து தான் அவளை நாம் சரிப்படுத்தவேண்டும். இந்தவிஷயத்தில் எனக்குத் தைரியமிருப்பதால், காரியம் முடியும். நீ சந்தேகிக்கவேண்டாம் தம்பி'' என்று சொன்ஞன். "உன்னுடைய தைரியத்திற்கு நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். இலட்சுமியைச் சரிப்படுத்தினுலும் பெண்ணைக் கொண்டுவருவ தெப்படியென்றுதான் நான் யோசிக்கிறேன்'' என்று அஜாதன் மறுபடியும் சங்கிக்க, ஜாதன், "தம்பி! இந்த விஷயத்தில் நான் செய்யும் வேலையைக் கவனித்துக்கொண்டிரு. காரியம் எப்படி முடிகிறதென்று பார். இலட்சுமியினிடத்து ஒரு ஆளை யனுப்புகிறேன். நீ சும்மாயிரு'' என்று கூறினுன். பிறகு இருவருமாக எழுந்து படுக்கச்சென்றுர்கள்.

---

## 6. விவாகவாலோசனை.

சத்தியபுரியில் சந்திரசேகரப் பிரபு சுலோசனையிடத்துப் பேசியபின்பு அதிக தைரியங் கொண்டவராய் அனந்தபுரிக்குப் புறப்பட ஏற்பாடுகள் செய்து விட்டார். சுலோ

சனர் சொல்லியவை யெல்லாம் பிரபு தன்மனைவிக்குத் தெரிவிக்க, இரதி, எங்குபோவதெனத் தெரியாமல் மயங்குங் காலையில் சுலோசனர் தன்னூரில்வசிக்க இடங்கொடுத்ததற்குச்சந்தோஷமும், தன்னன்பான குழந்தை சுந்தரியைநாற்பது வயதுசென்ற அவர் கலியாணஞ் செய்துகொள்ளக் கேட்டதற்கு விசனமுங்கொண்டாள். "பிரியநாயகி! நமது சுந்தரியைச் சுலோசனருக்குக் கொடுத்தாலென்ன? அநேக ஊர்களும், விசேஷபணமும், அதிக விலையுயர்ந்த நகைகளுமிருக்கின்றன. இதைக் காட்டிலும் நல்ல இடம் நமக்கெங்கே யகப்படப்போகிறது?" என்று சந்திரசேகரர் மனைவியைக்கேட்டார். "உங்களுக்குப் பிரியமிருந்தால் செய்யலாம். சுந்தரியின் அதிர்ஷ்டப் பிரகாரந்தானே யெல்லாம் நடக்குமென்று இரதி பதில் கூறினாள்."

"என்ன இரதி! உனக்குப் பிரியமில்லைபோ லிருக்கு?"

"உங்கள் பிரியத்தை யனுசரித்த எனக்கு வேறு பிரியமுண்டோ? உங்களுக்குத் தெரியாதவிஷயம் எனக்கேதாவது தெரியுமோ?"

"என் பிரியம்போல் நடப்பாயென்று எனக்குத் தெரியும். ஆனாலும் இந்த விவாகத்தைக்குறித்து உன்னுடைய அபிப்பிராயமென்ன?"

"என் பிராணநாதா! என் அபிப்பிராயத்தைக் கேட்டதால் சொல்லுகிறேன். தனதான்னிய சம்பந்துக்களிலொன்றுங் குறைவில்லை. ஆனால் சுலோசனருக்கு அதிக வயதாகிவிட்டது. இந்த நாளைக்கெல்லாம் அவர் பேரன் பேத்தியெடுத்திருக்கவேண்டும். நமது இளங்கொடி சுந்தரியை அவருக்கா கொடுப்பதென்று தோன்றுகிறது."

"இது எனக்குத் தெரியாததல்லவே?"

"அதை நான் முன்னமே சொல்லியிருக்கிறேனே, என்னிஷ்டத்தைக் கேட்டீர்களே?"

"அவருக்கென்ன சுமார் முப்பது வயதிருக்கும். அன்புடன் ஆதரிப்போரில்லாமையினால் அவர்மனம் அதிகசலிப்புற்று அவரது தேகத்தையும் சிறிது மெலியச்செய்தது. மனக்கிலேசத்தால் உரோமம் கொஞ்சம்வெளுத்தது. உண்மையாக அவர் வயது சென்றவரல்ல. இதைத்தவிர வேறு காரணமுண்டோ?"

"வேறென்ன அதிகமாயிருக்கிறது?"

"என்ன அதிகமா யிருக்கிறதென்றால், ஏதோ கொஞ்சமிருக்கவேண்டுமே?"

"என்மீது கோபங்கொள்ளாமல் கேட்கவேண்டும். அன்றுபூத்த புஷ்பத்தைச் செடியிலிருந்து நேரேயெடுத்து முகர்ந்தால், எவ்வளவு வாசனையாயும் பார்ப்பதற்கு எவ்வளவு சுத்தமாயும் அழகாயு மிருக்கிறது. அப்படியல்லாமல் வேறொருவர் கொய்து, சிலநாழிகை அவரால் முகரப்பட்டு புஷ்பம் தன்னொளிகுறைந்து சிறிதுவாடி கசங்கியபின்பு நமதுகையில் வந்தால், அந்தப்புஷ்பம் எப்படி யிருக்கிறது? வாசனைகுறைந்து அழகிறந்து அனுபவிப்பதற்கு அருவருப்பாயிருக்கிறதல்லவா? என் பிரியநாதனே! இது தின அனுபவந்தானே?"

"இல்லறத்திற்குரிய இரதியே! நீ எதற்காக இதைச்சொன்னாய்?" பிரபு, இரதிசொன்னதையறிந்தும அறியாதவர்போல, நடித்தார்.

"அதிகவயதான காரணத்தைத்தவிர வேறுகாரண முண்டோவெனக் கேட்டீர்களே?"

"ஆமாம், நான் சுலோசனையைக் குறித்துக் கேட்டேன். நீ என்னமோ புஷ்பக்கதை சொல்லுகிறாயே?"

"ஓர் புருஷன் சரிதையைக்குறித்து என் பர்த்தாவுக்குச் சொல்லவேண்டுமானால், நான் வேறெவ்விதமாகச் சொல்லுவேன்?"

"உன்னிடத்தில் பேசுகிறவன் அலங்காரசாஸ்திரம் படித்தவனாயிருக்கவேண்டும். இப்போது நீ கூறிய புஷ்பவுபமா

ணமும் சுலோசனருக்கு அதிக வயதாகி விட்டதைத்தானே காட்டுகிறது. இதுதானோ வேறுகாரணம்?"

"வேறுகாரணந்தான், வயதாகிவிட்டாலும் அவர் பிரம்ம சாரியாகவே நல்லொழுக்கத்தை விடாதிருந்தால் நமக்கோர் திருப்தியுண்டு. அதில்லாமல் அவர் ஏதோ சிலஆட்டங்கள் ஆடினரென்று கேள்விப்படுகிறேன்."

"என்ன ஆட்டம் ஆடினர்? இராமநாடகமா அல்லது அரிச்சந்திரவிலாசமா?"

"என் அருமைப்பதியே! நான் சொல்லுவதைத்தெரிந்து கொண்டதாகக் காட்டக்கூடாதென்று கங்கணங் கட்டிக் கொண்டிருந்தால் நான் என்னசெய்வேன்?"

இல்லை என் கண்மணியே! நீ என் வெளிப்படையாகப் பேசக்கூடாது?"

"வீட்டில் பெண்டீரில்லாமல் புருஷர்கள் நல்ல உணவை யுண்டு கொழுத்தால் என்ன ஆட்டம் ஆடுவார்கள்? இது தங்களுக்குத் தெரியாதா? தங்களுக் கெப்படித் தெரியும்? நான்தான் இளம்பிராயத்திலேயே வந்துசேர்ந்தேனே."

"ஆகா! இப்போது தெரிகிறது. இதுவும் எனக்கோர் ஆக்ஷேபமாகத் தோன்றவில்லை. சுலோசனர் அதிசுந்தரர், இத்துடன் அதிகதனிகர். அவர் பால்யவயதில் சில துஷ்ட ஸ்திரீகள் அவரை நெருங்கியிருக்கலாம். அதனுலென்ன, இப்போது அவர் கலியாணஞ் செய்துகொண்டால் இனி அவ்வாறு நடக்கமாட்டார்."

"வெகு அழகாயிருக்கிறது. மெள்ளபழியை ஸ்திரீகள் மீது சுமத்துகிறீர்களே? புருஷர்களுக்குப் புருஷர்களிடத் தே அபிமானம்போலிருக்கு? புருஷர்கள் கெட்டுப் போவ தற்குப் பேதைகளான ஸ்திரீகள்தான் காரணமோ?"

"அதிலென்ன சந்தேகம்? ஸ்திரீகள் தங்கள் ஒழுக்கந் தவராமல் கற்புநிலையில் நிற்கின், புருஷர்கள் என்னசெய் வார்கள்?"

"நல்லவார்த்தை, ஸ்திரீகளுக்கு மாத்திரந்தான் ஒழுக்கமென்றும் கற்புநிலையென்று மேற்பட்டிருக்கின்றனவோ? புருஷர்களுக்கு ஒன்றுமில்லையோ?"

"புருஷர்களுக்குமுண்டு இரதி."

"சரி, இரண்டுபேருக்கும் ஒழுக்கமுண்டென்றால், புருஷர்களும் தங்கள் ஒழுகத்திலிருந்து தவராலாமே?"

"புருஷர்கள் தவரமாட்டார்கள்."

"இது ஏனோ? இது புருஷாபிமானமோ? அல்லது சுலோசனரிடத்துள்ளவாசையோ?"

"அதுவல்ல, ஸ்திரீகள் கற்புநிலை தவரினவர்களென்று தெரிந்தாலல்லாமல் புருஷர்கள் பிரவேசிக்கமாட்டார்கள்."

"ஸ்திரீகளே புருஷர்களைக் கெடுப்பதற்குக் காரணமாயிருந்தபோதிலும், புருஷர்கள் தங்கள் ஒழுக்கத்தினின்று தவராம லுறுதியாய்நின்றால், ஸ்திரீகள் என்ன செய்வார்கள்? ஒழுக்கந்தவராமல் நடப்பதற்கு மனோபலம், நிச்சய புத்தி, அறிவு இவைகள்வேண்டும். இவைகள் சுபாவமாய் ஸ்திரீகளுக்கதிகமா அல்லது புருஷர்களுக்கதிகமா?"

"புருஷர்களுக்கே அதிகம்."

"அப்படியிருக்க புருஷர்கள் தவரிநடப்பது குற்றமா அல்லது பேதை ஸ்திரீகள் தவரிநடப்பதுகுற்றமா?"

"இரண்டுங்குற்றமே."

"அதிருக்கட்டும். எது பெருங்குற்றம்?"

"உலகைறிந்த இரதியே! இனி எனக்குப் பேசவாயில்லை. உன்னுடையபுத்தி எவ்வளவு நுட்பமாய்ப் போகிறதென்பதை யறியவேண்டுமென்னு மாவலால் இதுகாறும் பேசினேன். சுலோசனர் விஷயத்தில் இச்சிறு குற்றங்களைப் பெரிதாகக் காண்போமானால், நமது சுந்தரிக்கு வேறுகணவனில்லையே."

"இன்னும் சிறிதுநாள் பார்ப்போமே?"

"இனி புருஷன் பிறக்கப்போகிறானோ?"

"பிறந்தேயிருக்கிறான். ஆனாலும் சிறிதுகாலங் கழித்து யோசித்தாலென்ன?"

"நம்முடைய பந்துக்களி லொருவருமில்லையென்று உனக்கே தெரியும். வேறு சிற்றரசர்களில் நமக்குத் தெரிந்தவரைக்கும் சுலோசனனைக் காட்டிலும் மேலான பிரபு கிடையாது. தாமதமேன்.?"

"சுந்தரிக்கு அதிர்ஷ்டமிருந்தால் நல்ல கணவன் ஏற்படுவான். தாமதிப்பதே நல்லது."

"அப்படியே செய்வோம். இரதி! நீ ஒன்றுசெய்யவேண்டும். சுந்தரிக்கு இவ்விஷயத்தை மெள்ளத்தெரியப்படுத்தி, அவள் அபிப்பிராயத்தையும் அறிந்துகொள்."

"அப்படியே யாகட்டும். இப்போது மனோகரனை என்ன செய்யப் போகிறீர்கள்?"

"நாம் என்னசெய்கிறது? கூடத்தான் அழைத்துக்கொண்டு போகவேண்டும். அவனை நாம் எங்கே போகச்சொல்லுகிறது.?"

"அவனுக்கிப்போது பதினெட்டு வயதாகிவிட்டது. உலகமறிந்தவனாகிவிட்டான். இனி என்னசெய்வானோ?"

"இப்போது அவன் ஏதோ கவலையுற்றிருக்கிறான். எங்கேபோவதென்று யோசிக்கிறானுக்கும்."

"இருக்கலாம், மனோகரன் நல்ல குணமுடையவன், பார்ப்பதற்குச் சுந்தரன், புத்தியில் பிரகஸ்பதியென்று தாங்களே யடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள். அவன் நம்முடைய வயிற்றில் பிறவாதவனாயினும், அவன் சங்கதியை நினைத்துக் கொண்டால் எனக்கு மிகவும் வருத்த முண்டாகிறது. இவ்வளவு நாள் நம்முடைய வரண்மனையில் மூத்தப் பிள்ளையைப்போல் வளர்ந்து விட்டு, க்ஷத்திரிய வமிசத்திற்கேற்ற இலட்சணங்க ளெல்லாம் பொருந்தினவனா யிருந்து, இனி நம்மை விட்டுப் பிரிந்து எங்கே போவான்? எப்படி சீவிப்பான்? ஐயோ! பாவம்!"

"நீ சொல்லுவது சரியே இரதி. அவனை நான் எங்கும் போகச்சொல்லமாட்டேன். நீ பயப்பட வேண்டாம். அதிருக்கட்டும், சுந்தரியின் கலியாணத்தைக் குறித்தும்,சுலோசனரைப் பற்றியும் பேசிக்கொண் டிருக்கும்போது, நீ மனோகரன் பேச்சை என் எடுத்தாய்?"

"காரண மொன்றுமில்லை. எதோ அவன் ஞாபகம் வந்தது. பேச வாரம்பித்தேன்."

"காரணமின்றி யொன்றும் உண்டாகாது. சுந்தரி கலியாணத்தைக் குறித்துப் பேசுங்கால் மனோகரன் ஞாபகம் வந்ததென்று சொல்லுவா யானால், காரண மில்லையென்று எப்படிக் கூறலாம்?"

"நீங்கள் சொல்லுவது எனக் கொன்றுந் தெரியவில்லை. எது காரணமோ? எது காரியமோ? இதெல்லாம் நான் எங்கே கண்டேன். ஆனந்தபுரிக்குப் புறப்பட எற்பாடு செய்தாச்சுதே, மனோகரனையுங் கூட்டிக்கொண்டு போகிறீர்களோ இல்லையோ வென வறிந்து கொள்ளலாமென்று கேட்டேன். நீங்கள் பிறகு கேட்ட கேள்விகளால் எனக் கிப்போது ஒன்று தோன்றுகிறது. என் பிராணநாதா! சுந்தரி மனோகரன் என்னும் பெயர்கள் என்ன வழகாய் அமைந்திருக்கின்றன பாருங்கள்."

"பெயர்க ளழகா யமைந்தாற் போதுமா?"

"மற்ற விஷயங்களும் சரியாகவே யமைந் திருக்கின்றன. அவர்களுடைய வயது, தேக லட்சணம், குணம், புத்தி இவைகளெல்லாம் சரியாகவே யிருக்கின்றன."

"என் பிரிய இரதி! உன் மனோபாவத்தை அறிந்தேன். அது முடியாத காரியம்."

"ஏனோ? சுலோசனர் தான் வரம் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறாரோ?"

"என் மனதிற்கினிய மாதே! உனக்கிப்போது சிறிது கோபமுண்டாகிறது. யோசித்துப் பார்த்தால் உனக்குந் தெரியும்."

"நீங்கள் சொல்லுவது எனக்குத்தெரியும்."

"நீசொல்லுவதும் எனக்குத்தெரியும் இரதி."

"பிறகேன் விவாதம்.?"

"இது விவாக விஷயமல்லவோ?"

"ஆமாம். தாயார் பெண்ணுக்கு அழகுள்ள சிறுவனைத் தேடுகிருள். தந்தையார் கிழவனுனுலும் நல்ல குலத்திற் பிறந்தவனைத் தேடுகிருர். ஆதலால் விவாதம்"

"ஒருவரை மற்ருெருவர் அறிந்தபின் விவாதமேன்? என்றனையே இரதி! நம்முடைய அபிப்பிராயங்கள் வேறுபட்டிருந்தால் விவாதமொழியுமோ?" நம்மிருவருள் ஒருவர் மற்ருெருவர் இஷ்டத்தை யனுசரித்தால் விவாதமொழிந்து விவாகம் நடக்கும்."

"ஆமாம், நான் கூறுவது எனக்கு நியாயமாக விருக்கிறது. நீங்கள் கூறுவது உங்களுக்குச் சரியாயிருக்கிறது."

"ஆதலால் என்னசெய்ய வேண்டுமென்கிருய்? உன்னிஷ்டப்பிரகாரம் ஒரு அழகுள்ளச்சிறுவனை நீதேடு, என்னிஷ்டப்பிரகாரம் நல்லகுலத்தில் பிறந்தவனை நான் தேடுகிறேன்."

"உங்களுக்கென்ன இரண்டு மாப்பிள்ளைகள் வேண்டுமென்று ஆசையிருக்கிறதோ? உள்ளது ஒரு பெண்தானே?" என்று சிறித்துக்கொண்டு இரதி மெள்ளச் சொன்னுள்.

"ஆமாம், ஒருகுடும்பத்தில் பெண்ணைப்பெற்ற தாய்க்கொரு இஷ்டமும், தந்தைக்கொரு இஷ்டமுமிருந்து, அவர்கள் தங்கள் தங்களிஷ்டத்தை நிறைவேற்ற முயன்ருல், இரண்டு மாப்பிள்ளைகள் வரவேண்டியது அவசியமே. பெண்ணும் வேருெரு இஷ்டத்தைக்கொண்டு பிடிவாதஞ் செய்யின், மூன்று மாப்பிள்ளைகள் கூடவரலாம். இப்படித்தானே உலகத்தில் விவாகம் நடத்துகிருர்கள்?" என்று பிரபு கொஞ்சங் கோபித்துச்சொன்னுர்.

"நான் சொன்னது பரிகாசமென்றறிந்து தாங்கள் என் மீது கோபிப்பது நியாயமன்று. என் பிரியநாதா! மனோகரன் சாதியின்னதென்று தெரியாமற்போனாலும், அவன் குணத்தையும், நடவடிக்கையையும் பார்த்தால் நல்ல க்ஷத்திரிய வமிசத்திற்பிறந்த உத்தமன்போலக் காணப்படவில்லையா?"

"குணத்தாலும் ஒழுக்கத்தாலும் ஒருவனுக்குச் சாதி யேற்படுகிறதா அல்லது பிறப்பினாலேற்படுகிறதா?"

"குணமும் ஒழுக்கமும் ஒருவனது சாதியைத் தெரிவிக்கும் இலட்சணங்கள். குலத்தளவேயாகுங் குணமென்று என் தாய்வீட்டுக் குருசொல்லக் கேட்டிருக்கிறேன். உலகத்தில் மனிதர்களுடைய எண்ணம், குணம், ஒழுக்கம் ஆகிய விவைகள் பலவாறாகவிருக்கின்றன. ஒரேமாதிரியான குணங்களையும் ஒழுக்கங்களையும்பெற்ற மனிதர்கள் ஒன்றாய்க் கூடுவது சுபாவம். அக்கூட்டத்திற்கே சாதியென்றுபெயர். அம்மாதிரி பலகூட்டங்களுண்டாகவே பலசாதிகள் ஏற்பட்டன. அத்தகையக் கூட்டங்களொன்றில் தோன்றியவன் பிறப்பைநோக்கி, அவன் இன்னசாதியானென நாம் சொல்லினும், அச்சாதிக்கு முதற்காரணமாயும், ஆதாரமாயுமுள்ளவை குணங்களும் ஒழுக்கங்களேயாமென்று அந்தக் குருசொல்லியது எனக்கு இன்னும் ஞாபகமிருக்கிறது. ஆகையால் ஒருவனது குணத்தையும், ஒழுக்கத்தையுங் கண்டு அவனது சாதியைச் சுலபமாய்ச் சொல்லிவிடலாமே?"

"இரதி! நீ குரு உபதேசம் பெற்றவளென்று எனக்கு இன்றைக்குத்தான் தெரியும். ஓர் குருவினிடத்துப்பழகிய நீ இவ்வளவு பேசியது ஆச்சரியமல்ல. சுந்தரியை மனோகரனுக்குக் கொடுக்க உனக்கு இஷ்டம். சுலோசனருக்குக் கொடுக்க எனக்கிஷ்டம். ஜகதீசன் கருத்தெவ்வாறோ பிறகு அறிவோம்."

"இது வழக்கந்தான். ஒரு விஷயத்தைக் குறித்து யோசிக்குங் காலையில் ஒரு தீர்மானமுஞ் செய்ய முடியாவிட்டால், ஜகதீசன் விட்ட வழியாகிறதென்றும், தலை விதிப்பிரகாரம் நடக்கட்டுமென்றுங்கூறுவது உலகத்தாரியல்பு."

"ஏது இரதி! இன்றைக்கு உன் புத்தி அதிக கூர்மையாயும் தெளிவாயு மிருக்கிறது? பெண் கலியாண விஷயத்தில் இவ்வளவு மனத்துடிப்பா உனக்கு?"

"சுலோசனனை நினைத்துக் கொண்டால் யாருக்குத்தான் மனந் துடிக்காது?" என்று கூறிய இரதியை பிரபு உற்று நோக்கிப் பேசாமலிருந்தார். பிறகு இரதி அந்தப்புரத்தை விட்டு வெளியே சென்றாள்.

---

## 7. ஆனந்தபுரி.

சிலநாள் கழிந்தன. ஒருநாட் காலை ஓர் வீதியில் அநேகர் கும்பலாய்க் கூடியிருந்தார்கள். "அதென்ன கூட்டம் நீலா?" என்றொருவன் கேட்டான். "போய்ப்பார்த்தால் தெரியும். போகலாம் வா காலா" என்றான் நீலன். அவர்கள் போய்ப் பார்க்கையில், எலும்பு தெரிய தேகம் மெலிந்து நீண்ட கைகளும் கால்களு முடையவளாய்த் தலையில் ஜடையைத் தரித்துக் கொண்டு, உடம்பு முழுவதும் விபூதிபூசி, கந்தைத் துணிகளை யுடுத்திக் கொண்டு பார்க்கப் பயங்கரமான கோரைப் பற்களுடன் ஓர் கிழவி கூட்டமத்தியி லுட்கார்ந்திருந்தாள். அவளை இரவில் கண்டோர் பேயென்று பயந்தோடுவார்கள். அவளைச் சுற்றி நின்றவர்களி லொருவன், "நீயார் கிழவி?" என்று கேட்டான். அதற்குக் கிழவி, "நல்ல வெய்யில் காய்கிறது" என்றாள். மற்றொருவன், "நீ எங்கிருந்து வந்தாய்?" என, கிழவி, "மரத்தில் இலை உண்டு" என்று சொன்னாள். இப்படியாக அவர்கள் கேட்ட கேள்விக்குச் சம்பந்த மில்லாத பதிலைச்சொல்லவே, அநேகர் அவளைப் பயித்தியக்காரி யென்றனர். சிலர்

மந்திரவாதி யென்றனர். மற்றுஞ் சிலர் இவளை யின்னுமொன்று கண்டு பிடிக்கவேண்டும், மகா கபடக்காரிபோ லிருக்கிறு ளென்ருர்கள். இவை யெல்லாங் கவனித்த நீலன், "காலா! முன்னெருநாள் இவ் வானந்தபுரி தோட்டத்தி லுள்ள ஓர் மரத்தின்மீது இக் கிழவியைக் கண்டேன். அப்போது சாயந்திரவேளை, ஒருவரும் தோட்டத்தி லில்லாமையினுல், அது ஒரு பேயென்று பயந்தோடினேன். நான் அன்றைய தினம் பார்த்த உருவந்தா னிது, தலையில் ஜடையைக் கண்டேன். கையில் இத் துணி மூட்டையும் பார்த்தேன். நிச்சயமாய் இவள் தான்." என்று சொல்லும்போது, கண கணவென்று பேரிகை சத்தங் கேட்டது. உடனே கூட்டங் கலைந்து எல்லாரும் அச்சத்தம்வரும் திக்கைநோக்கியோட, நீலனும் காலனும் பின்தொடர்ந்தார்கள். ஆனந்தபுரி அரண்மனைக்கு அடுத்த வீதியில் மேள வாத்தியத்துடன் ஓர் ஊர்கோலம் போய்க்கொண்டிருந்தது. முன்னே பத்து போர் வீரர்கள் போக, நன்ருயலங்கரிக்கப்பட்ட குதிரைகளின் மீது சந்திரசேகரப் பிரபுவும், அவரது மந்திரி சுதந்திரரும் செல்ல, அவர்களுக்குப்பின்னே இரண்டு குதிரைகள் பூட்டிய வழகான வண்டியில் பிரபுவின் மனைவி இரதியும், தோழிகளுடன் அவர் புத்திரி சுந்தரியும் உட்கார்ந்துபோக, இவர்களைத் தொடர்ந்து மனேகரனும் சந்திரசூடனும் குதிரைகள்மீதேறிக் கொண்டு போனுர்கள். கடைசியாக பத்து போர்வீரர்கள் கையில் உருவிய கத்தியுடன் குதிரைகளின்மீ துட்கார்ந்து சென்ருர்கள். இக் கூட்டமானது அரண்மனைக் கெதிரில் வந்து நிற்க, ஆனந்தபுரிக் கதிபதியாகிய சுலோசனர் அவர்களை யெதிர்க்கொண்டு அழைக்கவருஞ் சமயத்தில், ஜனக் கூட்டத்தை யெல்லாம் விலக்கிக்கொண்டு ஜடைக் கிழவியானவள் தன் துணி மூட்டையுடன் பிரபுக்கள் நிற்கும் பந்தலின்கீழ் வந்து, "கடவுள் துணையிருப்பார். கெடுவான் கேடு நினைப்பான்" என்று பூமியதிரும்படி கூச்சலிட்டு, மனேகரனை நோக்கி, "நீ நீடூழி வா

ழ்வாயாக'' என்று உரத்த குரலால் ஆசீர்வதித்தவுடன் அவ்விடம் நில்லாமல் மானைப்போல் பாய்ந்தோடிவிட்டாள். அக்கிழவி போட்ட சத்தத்தைக் கேட்டு அனைவரும் திடுக்கிட்டு நின்றார்கள். "இக்கிழவி யார்?'' என்று சந்திரசேகரர் கேட்டதற்குச் சுலோசனர், "இவளோர் பயித்தியக்காரி" என்றார்.'' தன்னை யாசீர்வதித்த கிழவி யாரென்று மனோகரன் ஆலோசிக்கலானான். பிறகு சுலோசனர் சந்திரசேகரப் பிரபுவை குடும்பத்தோடு அதிக மரியாதையுடன் அரண்மனைக்குள் அழைத்துச்சென்றார். இவையெல்லாங் கண்ட நீலனும் காலனும் அன்று சாயந்திரம் ஆனந்தபுரியைவிட்டு சிருங்கமலைக் கோட்டைக்குப் புறப்பட்டார்கள்.

சுலோசனர் தன்னரண்மனையில் சந்திரசேகரப் பிரபுவுக்கு அதிக விமரிசையாக அநேக விருந்துகள் செய்து, ஆடல் பாடல் முதலான கச்சேரிகள் வைத்து வெகு ஆடம்பரஞ் செய்தார். சுலோசனர் செய்த உபகாரத்திற்கு நாம் என்ன கைம்மாறு செய்யப்போகிறோமென்றெண்ணி, அவர் கேட்டபடி நமது பெண் சுந்தரியை அவருக்குக் கலியாணஞ் செய்துகொடுப்பதே சரியெனச் சந்திரசேகரர் தீர்மானித்தார். சுலோசனரும் ஆனந்தபுரிக்கு வந்து பத்துநாளாகிவிடவே, அவர் இரத்தினபுரிக்குத் திரும்பிப் போக எத்தனித்துச் சந்திரசேகரருக்குத் தெரிவிக்க, விவாகத்தைக்குறித்து ஒன்றும் பேசாமல் பிறகு கடிதமெழுதுவதாக சந்திரசேகரர் சொன்னவுடன், சுலோசனர் இரத்தினபுரிக்குப் பிரயாணப்பட்டார். அச்சமயத்தில் தன்னரண்மனை காக்கும் சாத்தனைத் தனியே கூப்பிட்டு, "சாத்தா! என்னுடைய சமாச்சாரம் உனக்கு நன்றாய்த் தெரியும். இப்போது இங்குவந்திருக்கும் சந்திரசேகரரிடத்து நீ அதிகமரியாதையாக நடந்துகொள்ளவேண்டும். நான் அவரது பெண்ணை விவாகஞ் செய்துகொள்ளத் தீர்மானித்திருக்கிறேன். அப்பெண்ணின் நடவடிக்கையைச் சாக்கிரதையாக நீ கவனித்துக்கொண் டிருக்கவேண்டும். இவர்களு

டன் வந்திருக்கும் மனோகரன் பால்லிய முதல் இவர்கள்
வீட்டிலேயே வயிறுவளர்த்து வருகிறவன். அவன் இவர்
களுடைய பந்துவல்ல. அவனுடைய ஜாதி, பிறப்பு இன்
னதென்று ஒருவருக்குந் தெரியாது. ஆனால் அவன் ஆள
ழகன், க்ஷத்திரியனைப்போல விளங்குகிறான், மகாவீரன்,
அதிக தைரியசாலியாயிருப்பதுடன் மகாபுத்திசாலி. அவ
னையும் ஒருகண் பார்த்துக்கொள். நான் சொல்லுவதை
யறிந்தாயா?" என்று சுலோசனர் கேட்க, அதற்குச் சாத்
தன், "தங்கள் கருத்தை யறிந்தேன் சுவாமி" என, சுலோ
சனர், "சாத்தா! நீ எப்போது சந்திரசேகரரிடத்துப் பேச
நேர்ந்தாலும் என்னைப் புகழ்ந்து பேசவேண்டும். என்னை
க்குறித்துக்கெட்டசங்கதிகள் அவர் காதில் விழாவண்ணம்
நீதான் காக்கவேண்டும். இலட்சுமிக்கு இவையெல்லாஞ்
சொல்லி, அவளைச் சந்திரசேகரர் மனைவியினிடத்து அதி
கமரியாதையாக நடந்துகொள்ளச் சொல்லு. சமயம்நே
ரும்போதெல்லாம் அவர்கள் பெண்ணை எனக்குக் கொடு
ப்பது நன்மையெனத் தோன்றும்படி இலட்சுமி இரதியம்
மாளிடத்துப் பேசவேண்டும். சந்திரசேகரரின் உத்தரவி
ன்றி ஒருவனையும் அரண்மனைக்குள் வரவிடாதே. உள்ளே
யாவர்வந்துபேசினும், அவர்வந்தவேலை யின்னதென்று நீ
தெரிந்துகொள்ளவேண்டும். அவர்கள் பெண் கலியாண
விஷயமாய் என்னபேச்சு நடந்தபோதிலும் அதை உட
னே நீ எனக்குத் தெரிவிக்கவேண்டும். எப்போதாவது
பிரபுவினிடத்து என் அண்ணன் நரேந்திரனைக்குறித்துப்
பேச நேர்ந்தால் அதிக சாக்கிரதையாகயிரு. தெரியுமா?
ஜடைக்கிழவி யொருத்தி இங்குமங்கு மோடிக்கொண்டிரு
க்கிறாள். அவள் என்னைத் தெரிந்தவள்போலக் காணப்
படுகிறாள். அவளை அரண்மனை நெருங்காவண்ணம் பார்.
நான் சொல்லியவையெல்லாம் தெரிந்துகொண்டாயா சாத்
தா!" என்று சுலோசனர் மறுபடியுங் கேட்க, "எல்லாந்
தெரிந்துகொண்டேன் சுவாமி, நீங்கள்போய் வாருங்கள்."

என்று சாத்தன் சொல்ல, சுலோசனர் இரத்தினபுரிக்குப் புறப்பட்டார்.

---

## 8. மனோகரனும் சுந்தரியும்.

சந்திரசேகரர் ஆனந்தபுரிக்கு வந்து சேர்ந்த சங்கதியை மகதவரசனுக்குத் தெரிவித்தார். வசிப்பதற்கு எல்லா விதங்களிலும் சௌக்கியமா யிருக்கும்வண்ணஞ் சுலோசனர் ஏற்பாடு செய்திருந்தமையால், சத்தியபுரியை விட்டு நீங்கினதால் சந்திரசேகரருக்குண்டான விசனமானது ஆனந்தபுரிக்கு வந்து இரண்டுமாதங்க ளானவுடன் ஒருவாறு மாறியது. மனிதர்களுக்குண்டாகும் விசனத்தை ஆற்றச்செய்யுஞ் சக்திகாலத்திற் கிருப்பதுபோல வேறு எதற்குண்டு? ஆனந்தபுரியில் அழகிய சிங்காரத்தோட்ட மொன்றுளது. சுலோசனர் உத்தரவின்படிக்கு அத்தோட்டம் மிகவும் நன்று யலங்கரிக்கப்பட்டுப் பார்ப்பதற்கு இரமணீயமாயிருந்தது. அநேக தடாகங்களும், வரிசை வரிசையாக பூஞ்செடிகளும், வானளா வோங்கிவளர்ந்த பல விருட்சங்களும், மருண்ட பார்வையுடன் அங்குமிங்கு மோடித்திரியும் மானினங்களும், வந்தவர் கண்டுகளிக்கும் பல பக்ஷிசாதிகளு மிருந்தன. ஒருநாள் சாயந்திரம் மனோகரன், சந்திரசூடன், சுந்தரி ஆகிய மூவர்களும் அத்தோட்டத்திற்குப் போய், அதிலுள்ள அதிசயங்களைப் பார்த்துப் பேசிக்கொண்டு நடக்கையில், சந்திரசூடன் தனியே பிரிந்து பக்ஷிசாதிகளைப் பார்க்கச் சென்றான். பிறகு மனோகரனும் சுந்தரியும் அத்தோட்டத்திலுள்ள தாமரைக்குளத்தி னருகிற் சென்றிருந்து சிறிதுகாலங்கழித்து, அதன் பிறகு மரங்களடர்ந்து சில்லென்று குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்த மற்றோரிடத்திற்கு மனோகரன் மெள்ள நடக்க, அன்னநடையொத்த சுந்தரியும் அவனது வலது பக்கமாய் நடந்தாள். இவர்களுக் கெதிரில் கிழிந்த துணிமூட்டையெடுத்துக்கொண்டு ஜடைக்கிழவி யோடிவந்தாள். அவளைக்

கண்டவுடன் சுந்தரி திடுக்கிட்டுப் பயந்து மனோகரனைத் தனது இடதுகையால் கட்டிக்கொண்டபோது, இவர்களைப்பார்த்த கிழவி, "கடவுள் துணையிருந்து இவ்வழகிய தம்பதிகளை யாசீர்வதிக்கவேண்டும். ஆடவனுக்கேற்ற மங்கை. கெடுவான் கேடுநினைப்பான்." என்று சொல்லி உரத்தச் சத்தமிட்டுக்கொண்டு அதிக விரைவாக வோடிவிட்டாள். கிழவியின் பேச்சைக்கேட்ட மனோகரன் ஆச்சரியமடைந்து, "இவள் யார் ஸ்திரீயா? அல்லது பிசாசா?" என்று சொல்ல, முன்போல இருவருமாக மெள்ள நடந்தார்கள். கிழவியைப் பார்த்தபோதுண்டான பயத்தால் மனோகரனைக் கட்டிக்கொண்ட கையைச் சுந்தரியெடுக்கவில்லை. கிழவிகூறிய சொற்கள் காதில் விழுந்தவுடன், சுந்தரியைத் தனது சகோதரிபோல் பாவித்து வந்த மனோகரனுடைய எண்ணம் மாறியது. அவனும் தனது வலது கையால் சுந்தரியைத் தன்னுடன் சேர்த்தணைத்துக்கொண்டான். கிழவி சொல்லியதைக் கேட்டபோது சுந்தரி நாணமுற்றதை மனோகரன் கவனித்தான். அச்சமுள்ளபோது அவனையணைத்துக்கொண்ட சுந்தரியின் கையானது அச்சம் நீங்கியபின்னும் அவனை விட்டு விலகாமலிருந்ததற் கென்னகாரணம்? "சுந்தரி! அந்தக் கிழவியை நாமிந்த வூருக்குவந்தன்றைக்கே நான் கண்டேன். அவளைப் பயித்தியக்காரியெனச் சுலோசனர் சொன்னார். நீ அவளை யன்றையதினம் பார்க்கவில்லையோ?" என்று மனோகரன் கேட்க, அதற்குச் சுந்தரி, "நான் பார்க்கவில்லை யாரோ கிழவி உரத்திச் சத்தமிட்டாளெனக் கேட்டேன். அவள் யார்?" என்றாள். மனோகரன், "அவளின்னாளென்று எனக்குத் தெரியாது. அன்றையதினம் என்னைக் கண்டு, 'நீ நீடூழிவாழ்வாயாக, கெடுவான் கேடுநினைப்பான்' என்றாள். இன்றைக்கு அவள் சொன்னது உனக்குத் தெரியும். இந்த இரண்டு சமயங்களிலும் அவள் கூறியதில் ஏதோ அர்த்தமிருக்கவேண்டும். நீ என்ன நினைக்கிறாய் சுந்தரி!" என்று கேட்டான்

அதற்குச் சுந்தரி, "அவளைப் பயித்தியக்காரியென்று நான் நம்பமாட்டேன். அவள் உங்கள் க்ஷேமத்தைக் கோரிய வளாயிருக்கிறாள். உங்களுக்குக் கெடுதி நினைப்பவன் யாரென்பதை நீங்கள் கண்டுபிடிக்கவேண்டும்" என, மனோகரன், "இன்னொருதரம் அவளைச் சந்திக்கும்போது நான் கேட்கிறேன்" என்று சுந்தரியுடன் நடந்துபோகையில், ஓர் இளமரத்தை இலை தழைத்து பூத்திருந்த கொடியானது பின்னிக்கொண்டிருந்ததைக்கண்டு, "சுந்தரி! இவ்வேடிக்கையைப் பார்த்தாயா?" என்று அதைக் காட்டினான். உடனே சுந்தரி நாணமுற்று, இதுகாறும் மனோகரனைத் தழுவிக்கொண்டிருந்த தன் இடது கையை யெடுத்துவிட்டாள். அதை நோக்கிய மனோகரன் சிறிது விசனங்கொண்டு, "பெண்மணியே! நான் செய்த குற்றத்திற்கு இத்தண்டனைவேண்டியதுதான்" என்று சுந்தரியைத் தன்னுடன்சேர்த்திருந்த தனது வலது கையை யெடுத்துவிட்டான். சுந்தரி புன்னகை செய்துகொண்டு, "நீங்களென்னகுற்றஞ் செய்தீர்கள்?" என, மனோகரன், "பெண்கள் நாயகமே! தாய்தந்தையின்றி, சாதிகுலந் தெரியாது, ஏழையாய் நின் பிதாவின் கருணையால் நான் உங்கள் வீட்டில் பால்லியமுதல் வளர்ந்துவந்த பழக்கத்தால், நீ சிறிது சுதந்திரங்கொண்டாட, அதை நான் என் சகோதரி செய்ததுபோல் எண்ணாமல் வேறுவிதமாய் நினைத்து, அதிலின்புற்று மனந்தடுமாறி, காதலன் காதலிகள் கண்டுகளிக்க வேண்டியக்காட்சியை உனக்குக் காட்டியது குற்றமாதலாலன்றோ, என் இடுப்பை யிதுகாறும் சர்ப்பம்போல் சுற்றியிருந்த உன் மெல்லிய அழகான கையை நீ திடீரலென்று எடுத்துவிட்டாய். என் அன்பான சுந்தரி! நீ என்னை மன்னிக்கவேண்டும்" என்று சொன்னான். இதைக்கேட்ட சுந்தரி, மனோகரனைப்பார்த்துச் சிரித்துக்கொண்டு, "என்னன்பே! வேறுவிதமாய் நினைக்கவேண்டாம். எனக்கு யுக்தவயது வந்தபின் தங்களைத் தீண்டியதுண்டா? கிழவியைக் கண்டவுடனுண்

டான பயத்தால் தங்களைக் கட்டிக்கொண்ட கையை என்னகாரணத்தாலோ பிறகு எடுக்க மறந்தேன். இந்தமரத்தின் காட்சியை நீங்கள் காட்டியவுடன் நாணத்தால் என் கையை யெடுத்துவிட்டேன். இதற்காக என்மீது தாங்கள் கோபிப்பது நியாயமன்று. என்நாணத்தின்மீது கோபிக்கவேண்டும். தாய்தந்தையரில்லாமை ஓர் இழிவாகுமா? அதை யொரு துரதிர்ஷ்டமெனச் சொல்லவேண்டும். ஜாதி குலம் மனிதர்களைப் பார்க்கும்போதே தெரியாதா? ஏழையென்று எப்படிச்சொல்லலாம். ஏழைக்குப் பிரபுவீட்டில் எல்லா மரியாதைகளும் நடக்குமோ? இதென்ன நியாயம்? நான் எப்போதும் உயர்வாகவே நினைத்திருக்கிறேன். என் முத்தண்ணுவென்று நினைத்து உங்களிடத்து நான் முன் வைத்திருந்த பிரியமானது, முத்தண்ணுவல்லவென் றறிந்தபின்பு, வேறுவிதமாக மாறி முன்னிருந்ததைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அதிகரித்திருப்பது எனக்கல்லவோ தெரியும். இப்போது உங்களுடன் நான் தனியேயிருப்பதற்கும், ஜடைக்கிழவியைக் கண்டவுடன் பயந்து தங்களிடுப்பைக் கட்டிக்கொண்டதற்கும் அந்தப் பிரியந்தானே காரணம். சிலநாளாக தாங்கள் விசனமுற்றிருப்பதை யறிந்தபோது, என் மனதிருந்த நிலைமையை யாரே அறிவார்? என்னன்பையெல்லாங் கொள்ளைகொண்டமனோகரமே! தங்களுக்கு யார்தான் இப்பெயரிட்டார்களோ? மிக்க சரியான பெயர். கண்டபோதெல்லாம் என் மனமுழுவதையுங் கவர்ந்துகொள்ளுகிறீர்களே? கிழவி சற்று முன்சொல்லிய வாக்கு பலிக்கவேண்டுமே.'' என்று சுந்தரி தன் காதலை வெளிப்படுத்திக் கூறியதைக் கேட்ட மனோகரன், அதிக சந்தோஷமும் தைரியமுங் கொண்டவனாய், "சுந்தரி! உன்மனதை நன்றாயறிந்தேன். இதற்காக இப்போது எவ்வளவு சந்தோஷப்படுகிறேனோ அதற்கதிகமாய் எனக்கு விசனமுமுண்டாகிறது'' என்றான். "தாங்கள்சொல்லியதை நான் அறிந்தேன். விரோதமாய் ஒன்றும் நட

வாதாகையால் நீங்கள் பயப்படவேண்டாம்'' என்று சுந்தரிசொல்லியதை மனோகரன் அறிந்தபோதிலும், விவரமாய் அவள்வாக்கிலிருந்து கேட்கவேண்டுமென்னு மாவலுடன், "சுந்தரி! நீ என்ன அறிந்தாய்? பயப்படவேண்டா மென்றனையே அதுவென்ன?" என்று கேட்கும்போது, சந்திரசூடன் இவர்களை நோக்கி வந்துகொண்டிருந்தான். அவனைக்கண்ட சுந்தரி, "என் மனோகரமே! அதோ சந்திரசூடன் வருகிறபடியால், இப்போது இப்பேச்சை நிறுத்துவோம். இன்னொருசாயந்திரம் இதேயிடத்தில் தாங்கள் கேட்டதற்குப் பதில் சொல்லுகிறேன்'' என்று சொல்ல, இருவருமாக சந்திரசூடன் வரும் திக்கை நோக்கிச் சென்றார்கள்.

இவ்விரு காதலர்களுக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்டவர்கள், முதலில் சுந்தரிக்கு மனோகரன்மீது காதலுண்டாயிற்றென்றும், தோட்டத்தில் கிழவி சொல்லியதைக் கேட்ட பின்பு தான் மனோகரன் சுந்தரியின்மீது காதல் கொண்டானென்று மறிந்து, சுந்தரி தன்காதலை மனோகரனைக்காட்டிலும் அதிகமாய் வெளியிட்டது ஸ்திரீகள் சுபாவமல்லவென்று ஒருவேளை நினைப்பார்கள். அதற்குச் சமாதானங் கூறுவாம். சந்திரசேகரர் ஆனந்தபுரிக்கு வருவதற்குமுன், இரதியுடன் சுந்தரியின் விவாகத்தைக் குறித்துப் பேசிய யாவற்றையுங் கேட்ட சுபாங்கனை சுந்தரிக்குத் தெரிவிக்க, அதனால் தன் தயாரின் அபிப்பிராயத்தை யறிந்த சுந்தரி மனோகரன்மீது நாட்டங்கொண்டவளாயினாள். மனோகரனோ தன் விருத்தாந்த மறிந்தவனாகி விசனமுற்று எங்குபோய்ப் பிழைப்போமென் றெண்ணி யெப்போதும் மனக்கவலை யுற்றிருந்தபடியால், அவனுக்குக் காதலுண்டாக நியாயமில்லை. தானின்ன சாதியானென் றறியாமலேக்கமுற்றவன், க்ஷத்திரிய வமிசத்தில் பிறந்து பிரபுபட்டம் பெற்றவருடைய பெண்ணின்மீது காதல்கொள்ளத் துணி

வானோ? துணியான். அவன் தன் பெயருக்கிணங்க எந்த
ஸ்திரீயின் மனதையும் கவரத்தக்க அதிசுந்தரன். இத்
துடன் சற்குணசம்பன்னன். வெகு இனிமையாயும் புத்தி
சாலித்தனமாயும் பேசுந்திறமுள்ளவன். பயனில்லாத வார்
த்தையொன்றும் பேசாதவன். நியாயம், தர்மம், சத்திய
மிவைகளைக் கடைப்பிடித்தவன். எல்லாரையும் அன்புடன்
சமமாய்ப் பார்க்கும் பரமநேயன். பேரழகும் பெருமை
வாய்ந்த நற்குணமும், கூர்மையான புத்தியுமுடைய சிறு
வனைக் கண்டால் யாருக்குத்தான் பிரியம் உண்டாகாது?
இவனைக்கண்ட புருஷர்களின் கண்கள் வேறொன்றையும்
கவனியாமல் அவனழகைப் பார்ப்பதிலேயே லயித்திருக்
கும். அவன் பேச்சைக்கேட் டானந்தமுறும் ஆடவர்கள்,
அவனழகைக் கவனித்திலர். புருஷர்களுக்கே மனோகரனிட
த்து இவ்வளவு மனமழுந்துமாயின், ஸ்திரீகளைக் குறித்
துச் சொல்லவேண்டுமோ? விவாக மாகாத வாலிப ஸ்திரீ
கள் அவனைக் காணும்போது, இவ்வழகன் நமக்குக் கணவ
னாக வாய்க்கானோ வென்று வாய்விட்டுச் சொல்ல நாணி,
மனதிலெண்ணி ஏக்கமுறுவார்கள். விவாகமாகிய யௌ
வன ஸ்திரீகள், இம்மன்மதனைப் புருஷனாக வடையவேண்
டிய பாக்கியம்பெற ஓர்பெண்மணி என்னநோன்பு நோற்றி
ருக்கவேண்டுமோவென் றுநினைத்து, பிறகு தங்களுக்குவிவா
கமாய்விட்டபடியால் அன்னிய புருஷனைக் கவனித்துப்
பார்ப்பது அழகல்லவென் றெண்ணி மனதை அதிக வருத்
தமுடன் தங்கள் புருஷர்களிடத்துத் திருப்புவார்கள். எப்
போதோ ஒரு சமயத்தில் மனோகரனைக்கண்ட ஸ்திரீகளின்
கதி யிவ்வாறானால், தினந்தோறும் அவனுடனிருந்து அடிக்
கடிப்பேசிப் பழகிவந்த சுந்தரியைக் குறித்துச் சொல்லவும்
வேண்டுமோ? அவளுக்கிப்போது பதினாறுவயதாகிவிட்ட
து. வயதுக்குத்தகுந்த மாதிரி தேகவளர்ச்சியும் பொலிவு
முடையவளாகி மங்கைப்பருவத்தை யடைந்திருக்கிறாள்.
சுந்தரியெனப் பெயரிட்டதுமாத்திரமல்ல; அவளிருப்பது

மப்படியே. சுபாவமாகவே அவள் நல்லபுத்திசாலி. இத்துடன் சற்குரு கடாட்சமும் தெய்வவருளும்பெற்ற மனோகரனிடத்து அவள் வித்தை கற்றவள். இவ்வளவு இலட்சணங்களும் பொருந்திய சுந்தரி மனோகரனிடத்துக் காதல்கொண்டது ஆச்சரியமல்ல. மனோகரன் தன் விஷயத்தை யறிந்து மனக்கவலையுற்று எங்கு ஓடுவோமென்று சிந்தித்திருப்பதை யறிந்த சுந்தரி நல்லபுத்திசாலியாதலால், அவனுக்குத் தைரியத்தையும் உற்சாகத்தையு முண்டாக்கி அரண்மனையைவிட்டு நீங்காவண்ணம் தன்னுடைய காதலை வெளிப்படையாகக் காட்டியது குற்றமாகாது.

---

## 9. இலட்சுமி.

சிருங்கமலைக் கள்ளச் சகோதரர்களில் மூத்தவனான ஜாதன் ஆனந்தபுரிக்குச் சந்திரசேகரர் வந்ததுமுதல் தினந்தோறும் அவ்விடத்தில் நடக்கும் சங்கதிகளை யறிந்துகொண்டிருந்தான். சுலோசனர் ஆனந்தபுரியைவிட்டு இரத்தினபுரிக்குப் போய்விட்டா ரென்னும் சமாச்சாரம் வந்தவுடன், ஆனந்தபுரி அரண்மனையிலுள்ள இலட்சுமியைக் கண்டு பேசிக்காரியத்தைச் சீக்கிரம் முடிக்க வேண்டு மென்று அவன் அஜாதனுக்குச் சொன்னான். இலட்சுமியினிடத்து இவர்களனுப்பிய ஆள் இன்னும் திரும்பிவந்து சேரவில்லை. இலட்சுமியென்பவள் ஆனந்தபுரியில் பிறந்து நெடுநாளாய் அவ்வூர் பிரபுவின் அரண்மனையில் வேலைக்காரியாயிருந்தவள். நரேந்திரன் இறந்தபின்னும் அவ்வரண்மனையில் சுலோசனர் உத்தரவின்படி வசித்து வந்தாள். அவளுக்குச் சுமார் நாற்பது வயதிருக்கலாம். இந்த வயதில் அவளைக் கண்டவர்கள் அவள் தன் இளம் பிராயத்தில் நல்ல வழகுடையவளா யிருந்திருக்க வேண்டு மென்றெண்ணுவார்கள். அவளுடைய புருஷன் கொஞ்ச காலத்திற்கு முன் தேசாந்திரம் போய்விட்ட படியால் அவளுக்கு அதிக விசனமுண்டாயது. அது அவள் தேகத்தைக் கொஞ்சம்

மெலியச் செய்தது. அவள் மிகுந்த புத்திசாலியா யிருப்பதுடன் நல்ல தந்திரசாலி. யாவரிடத்துப் பேசினாலும் அதிக பட்சமுடையவள் போல நடிக்குந் திறமை யுடையவள். பிரபுக்கள் இராஜாக்கள் முதலானவர்க ளுடைய அந்தஸ்திற்குத் தக்கபடி நடக்க நன்றாய் அறிந்தவள். புருஷர்க ளிடத்துப் பேச அவளுக்கு அச்சம் கிடையாது. அவள் உட்கருத்தையும் பேச்சின் அர்த்தத்தையும் கண்டுபிடிக்கப் புருஷர்கள் அதிக புத்தி கூர்மை யுள்ளவர்க ளாயும் கபட நெஞ்சினர்களாயுமிருக்க வேண்டும். சூதுவாது தெரியாமல் கண்டதையும் கேட்டதையும் நம்பிக் காலத்தைக் கழிக்கும் புருஷர்கள் இலட்சுமியி னிடத்துப் பேசுவது கஷ்டம். அவள் வேலைக் காரியா யிருந்த போதிலும் நல்ல வுடுப்புகளை யணிந்து சுத்தமாயும் புத்திசாலி யாயுமிருப்பதை யறிந்த சந்திர சேகரரின் மனைவி தன்கணவரிடத்து அவளை மெச்சிப் பேசுவதுண்டு. சுந்தரியி னிடத்து இலட்சுமி அதிகப் பிரியமா யிருப்பாள். இலட்சுமி இரதியி னிடத்துப் பேசுங் காலையில், நல்லக்ஷத்திரிய வமிசத்தைச் சேர்ந்த வராயும் அநேக ஊர்களுக் கதிபதியாயிருக்கும் பிரபுவுக்குச் சுந்தரியை விவாகஞ் செய்து கொடுக்க வேண்டுமென்று சொல்லி, சுலோசனனை அடிக்கடி வியந்து பேசுவாள். ஆனால் சுந்தரியினிடத்து அவள்பேச நேர்ந்த போது மன்மதனைப் போன்ற அழகு வாய்ந்தவனாயும் பிரகஸ்பதியைப் போல் புத்தியுள்ளவனாயுமுள்ள வோர் ஆடவச் சிறுவன் உனக்குக் கணவனாய் வாய்க்க வேண்டுமென்று கூறுவாள்.. இப்படியாக இலட்சுமி யானவள் அரண்மனையில் வந்திருக்கும் ஸ்திரீகளுடைய கருத்தை பொருவாறு அறிந்து அவர்க ளெல்லாந்தன்னை நேசிக்கும்படியாக வசித்து வருகையில், ஒருநாள் சாயந்திரம் அவள் தேக அசௌக்கியமாய்ப் படுத்திருந்த தன் சகோதரனைப் பார்த்து வர வெண்ணி அரண்மனையி லிருந்து புறப்பட்டாள். அவள் சகோதரன் வீடானது அரண்மனைக்குச்

சுமார் இரண்டு மயில்தூரத்தி லிருந்தது. அதை நோக்கி யவள்போகும் போது, உடுப்புகளை யணிந்து, பார்ப்பதற்கு கம்பீர மானவனும், கையில் தடி பிடித்துக் கொண்டு ஒரு வன் அவளைப் பின்தொடர்ந்தான். மரங்களடர்ந்த ஓர் தோட்டத் திற்குள் இருவரும் புகுந்த வுடன், ஜனங்கள் போக்கு வரவில்லாம லிருந்த படியால் இலட்சுமியைப் பின் தொடர்ந்த ஆடவன் அவள் பக்கமாய் நடக்க வாரம் பித் தான். இதை நோக்கிய இலட்சுமி, இவன்நம்மிடத்துப் பேச விருப்ப முள்ளவன் போலக் காண்கிறான். வெகு நாழிகையாக நம்மைப் பின் தொடர்ந்து வருகிறான். இவன்யார்? என்று யோசித்துக் கொண்டி ருக்கையில், அவன் அவளை நோக்கி, எங்கே போகிறாய் இலட்சுமி? என்று கேட்டான். அவன் ஏதோ சொல்லப்போகிறானெ ன்றறிந்த இலட்சுமி தான்போகும் வேலையைச்சொல்லி நீங்கள் யார்? எனக் கேட்க, அவன், நான் மகததேசத்தி லிருக்கும் ஓர் வியாபாரியின் குமஸ்தா. இந்த ஊரில் இர ண்டுநாளாக உன்னைப் பார்க்கவேண்டுமென்று காத்துக் கொண்டிருக்கிறேன் என்றான். இலட்சுமி அதிசயித்து, உங்களுக்கு என்னால் ஆகவேண்டியவேலை யென்னவென்று வினவ, உடனே அவ்வாடவன் தன் கையிலிருந்த முடிப்பை யவிழ்த்து, பத்துமோகராவை யெடுத்து இலட் சுமி கையில் கொடுத்து, இதை என் எசமானர் உனக் குக் கொடுக்கச் சொன்னார். நான் ஒரு சமாச்சாரம் சொ ல்லப்போகிறேன். அதை எந்தக் காலத்திலும் வெளியிட மாட்டேனென்று உறுதிமொழி கூறவேண்டுமென்றான். அப்படியே யாகட்டுமென்று இலட்சுமி சொல்லவும், ஆட வன், என் எஜமானன் இப்போது இவ்வூர் அரண்மனையில் வந்திருக்கும் சந்திரசேகரப் பிரபுவினுடைய பெண்ணின் மீது காதல்கொண்டிருக்கிறார். அப்பெண்ணை யவர் எப் படியாவது அடையவேண்டும். அவருக்கு அதிக தனமு ண்டு. ஓர் பிரபுவுக்குச் சமான மானவர். ஆனால் சாதியில்

க்ஷத்திரியரல்ல. இதனால் நேரில்வந்து பெண்ணைக் கேட்ப தற்கு அஞ்சுகிறார். இரகசியமாய்ப் பெண்ணை யடித்துக் கொண்டுபோய்விட்டால், பிறகு தான் அகப்பட்டுக்கொள் ளாமல்.பெண்ணை விவாகஞ் செய்துகொள்ள அவருக்குச் சாமர்த்தியமுண்டு. இதற்குத்தகுந்த யுக்திசொல்லி உத விசெய்வாயானால் உனக்கு வெகு இலாபங் கிடைக்கும். உன்னுடைய வல்லமையைக் குறித்து என் எஜமானர் கேள்விப்பட்டிருக்கிறாராம். நீ மனசுவைத்தால் இந்த வே லை முடிந்துவிடுமா மென்றான். இதைக்கேட்ட இலட்சுமி சிரித்துக்கொண்டு, முடிந்தது வேலையென்று நினைத்துக் கொள்ளுங்கள். உங்கள் எஜமானர் எவ்விடத்திலிருக்கிறா ரென, ஆடவன் மகதபட்டணத்தி லிருக்கிறாரென்றான்.

"அவர் என்ன வியாபாரஞ் செய்கிறார் ஐயா?"

"இரத்தின வியாபாரம் செய்கிறார் இலட்சுமி."

"பெண்ணைக் கொண்டுபோக நான் உதவிசெய்து வே லையை முடித்துவிடுகிறேன். அவர் அப்பெண்ணை எப்படி யொருவருக்குந் தெரியாமல் காப்பாற்றுவார். ஓர் பெரிய பிரபு பெண்ணை யிழந்துவிட்டால் சும்மாயிருப்பாரா? உட னே மகதவரசனுக்குத் தெரியப்படுத்தி எப்படியாவது கண் டுபிடித்து விடுவாரே?"

"அந்தக் கவலை யுனக்கு வேண்டாம் இலட்சுமி. என் னெஜமானருக்கு இவையெல்லாந் தெரியும். தக்க சாக்கிர தையுடன் தன்னையும் பெண்ணையும் உன்னையுங் காப்பாற் றிக்கொள்வார்."

"அதற்கு நான் சந்தோஷப்படுகிறேன். எப்படிக்காப் பாரென்பதை நான் அறிந்தாலல்லாமல் நான் தைரியமாய் இந்த வேலையில் பிரவேசிக்கமுடியாது. ஒருவேளை சங்கதி வெளிவந்தால், அவருக் கென்ன தனிகர், எப்படியாவது தப்பித்துக்கொள்வார். நானல்லவோ அகப்பட்டுக்கொள் வேன்."

"எங்கள் எஜமானருக்குக் கோட்டையைப்போல் ஓர் பெரியவீடுள்ளது. புதிதாய் யாராவது அவ்வீட்டிற்குள் சென்றால் திரும்பி வெளியிலே வருவது கஷ்டம். மதாயுக்தியாக வீட்டைக் கட்டியிருக்கிறார். அவ்வீட்டில் அப்பெண்ணை ஒருவருக்குந் தெரியாமல் கொண்டுபோய்விட்டால் பிறகு காப்பது சுலபம். உனக்கேன் அந்தக்கவலை, அது அவருடைய பொறுப்பு."

"ஒருவேளை சங்கதி வெளிவந்தாலும் என்னைக் காட்டிக்கொடாமலிருக்க வாக்குத்தத்தம் பண்ணவேண்டும்."

"அதற் கென்னதடை இலட்சுமி. அப்படியே செய்கிறேன்."

"நீங்கள் செய்தால் போதாது. உங்கள் எஜமானர் செய்யவேண்டும்."

"அப்படியே செய்யச்சொல்லுகிறேன். நீ பயப்படவேண்டாம் இலட்சுமி."

"அவருக்கு ஒத்தாசை செய்தால் எனக்கென்ன கொடுப்பார்?"

"நீ கேட்டதைக் கொடுப்பார். சந்தேகமில்லை."

"அப்படியானல் முன்னதாக எனக்கு ஆயிரம்பொன் கொடுக்கவேண்டும், உன்எஜமானர் நேரில் வந்து வாக்குத்தத்தம் செய்ய வேண்டும், வேலை முடிந்தபின் இன்னொரு ஆயிரம் பொன் கொடுக்க வேண்டும்."

"எங்கள் எஜமானனுக்கு நீ கேட்ட பணம் ஒருபெரிய தொகையல்ல. காரியம் முடிந்தால் இன்னும் அதிகமே கொடுப்பார்."

"சரி. உங்கள் எஜமானர் பெய ரென்ன? உங்கள் பெயரென்ன?

"அவசியம் தெரிய வேண்டுமோ? எதற்காக?"

"அவசியமில்லை. ஆனாலுந் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். பெயரைச் சொன்னல் உங்களுக் கேதாவது நஷ்டமுண்டோ?"

"எஜமானன் பெயர் ஜாதரத்தின செட்டியார். என் பெயர் காலசெட்டியார்."

"சந்தோஷம். தங்களைப்பிறகுஎப்போதுபார்க்கிறது?"

"எப்போது வேண்டுமானாலும் பார்க்கலாம், சரியான இடம் ஒன்று குறித்து விட்டால், அவ்விடத்தில் நீசொல்லுகிற காலத்தில் வருகிறேன்."

"ஆனந்த புரிக்கு வடக்கே மாந்தோப்பு ஒன்றிருக்கிறது. அதிலோர் பிள்ளையார் கோயிலுண்டு. அவ்விடத்தில் இன்றைக் கெட்டாவதுநாள் சாயந்திரம் உங்கள் எஜமானருடன் வந்திருங்கள். அன்றைக்கு நான் காரியத்தை முடிப்பதற்கு வேண்டிய சங்கதிகளெல்லாஞ் சொல்லுகிறேன். பிறகு அதன் பிரகாரம் நீங்கள் நடந்துகொள்ளவேண்டும். சரிதானே யிது காலசெட்டியாரே?"

"நல்லயோசனை தான். அப்படியே வருகிறோம்."

"வரும்போது ஆயிரம் பொன்கொண்டு வரவேண்டும். அதை மறந்துவிடாதேயுங்கள்."

"அதை மறப்போமா? ஒருநாளுமில்லை."

"கால செட்டியாரே! இந்தச் சங்கதியை யதிக இரகசியமாய் நடத்தவேண்டும். ஒருவருக்குஞ் சொல்லக்கூடாது. போய்வருகிறீர்களா?"

"ஆகா போய்வருகிறேன்." என்று காலசெட்டி இலட்சுமியினிடத்து விடைபெற்றுக்கொண்டு, காரியம் முடிந்துவிட்டதென்று சந்தோஷங்கொண்டு விரைவாக நடந்தான். காலசெட்டியென்பவன் சிருங்கமலைக் கள்ளச்சகோதரர்களுடைய வேலைக்காரனான காலன். தன்னைக் காலசெட்டியென்றும் தன் எஜமானனாகிய ஜாதனை ஜாதரத்தின செட்டியென்றும் அவன் இலட்சுமிக்குச் சொல்லி வியாபாரிகளென நடித்தான். அவன் அன்று சாயந்திரம் இருட்டிய பிறகு காட்டில் நுழைந்து அதிக விரைவாய் நடந்து சிருங்கமலையைச் சேர்ந்து தன் எஜமானர்களுக்குச் சங்கதியைத் தெரிவித்தான். காலன் சொல்லியவையெல்லாஞ் சே

ட்டு மிகவும் சந்தோஷித்து, காரியம் முடிந்துவிட்டதென் றெண்ணிக் காலனை மெச்சிப் பேசி அவனுக்கு பத்துமோக ரா இனும் கொடுத்தான். பிறகு இலட்சுமி குறித்த விட த்திற்குப் போவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து, ஜாதன், ஆயிரம் பொன்னைக் கொடுத்துப் பெண்ணை யிவ் விடம் கொண்டுவந்துவிட்டால் பிறகு இலட்சுமி ஒருகாசுங் காணமாட்டாளென, காலன், பெண் கிடைத்தபின் இல ட்சுமியினு லாகவேண்டிய தொன்றுமில்லையே யென்றான். ஏன் காலா! முன்னதாகவே ஆயிரம்பொன் வாங்கிக்கொ ண்டு பிறகு காரியத்தைக் கெடுத்துவிட்டால், நமக்குப் பணம் திரும்பிவருவதெப்படியென்று ஜாதன்கேட்க, அத ற்கு காலன், காரியம் ஒருநாளும்கெடாது சுவாமி, அப்படி க்கெட்டுவிட்டால் நம்முடையபணந் திரும்பிவந்துவிடும். அதற்கு நான் உத்தரவாதியென்றான்.

ஜாதனும் காலனும் பேசிக்கொண் டிருந்ததைக் கவன மாய்க் கேட்டுக்கொண்டிருந்த அஜாதன், அண்ணே! இல ட்சுமி தாமதிக்காமல் ஒத்துக்கொண் டிருக்கிறாள். அதில் எனக்குச் சந்தேகமிருக்கிறது. பணத்தை வாங்கிக்கொ ண்டு நம்மை ஏமாற்றி விடுவாளென்று எனக்குத் தோன்று கிறதென, தம்பி! நீ எப்போதும் எதையுஞ் சந்தேகிப்பது வழக்கந்தான். திடீரலென்று கையில் பத்து மோகராவை க்கொடுத்து, இனி இரண்டாயிரம் பொன்னுங் கொடுப்ப தாக நாம் சம்மதித்தால் அவள் ஒத்துக் கொள்வதற்கெ ன்ன தடையிருக்கிறது? தாமதிக்காமல் ஒத்துக் கொண்ட தால் நம்மை யேமாற்றி விடுவாளென்று நினைக்க வேண்டு மோ? அந்தக்காரியம் வெகு சுலபமாக முடியுமென்றெ ண்ணி உடனே ஒத்துக்கொண்டாளென்று ஏன் நினைக்கக் கூடாது? என்று ஜாதன்சொன்னான். மறுபடியும் அஜா தன், அண்ணே! நாம் பிரபுவின்புத்திரியைப் பார்த்ததில்லை. அவளழகைச் சனங்கள் வர்ணிக்கக்கேட்டு நாம் காதல்கொ

10

ண்டோம். இலட்சுமி அதிக தந்திரசாலி, மகா சூதானப் பேர்வழி, ஒருவேளை அவள் வேறேயோர்பெண்ணைத் தயார் செய்து, இவள்தான் பிரபுவின்குமாரத்தி சுந்தரியென்று சொல்லி, நம்முடைய தலையில் கட்டிவிட்டா லென்னசெய்கிறது என்றுகேட்க, நல்லதுதம்பி! இப்படி ஒருவேளை இலட்சுமி செய்யக்கூடும். ஆதலால் நாம் அந்தப்பெண்ணை முன்னதாகப் பார்த்துவிடவேண்டும். என்காலா! நான் சொல்லுகிறது சரிதானேயென்று ஜாதன்வினவ, நீங்களிவ்வளவு சந்தேகிக்க வேண்டாம். இலட்சுமி அவ்விதமாய் மோசஞ் செய்யமாட்டாள். ஆனாலும் சுந்தரியை முன்னதாகப்பார்ப்பதி லொருகுற்றமுமில்லை. இதையும் இலட்சுமி மூலமாகவே முடிக்கலாமென்று காலன்சொன்னான்.

பிறகு இருசகோதரர்களும் சுந்தரி தங்களுடைய கோட்டைக்குள்வந்து சேர்ந்துவிட்டாளென்று நிச்சயஞ்செய்துகொண்டு, அவளிருப்பதற்கு நல்லதோர் அறையேற்படுத்தி, அவளுக்கு வேலைக்காரிகளாக இரண்டு ஸ்திரீகளையும் நியமித்து, தாங்கள் இன்னவிதமாய் அப்பெண்மணியினிடத்து நடந்து கொள்ளவேண்டு மென்பதையும் பலவாறுகயோசித்து, தங்களை மறந்தவர்களாய் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ள வாரம்பித்ததை நோக்கியகாலன் அவர்களுடன் சொல்லாமலே தன்னிருப்பிடம்சென்றான்.

---

## 10. காதலனும் காதலியும்.

முன்னொருநாள் சாயந்திரம் மனோகரனும் சுந்தரியும் சிங்காரத் தோட்டத்தில் தனியே பேசியதைக் கூறியுள்ளோம். அன்றுதொடங்கி அரண்மனையில் சுந்தரி மனோகரனைப்பார்க்கும் மாதிரியும் அவனிடத்துப்பேசும் மாதிரியும் வேறுபட்டிருந்தது. அதையறிந்த தோழிப்பெண்களிலொருவளாகிய சுநந்தை சுபாங்கனைக்குந்தெரிவிக்க, அவனும் அதை ஜாடையாக இரண்டொரு சமயம்பார்த்து, இப்போது அவர்கள் காதலன் காதலிபோ லிருக்கிறார்கள்,

நீகூறிய துண்மையேயென்று சுநந்தைக்குச் சொன்னாள். அதுநல்ல ஜோடிதானென்று சுநந்தைகூற, சுபாங்கனை, நல்லஜோடிதான், பிரபு ஒத்துக்கொள்ளவேண்டுமே அவர் சுலோசனருக்கல்லவோ கொடுக்க நிச்சயித் திருக்கிறார். அவர் எண்ணம் ஈடேறுமென்று நான் நினைக்கவில்லை யென்றாள். பிறகு சுநந்தை, "எல்லா இரகசியங்களையும் நம்மிடத்துச்சொல்லும் வழக்கமுள்ள சுந்தரிதனக்கும் மனோகரனுக்கும் நடந்த விசேஷத்தை இதுவரைக்கும் நமக்குச் சொல்லாதிருக்கக் காரணமென்ன"? வென்றுகேட்டாள். எல்லா இரகசியங்களையும் நம்மிடத்துச் சொல்லவேண்டுமென்பது சுந்தரியின் கடமையோவென்று சுபாங்கனைக் கேட்கும்போது, சுந்தரி அவர்களிருந்த வறைக்குள் வந்தாள். அப்போது அவர்கள்பேசுவதை நிறுத்திவிட்டு, திடீரென்று அவர்கள்முகம் மாறுதலையடைந்ததை மறைக்கும்பொருட்டு புன்னகை செய்தார்கள். அதை நன்றாய்க் கவனித்த சுந்தரி என்ன விசேஷமென்றாள். என்ன விசேஷமென எங்களைக்கேட்பது ஓர் விசேஷந்தான் என்று சுநந்தைகூற, உள்ள விசேஷத்தைச் சொல்லாம லிருப்பதும் ஓர் விசேஷமென்றாள் சுபாங்கனை. உடனே அவர்கள்கருத்தையறிந்த சுந்தரி! பிரியசகிகளே! உங்களுக்குத் தெரியாமல் நான் ஏதோ செய்துகொண்டிருப்பதாக என்மீது குற்றஞ் சாட்டுகிறீர்கள். உங்களுக்குத் தெரியாமல் நான் செய்துவிட்டதை நீங்கள் எப்படியறிந்தீர்கள்? நான் வாய்திறந்து சொல்லாமலே உங்களுக்குச் சங்கதியைத் தெரிவித்திருக்க, அதையறிந்தபின் என்மீது குற்றங்கூறுவது நியாயமோ வென்றுகேட்டாள். அதற்கு சுபாங்கனை, நன்றாய்ச்சொன்னாய் சுந்தரி, நீ எப்போதும் பிறர்மீது பழியைச் சுமத்தும் சாமர்த்தியமுள்ளவளென, ஆமாம், சுந்தரியையை நமக்கு நன்றாய்த் தெரியுமே யென்றாள் சுநந்தை. பிறகு சுந்தரி, என் பிரியசகிகளே! உங்களுக்கிப்போது தெரிந்திருப்பதைக் காட்டிலும் விசேஷமொன்றும் நடக்க

வில்லை. நீங்கள் அறிந்திருக்கும் விஷயத்தையே மறுபடியும் உங்களுக்குச் சொல்லுவதில் பயனில்லையெனக் கருதி சொல்லாது விடுத்தேன். அதைக்குற்றமாக நீங்களெண்ணுகிறபடியால், இப்போது என்னுடன் சிங்காரத் தோட்டத்திற்கு வாருங்கள், நடந்தசங்கதியைச் சொல்லுகிறேனென்னும்போது, சந்திரசூடன் அவ்விடம்வந்து, என் சுந்தரி! என்னதாமதம்? உன்சகிகளும் வருகிறார்களோ? என்று கேட்க, ஆமாம், நான் இவர்களுடன் வருகிறேன். நீங்கள் மனோகரருடன்போகலா மண்ணாவென்றுசொல்ல, சரிநான் போகிறேன். நீ சீக்கிரம்வாவென்று சந்திரசூடன் போயினான். பிறகு சுந்தரி சகிகளுடன் பூந்தோட்டத்திற்குப் போகும்போது தனக்கும் மனோகரனுக்கும் நடந்த விருத்தாந்தத்தை அவர்களுக்குச் சொல்லிமுடித்தாள். அதைக் கேட்ட சகிகள் சந்தோஷங்கொண்டு, எப்படியாவது கடவுள்கிருபையால் நீ மனோகரரையே மணம்புரிவாயாக வென்று சுந்தரியை வாழ்த்தினார்கள். மூவருமாகப் பூந்தோட்டத்திற்குள் வந்ததைக்கண்ட மனோகரனும் சந்திரசூடனும் அவர்கள் உட்கார்ந்திருந்த விடத்தைவிட்டெழுந்து நடக்க வாரம்பித்தார்கள். சந்திரசூடனுடன் சிறிதுதூரம்நடந்தபின், அத்தோட்டத்தில் முன்னொருநாள் சுந்தரிக்கும் தனக்கும்நடந்த வார்த்தைகள் மனோகரனுக்கு ஞாபகம் வந்துவிட்டது. ஆதலால் அவனுக்குச் சந்திரசூடனுடன் போக மனமில்லை. எப்படியாவது சந்திரசூடனை விட்டுப் பிரியவேண்டுமென்று அவன் எண்ணினான். அச்சமயத்தில் துள்ளித்துள்ளி யோடிக்கொண்டிருந்த ஓர் சிறியமானைத் துரத்திக்கொண்டு சந்திரசூடன் ஓடிவிடவே, இது தான் நல்லசமயமென்று மனோகரன் தனியே நின்றுவிட்டான்.

"காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்பதற்கிணங்க, அவன் அச்சமயத்தில் சுந்தரியிருக்குமிடத்தை நோக்கினான். அப்போது சுந்தரியானவள் தன்னிரு தோழிக

ளுடன் மனோகரனும் தானும் முன்னொருநாள்கண்ட பூங் கொடியால் புணரப்பட்டஇளமரத்தி னருகாமையில்நின்று பேசிக்கொண்டிருந்தாள். அவ்வண்ணம்நின்ற சுந்தரியைக் கண்ட மனோகரனுக்கு அன்றுகூறியதை மறவாமல் தன்னை யும் அம்மரத்தடியில்வரும்படி சுந்தரி கூப்பிடுவதுபோலத் தோன்றவே, அவன் அவ்விடத்தைநோக்கி மெள்ள நடந் தான். இதைக்கவனித்த சகிகள் சுந்தரியை விட்டுப்பிரிந்து சிறிதுதூரத்திலுள்ள பூஞ்செடி மண்டபத்திற்குச் சென்று ர்கள். தோழிப்பெண்களுடன் அம்மரத்தருகிற்போய் நின் றதாலும், தான் வருவதைக்கண்ட அப்பெண்கள் சுந்தரி யை தனியே விட்டுப்போனதாலும், சுந்தரி சமாச்சார த்தை தன்சகிகளுக்குச் சொல்லிவிட்டாளென்று மனோ கரன் அறிந்து, அவளருகிற்சென்று, என் அன்பே! உன் புத்திசாலித்தனத்திற்கு மிகவும் சந்தோஷப்படுகிறேனென, சுந்தரி, எல்லாம் தங்களுடைய பாக்கியமேயென்றாள். நம் முடையமனதை உன் சகிகளும் அறிந்து கொண்டாப்போ லிருக்கென்று மனோகரன்கேட்டான்.

"ஆமாம், அவர்களறியவேண்டியது அவசியந்தானே, என் சகிகளல்லவோ?"

"மெள்ளத்தெரிவிக்கலாமே, ஏன்அவசரப்பட்டாய்?"

"நான் சொல்லிவிட்டதாக நினைக்கிறீர்களோ? அப் படியில்லை. எல்லாவற்றையும் தாங்களே நுட்பமாய் அறி யும் புத்திசாலிகள் அவர்கள்."

"நீ சொல்லாமற்போனால் அவர்களெப்படி அறிவார் கள். அவர்கள் அன்றையதினம் நம்முடன் வரவில்லையே சுந்தரி."

"அவர்கள் வரவில்லைதான், அரண்மனையில் நாமிருக் கும் மாதிரியாலும், பேசும்மாதிரியாலும், அவர்களே யறி ந்து கொண்டார்கள்."

"ஆகா! அவர்கள் நல்ல புத்திசாலிகள்தான்."

"அதற்கென்ன தடை? நாம்தான்ஏமாந்துபோனோம்".

"இதிலும் நமக்குச் சந்தோஷமுண்டாகிறது சுந்தரி நாம் சுகப்படுவதுடன், நம்முடைய நன்மையைக் கோருபவர்களும் சங்கதியை யறிந்திருக்கிறார்களென்று தெரியும்போது நம்முடைய சந்தோஷ மதிகரிக்கிறதல்லவா சுந்தரி?'

"அதனால்தான் நானும் சொல்லிவிட்டேன்."

"சுந்தரி! முன்னே நான்சொல்லவில்லை என்றனையே''

"நானாக அவர்களைக்கூப்பிட்டு சமாச்சாரத்தைச் சொல்லவில்லையே. அவர்களே கொஞ்சம் தெரிந்துகொண்டு என்னைக்கேட்க, அதைநான் ஒத்துக்கொண்டேன். பிறகு அவர்கள் என்னைவிவரமாய்ச் சொல்லும்படிவேண்ட, அதை அவர்களுக்குச்சொல்ல எனக்கு ஆசையுண்டாயிற்று. சந்தோஷமும் மேலிட்டது."

"நல்லது சுந்தரி! இன்றையதினம் இம்மரத்தடிக்கேன்வந்தாய்?"

"நாம் அன்றைக்கேன்வந்தோம்?"

"என்னபுத்திசாலி சுந்தரி நீ?"

"அது நீங்கள் செய்துவைத்தது தானே'' யென்று சுந்தரி சொல்ல, இருவருமாக மெள்ளநடந்து வானளவோங்கி வளர்ந்து அதிகதூரம் நிழல் வட்டமிட்டிருக்குமோர் ஆலவிருட்சத்தின்கீழ்ப் போய்த் தங்கினார்கள். அப்போது வசந்தகாலம். சூரியன் அஸ்தமிக்க இரண்டுநாழிகையுண்டு. எவ்வஸ்துவையும் பொன்னிறமாகக் காட்டிமிக்க அழகுபெறச் செய்யும் மஞ்சள் வெய்யில் காய்ந்துகொண்டிருந்தது. அவ்விடத்து விசாலமானதாயும் நீர்நிறையப் பெற்றதாயுமிருந்த தடாகத்தின்மீது வீழ்ந்துவருந் தென்றற்காற்றானது சில்லென்று வீசிக்கொண்டிருந்தது. அக்குளத்திலிருந்த தாமரைப் புஷ்பவாசனையும், இன்னும் அதனருகாமையில் அப்போதுதான் மலரவாரம்பித்த மல்லிகை, முல்லை, சண்பகம், இருவாட்சி முதலான புஷ்பங்களினுடைய மணமும் கம்மென்று வீசிக்கொண்டிருந்தது. ஓர் பக்கலில் மயில்கள் கூவிக்கொண்டு சந்தோ

ஷ மேலிட்டலால் சிறகை விரித்தாடின. மற்ருேர் பக்கலில் காதுக்கினிமையாக குயில்கள் பாடின. மேற்சொன்ன ஆல விருட்சத்தின்கீழ் நுண்ணிய வெண்மணல் கொட்டப்பட்டுப் பார்ப்பதற்குச் சுத்தமாயும் உட்காருவதற்கு மிருதுவாயு மிருந்ததைக்கண்டு, அவ்விடத்துட்கார்ந்த சுந்தரியும் மனோகரனும், இரதியும் மன்மதனும் போல விளங்கினர்கள். இந்திரிய நிக்கிரகஞ்செய்த யோகிகளுடைய பஞ்சேந்திரியங்களையும் ஒரே காலத்தில் வெளியி லிழுத்துச்செல்ல வலியுள்ள விஷயங்கள் நிறையப்பெற்றதாயிருந்த விடத்தைக் கண்டுகளித்த மனோகரன், என்ன சுகமான இடம் சுந்தரியென, சுந்தரி, இடத்தைக் காட்டிலும் இந்தக்காலம் எனக்குச் சுகமாயிருக்கிறதென்ருள். அதற்கு மனோகரன், நீ சொல்லிய காலமும் நான்கூறியவிடமும் சேர்ந்துதான் சுகமாயிருக்கிறதென, இவைகளுடன் நாமுங் கலந்த பின்னரே நமக்குச் சுகமுண்டாகிறபடியால், இடமும் காலமுமாத்திரம் போதாது குறையற்ற மனமும் வேண்டுமென்று சுந்தரி கூறினுள். அது உண்மையே. அன்று சாயந்திரம் கடைசியாக நான் கூறியதை யறிந்தேனென்று சொன்னுயே சுந்தரி! அதென்னவென்று மனோகரன் கேட்க, சுந்தரி, ஆமாம், சொல்லுகிறேன் கேளுங்கள். நாமிப்போது ஒருவனையொருவர் அதிகமாய் நேசிப்பது சந்தோஷமாய்த்தானிருக்கிறது. இம்மாதிரியாக நாம் இருவரும் என்றைக்கும் நேசித்துக்கொண் டிருக்கவேண்டுமே. நாம் கோரியவண்ணம் முடியாமல் என் தகப்பனர் உங்களைத் தவிர்த்து வேறெந்தப் புருஷனுக்காவது என்னை விவாகஞ் செய்துகொடுத்துவிட்டால், அப்போது நமக்கு அளவிலாத்துன்பமுண்டாகுமே யென்பதை நினைக்க, இப்போதுள்ள சந்தோஷ மவ்வளவும் துக்கமாக மாறிவிடுகிறதென்று எண்ணித் தானே அம்மாதிரி கூறினீர்களென்று கேட்க, சரிபாக அறிந்தாயென்று வாய்திறந்து சொல்லுவதற்குப் பதிலாக, மனோகரன் சுந்தரியைக் கட்டியணைத்து ஓர் முத்

தாமிட்டனன். பிறகு அவள் கன்னம் சிவந்ததைக் கண்டு
அவன் மனந்தாளாறாகி கையால் தடவிக்கொடுத்தனன்.
அதன் பின்பு சுந்தரி, நான் தங்களுடைய கருத்தைச் சரி
யாக அறிந்தபட்சத்தில், தாங்கள் அவ்வாறு சந்தேகித்துச்
சிந்தையுற்று விசனமுறவேண்டாம். ஒருவேளை என் தாய்
தந்தையர்கள் என்னை வேறொரு புருஷனுக்கு விவாகஞ்செ
ய்துகொடுக்க நிச்சயித்தால், அவர்கள் என் பிணத்தை
விவாகஞ் செய்துகொடுக்கவேண்டுமே யல்லாமல் என்னை
உயிருடன் வேறொருவனுக்குக் கொடுக்க முடியாதென,
மதனாகரன், நீ இவ்வளவு உறுதியாகச் சொல்லிவிடலாமா
சுந்தரி? உன்பிதாவின் சொற்படி நீ கேட்கவேண்டாமோ
வென்றான்.

"என் பிதாவின்சொற்படி நான் நடக்கவேண்டியது
அவசியமே."

"உன்பிதா வேறொருபுருஷனை விவாகஞ்செய்து கொ
ள்ளச்சொன்னால் என்னசெய்வாய் சுந்தரி?"

"விவாகமே வேண்டாமென்பேன்."

"அப்படிச்சொல்லிவிட்டால் பிதாவின் சொற்படி கே
ட்டதாகுமோ என்னன்பே?"

"என்றைக்கு என்பிதா என்னிஷ்டப்படி விவாகஞ்
செய்துகொள்ளச் சொல்லுகிறாரோ, அன்றைக்குத்தான்
எனக்கு விவாகமாகும். அதற்குமுன் எனக்கு விவாகமே
ஆகாது."

"இதுதான் எனக்குத்தெரியவில்லை சுந்தரி! உன் பிதா
சொன்னவண்ணம் நீ நடக்கத்தவறினபிறகு, அவர் உன்
னிஷ்டப்பிரகாரந் திரும்பவேண்டுமோ? அப்படியானால் நீ
பிதாவின் இஷ்டத்திற்குமீறி நடப்பவளாகிறாயே?"

"பிதா என்னிஷ்டத்தை யநுசரித்து நடப்பதல்ல.
அவரேபார்த்து என்னை உங்களுக்குக்கொடுக்க சம்மதித்த
பின் நான் தங்களை மணந்தால் அவரிஷ்டப்படி நடந்தததா
காதோ? என்னகாரணமோ எனக்குத்தெரியவில்லை. என்

னிஷ்டப்படி எனக்கு விவாகம்நடக்குமென்ற நம்பிக்கையெனக் கிருக்கிறது" என்று சுந்தரி கூறியதைக்கேட்ட மனோகரன் அதிகசந்தோஷமுந் தைரியமுமடைந்து, சுந்தரியுடன் கைகோர்த்துக்கொண்டு அவ்விடத்தைவிட்டுப் போகையில், சிறிதுதூரத்தில் திடீரென்று சந்திரசூடன் தோன்றினான். தன்னுடன்கூடவந்த சகிகளை விட்டுப்பிரிந்து சுந்தரி மனோகரனுடனிருப்பதையும், அவள்கையைப் பிடித்துக்கொண்டிருந்து தன்னைக்கண்டவுடன் கையையெடுத்துவிட்ட மனோகரனுடையமுகம் சரேலென்று மாறுதலையடைந்ததையும்பார்த்த சந்திரசூடன், சந்தேகித்தவனாய்ச் சிறிது கோபித்துக்கொண்டு, சுந்தரி! உன் சகிகளெங்கே? நீ ஏன் அவர்களைவிட்டுப்பிரிந்தாய்? எனக்கேட்டு, சுந்தரி அதற்குப் பதில்கூறுவதற்குள் சிறிதுதூரத்திலிருந்த தோழிப்பெண்களிடத்துச்சென்று நீங்கள் சுந்தரியை அரண்மனைக்குச் சீக்கிரம் கூட்டிவாருங்களென்று அவர்களுக்குக் கட்டளையிட்டு, அரண்மனையைநோக்கி விரைவாக தனியே நடந்தான்.

சந்திரசூடன்வந்த மாதிரியையும், சுந்தரியைக் கோபித்ததையும், சற்றுநாழிகைகூட அவ்விடம் நிற்காமற்போய் சுந்தரியின் சகிகளுக்கு உத்தரவளித்துப் போனதையுங் கண்டு மனம் வருந்தினவனாய்நின்ற மனோகரனைப்பார்த்துச் சுந்தரி, என்மனோகரனே! தாங்களிதற்கு அஞ்சவேண்டாம். சந்திரசூடனுடைய குணத்தைத் தாங்களறியீர்களோ? இப்போது தான்கண்டதை அவனொன்றுக்குப்பத்தாக என் பிதாவுக்குச் சொல்லப்போகிறான். அது எனக்கு மிகவும் சந்தோஷமே. எப்படியாவது என்கருத்தை என் தாய் தந்தையர்கள் அறியவேண்டியது அவசியம். அதை எப்படி அவர்களுக்குத் தெரியப்படுத்துவதென்ற கவலையெனக்கிருந்தது. அக்கவலை எனக்கிப்போது நீங்கிவிட்டது. இனி நம்முடையகாரியம் முடிந்ததென்று நினைத்துக் கொள்ளு

ங்குவென, மநோகரன், உன் தைரியத்திற்கு நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன் சுந்தரி யென்னும்போது, தோழிப் பெண்கள் சமீபத்தில்வர, சுந்தரி அவர்களுடன் சேர்ந்து கொண்டு அரண்மனைக்குச்சென்றாள்.

அவர்களைப் பின்தொடர்ந்து அதிக யோசனையுடன் மநோகரன் மெள்ள நடந்தான். அக்காலத்தில் சுந்தரிக்கெதிராக, ஜடைக்கிழவியானவள் ஆவென்று கூச்சலிட்டுக் கொண்டு ஓடிவரும்போது சுந்தரியைக்கண்டு, கெடுவான் கேடுநினைப்பான், உங்களுக்கொரு குறையுமில்லை யென்று சொன்னவுடன் நிற்காமல் ஓடிவிட்டாள். அவளைப் புதிதாய்க்கண்ட சகிகள், இக்கிழவியாரென்றுகேட்க, சுந்தரி தனக்குத் தெரிந்தவரைக்கும் கிழவியைக்குறித்து அவர்களுக்குச்சொன்னாள். சூரியனும் அஸ்தமித்துவிட்டான். எல்லாரும் அரண்மனையை யடைந்தார்கள்.

---

## 11. இரதியும் சுந்தரியும் சம்பாஷித்தல்.

சிங்காரத்தோட்டத்தில் மநோகரனும் சுந்தரியுமிருந்த மாதிரியைக் கண்டு, சந்திரருடன் சந்தேகித்துத் தன் பிதாவினிடம் சொல்ல, அதற்கு அவர் மநோகரனுக்குச் சில புதிய ஏற்பாடுகள் விதித்தாரென்பதைக்கேட்ட அவர் மனைவி தன் அருமைச்சுந்தரியை விசாரிக்கவேண்டுமென்று அவளைத் தன்னறைக்குள் அழைத்து, "என்கண்ணே! என்ன சங்கதி? உன் பிதா மநோகரன்மீது கோபமாயிருப்பதற்கு நீதான் காரணமாமே? என்று கேட்டாள். அதற்குச் சுந்தரி, "பிதா கோபமாயிருப்பது உண்மைதான். நான் காரணமல்ல அம்மா" என்றாள்.

"கோபத்திற்குக்காரணம் உனக்குத்தெரியாதா சுந்தரி?"

"சந்திரருடன் அவரிடத் தென்னமோ சொன்னான். அதைக்கேட்டு அவர் கோபங்கொண்டிருக்கிறார்."

"சந்திரருடன் என்ன சொன்னான்? உனக்குத் தெரியுமா?"

"அது எனக்குத் தெரியாது அம்மா."

"என் கண்மணியே! நீ என்னிடத்து ஒன்று மொளிக்கவேண்டாம், சிங்காரத்தோட்டத்தில் நடந்த விசேஷமென்ன?"

"அம்மா உனக்குத் தெரியாத தொன்றுமில்லை. உனக்குச் சந்திரகூடன் எல்லாம் சொல்லியிருக்கிறனே."

"ஆனல் அவன் சொல்லியவையெல்லாம் உண்மைதானே?"

"அவன் புத்திசாலியா யில்லாவிட்டாலும் பொய்சொல்லுகிறவனல்லவே?"

"அப்படியானல் உன் பிதாவின் கோபத்திற்கு நீதான் காரணமென்று எனக்குத் தோன்றுகிறது."

"அம்மா! உலகத்தில் அவரவர் குற்றம் அவரவர்களுக்குத் தெரிகிறதில்லை. எப்படியாவது பிறரிடத்தே குற்றங்கண்டுபிடிப்பது சில மாந்தர் குணமாக்கும்? பால்லியமுதல் ஒன்ருய்க்கூடி விளையாடிவந்த ஒரு ஆண்மகனும் ஒரு பெண்மகளும் யுக்தவயதடைந்தபோது வீட்டிலுள்ள பெரியோர் செய்யவேண்டிய கடமையைச் செய்யாது விட்டால் யார் குற்றமோ?"

"சுந்தரி! இப்போது செய்திருக்கிற ஏற்பாடு சரிதானே?"

"இதை முன்னமேயே செய்திருக்கவேண்டும். இப்போது செய்தென்னபயன்.?"

"இனிக் கிரமமாய் நடக்க, சுந்தரி."

"என்னருமை அன்னையே! நீ இதைச் சொல்லும்போது எனக்கு மிகவும் விசனமுண்டாகிறது. இனிக் கிரமமாய் நடக்கவென்ருல், இப்போது நானேதாவது தகாத காரியஞ் செய்துவிட்டேன அம்மா?"

"யுக்தவயது வந்தபின் பெண்கள் காதலிப்பது நியாயமாயினும், தங்கள் சாதியைச் சேராத புருஷர்கள்மீது காதல்கொள்வது தர்மமோ?"

"நம்முடைய சாதியைச் சேராத அன்னியனொருவனைப் பிள்ளையெனப் பிரேமதிக்க வீட்டில் வளர்த்து, அவனுடன் சேர்ந்து உல்லகேளிப்பது சிற்றரசனென்னும் பட்டப்பெயர் தாங்கிய க்ஷத்திரியர்களுடைய தர்மமோ அம்மா?"

"அது இருக்கட்டும் சுந்தரி! இவ்வாண்மகனைச் சொந்தக்காரருக்கு உன்னைக் கலியாணஞ் செய்துகொடுக்க உன் பிதா தீர்மானித்திருக்கிறார். உன்னிஷ்டமென்ன?"

"தீர்மானித்தப் பிறகு என்னிஷ்டமென்ன?"

"உனக்கு அவனை விவாகஞ் செய்துகொள்ள இஷ்டந்தானா?"

"தீர்மானிப்பதற்கு முன்னமே கேட்டிருக்கவேண்டும்."

"சுந்தரி! இதெல்லாம் என்னபேச்சு. நான் கேட்கிறதற்குச் சரியான பதில் சொல்லு."

"சரியான கேள்விகள் கேட்டாலல்லவோ? என் அம்மா! நீங்கள் சுலோசனருக்குப் பெண் தேடுகிறீர்களா? அல்லது உங்கள் பெண்ணுக்குப் புருஷனைத் தேடுகிறீர்களா?"

"என்ன சுந்தரி! நீ கேட்பது எனக்குத் தெரியவில்லையே?"

"இது தெரியவில்லையோ அம்மா? நான்மாத்திரம் சரியான பதில் சொல்லவேண்டும். உனக்கு என் கேள்விகள் அர்த்தமாகிறதில்லை. வெகு அழகு. சுலோசனருக்கு நீங்கள் பெண் தேடுகிறவர்களாயிருந்தால், நல்ல பெண்ணையே தேடுவீர்கள். அவர் நல்ல அதிர்ஷ்டசாலியே. ஒருவேளை நீங்கள் உங்கள் பெண்ணுக்குப் புருஷனைத் தேடுவதாயிருந்தால், அப்பெண்ணுக்குத் தகுந்த புருஷனைத் தேடவில்லை. அது அப்பெண்ணின் துரதிர்ஷ்டமே."

"சுந்தரி! உனக்கிப்போது கோபம் வருகிறதுப்போலிருக்கிறது? இன்னொரு சமயம் பேசுவோம். நீ மறுபடியும் யோசனை செய்துபார்."

"நான் யோசிப்பதற்கு இது ஒரு பெரிய விஷயமல்ல. தேடிப்பிடித்தீர்களே நல்ல கிழக்கோட்டானை. இதற்கு நான் யோசிக்கவேண்டுமோ?"

"என்கண்மணியே! உனக்கோ கலியாணஞ் செய்து கொள்ளத்தக்க வயதாகிவிட்டது. நம்முடைய பந்துக்களிலாவது அல்லது நம்முடைய சாதியிலாவது தகுந்த புருஷனைக் காணோமே? நீ யாரை விவாகஞ் செய்துகொள்ளப் போகிறாய்?"

"ஒருவருமில்லையென்றால் சும்மாயிருக்கிறேன்."

"அது ஸ்திரீகளுக்கழகோ? பார்ப்போர் என்னசொல்லுவார்கள்?"

"புருஷன் அகப்படவில்லை, கலியாணமில்லாமலிருக்கிறாளென்று சொல்லுவார்கள்."

"அப்படிச் சொன்னால் ந்யாயமாயிற்றே. 'இது யாருடையபெண்? எவ்வளவு வயதாகிவிட்டது? இன்னும் கலியாணமாகாமலிருந்தால் பெண் கெட்டுவிடுவாளோ? இவள் தாய்தந்தைகளுக்கு புத்தியில்லையா' வென்று எங்களைத்தானேபழிப்பார்கள்?"

அம்மா! நம்முடைய சாதியிலேயே புருஷனகப்படவில்லை யென்று நீதானே சொன்னாய். புருஷனில்லாமலே எப்படியம்மா கலியாணஞ் செய்துகொள்வது?"

"என்ன புத்திசாலி சுந்தரீ. உனக்குப் புருஷனே யகப்படவில்லையென்று நான் சொல்லவில்லையே. உனக்குத் தகுந்த புருஷனைக் காணோமென்றுதானே சொன்னேன்."

"இதி லென்னவிசேஷம் அம்மா? தகுந்த புருஷனில்லையென்றால் தகாதபுருஷனை விவாகஞ்செய்துகொள்ளவா? தகாத புருஷனென்று நினைத்ததினாலல்லவோ மனோகரனிடத்துத் தனியே பேசியதே குற்றமாய்விட்டது? அப்பாவுங்கோபங்கொண்டிருக்கிறார்."

"பிதாவின் பேச்சை யிப்போது எடுக்கவேண்டாம். நாமிருவருமே யோசிப்போம். யாரை நீ கலியாணஞ் செய்துகொள்ளப்போகிறாய்?"

"நான் யாரைக்கண்டேன். நீங்கள்தான் யோசிக்கவேண்டும்."

"என்னிடத்தில் உன்னிஷ்டத்தைச் சொல்ல உனக்கு நாணமும் பயமும் வேண்டாம். சொல்லம்மணி."

"என்னிஷ்டத்தைக்கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டியதில்லையே. அது இப்போது என் அப்பாவுக்கும் உனக்குந் தெரியுமே. சந்திரகுடன் சிங்காரத் தோட்டத்தில் கண்டதை அப்பாவினிடத்து சொன்னதும், அதற்கப்பா சில நூதன ஏற்பாடுகள் செய்ததும் இரகசியங்களல்லவே!"

"மனோகரனிடத்து நீ சிறிது கொஞ்சி விளையாடிப்பேசியதை கேட்ட உன் பிதாவுக்கு இவ்வளவு கோபம் வந்துவிட்டதே. அவனைத்தான் விவாகஞ் செய்துகொள்வேனென்றால் அவர் என்னசெய்வாரோ?"

"என்னம்மா! நீ பேசுவது ஒன்றுஞ்சரியாகவில்லை. பிதாவின்பேச்சை யெடுக்கவேண்டாம், நாமிருவருமே யோசிப்போமென்று சொல்லிவிட்டுப் பிறகு பிதா என்னசெய்வாரோவென்கிறாயே? இதுநியாயமா? என்னிஷ்டத்தை நான் தெரிவித்தேன் கலியாணமோஎனக்குபிறகுஉங்களிஷ்டம்."

"பிதாவின் இஷ்டப்பிரகாரம் நடக்கவேண்டாமோ?"

"அப்படியானால் பிதாவே அவருக்கிஷ்டமான ஒரு கிழமோ அல்லது குருடோ அல்லது நொண்டியோ அல்லது இவையெல்லாம் பொருந்திய ஒரு புருஷனையோ பிடித்து விவாகஞ் செய்துவிடலாமே. என்னிஷ்டத்தைக் கேட்பானேன்?"

"என்ன கோபம் வருகிறது சுந்தரி உனக்கு?"

"எனக்கு வராமல் யாருக்கு வரும். சுலோசனருக்கு வருமோ?"

"உன்னிஷ்டத்தை யறிந்தேன் சுந்தரி. அதுதான் என்னிஷ்டமும்."

"என்னையின்ற அன்னையே! உன்னிஷ்டத்தை நான் முன்னமே யறிந்திருக்கிறேன்."

"எப்படியறிந்தாய் சுந்தரி? வெகு ஆச்சரியமாயிருக்கிறது?"

"சத்தியபுரியில் நீயும் அப்பாவும் தனியே பேசிக்கொண்டிருந்தீர்களே."

"ஆகா! அது உனக்குத் தெரிந்துவிட்டதா? சரி. உன் மீது ஒன்றுங் குற்றமில்லை. நீ இவ்வாறு மனோகரனிடத்து நடந்துகொண்டதற்கு நான்தான் காரணம்."

"என்னைப்பெற்ற தாயானபடியால், நீயே எல்லாவற்றிற்குங் காரணம்."

"அது சரி சுந்தரி. நம்முடைய இஷ்டப்பிரகாரம் எப்படி விவாக முடியும்?"

"எல்லாம் முடியும் பார் அம்மா."

"என்னதைரியம் உனக்கு சுந்தரி? சத்தியபுரி சுந்தரியம்மன் கிருபையால் நமதிஷ்டம் நிறைவேறவேண்டும்." என்று சொல்லி இரதி பேச்சை நிறுத்த, சுந்தரி தன் சகிகளிருந்த அறைக்குச் சென்றாள். தாயும் பெண்ணும் பேசியதை அடுத்த அறையிலிருந்த வேலைக்காரி இலட்சுமி கேட்டு, சாத்தனிடத்துச் சொன்னாள்.

---

## 12. கள்ளர்கள் தந்திரம்.

காலசெட்டிக்குச் சொல்லிய பிரகாரம் எட்டாவது நாள் சாயந்திரம் இலட்சுமி ஆனந்தபுரிக்கு வடக்கே மாந்தோட்டத்திலுள்ள பிள்ளையார் கோயிலுக்குச் சென்று, அவ்விடத்தில் அவளுக்கு முன்னமே காலனுடன் வந்து காத்துக்கொண்டிருந்த ஜாதனிடத்துப் பேசி ஆயிரம்பொன்னை முன்பணமாக வாங்கிக்கொண்டாள். பணத்தையுங் கொடுத்து, இலட்சுமியைக் காட்டிக்கொடாமல் காப்பாற்றுவதாக வாக்குத்தத்தமுஞ் செய்த ஜாதன், "இலட்சுமி! நீ இவ்வேலையை யெப்படி முடிப்பாய்?" என, "நான் சொல்லுகிறபடி நீங்கள் நடந்தால் முடியும். இவ்வூர் அரண்மனைக்குப் பின்பக்கத்தி லிருக்கிற சிறிய பூந்தோட்டத்தில்

நிலாக்காலங்களில் அப்பெண் வந்து வேடிக்கையாக உலா வுவது வழக்கம். இன்றைக்கு எட்டாவது நாள் இரவு எட்டுமணிக்குமேல் நிலவுவருகிறது. அன்றையதினம் நான் ஏதோ இரகசியம் பேசவேண்டுமென்று சொல்லி சுந்தரி யைத் தனியே அத்தோட்டத்திற்குள் அழைத்துக்கொண் டுவந்துவிடுகிறேன். அத்தோட்ட வாசற்படிக்கு நேராக மேலே யெரிந்துகொண் டிருக்கும் விளக்கு நின்றவுடன், நீங்கள் சரேலென்று தோட்டத்திற்குள் வந்துவிடுங்கள். பிறகு சுந்தரியைச் சுலபமாய் நீங்கள் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போகலாம்" என்று இலட்சுமி கூறி யதைக் கேட்ட ஜாதன், "இதென்னவாச்சரியம்! நாம்செய் யப்போகிற காரியம் எவ்வளவோ இரகசியமாய் நடக்கவே ண்டியதாயிருக்க, நல்ல நிலவுகாலத்தில் வந்து பெண்ணைக் கையைப்பிடித்து அழைத்துப்போகலாமென்கிறாய். அப் பெண்ணென்ன ஒன்றுந் தெரியாத சிறு குழந்தையா? ஏது, எங்களை நடுத்தெருவி லிழுத்துவிட்டு வேடிக்கைப் பார்க்க வெண்ணியிருக்கிறாயோ இலட்சுமி?" என்று சொ ன்னான். அதற்கு இலட்சுமி, "ஜாதரத்தின செட்டியாரே! உங்களுக்கிப்போது அப்படித்தான் தோன்றும். நான்சொ ன்னபடி காரியம் முடியும்போது என் சாமர்த்தியத்தை மெச்சிப் பேசப்போகிறீர்கள். என்னிடத்தில் ஒரு மருந் திருக்கிறது. அதை அப்பெண் தலையில் தடவிவிட்டால், அவள் புத்திமயங்கி வாய்திறந்து பேசாமலே நீங்கள் சொ ல்லுகிறபடி நடப்பாள்." என்றுகூற, ஜாதன் தைரியமடை ந்து, "மருந்தைத் தடவிய பிறகு அப்பெண் எத்தனை நாழி கை புத்திமயங்கி, பிறர் சொல்லும் வண்ணம் நடப்பாள்?" என்று வினவ, "சுமார் பத்துநாழிகை வரைக்கும் மருந்தின் வயப்பட்டு மயங்கியிருப்பாள். அதற்குள்ளாக நீங்கள் உங்களிடத்திற்குக் கொண்டுபோய்விடலாம். நான் சொல் லிய தோட்டத்திற்கு வெளியே இரவு ஒன்பது மணிக்கு மேல் ஜனங்கள் போக்குவரவற்று நிசப்தமா யிருக்குமாத

லால், உங்களுக்கு ஒரு கஷ்டமும் நேராது" என்று இலட்சுமிசொன்னதற்கு மிகவும சந்தோஷித்து ஜாதன், "இலட்சுமி! நீ குறித்த காலத்திற்குள் நான் சுந்தரியைப்பார்க்க விரும்புகிறேன்" என, இலட்சுமி, "அதற்கென்ன, நீங்கள் தான் வியாபாரிகளாச்சுதே. நாளையதினம் சாயங்காலம் உங்களிடத்துள்ள இரத்தினம், முத்து, பவளம் இவைகளை யெடுத்துக்கொண்டு அரண்மனைக்கு வந்துவிடுங்கள். நான் அவ்விடத்திலிருந்து, தங்களெண்ணத்தை முடிக்கிறேன்" என்று சொல்லவும், "சரி, நாங்கள் அப்படியே நாளைக்கு வருகிறோம்" என்று ஜாதனும் காலனும் போய்விட்டார்கள். பிறகு இலட்சுமி அரண்மனைக்குத் திரும்பிவரும்போது, "இன்றைக்கு நமக்கு நல்லஅதிர்ஷ்டம். கஷ்டப்பட்டுச் சம்பாதித்தவர்கள் இவ்வளவு பணங்கொடுப்பார்களா? பேர்வழிகளென்னமோ சூதான ஆசாமிகள்தான், உயர்ந்து வளர்ந்து நன்றாய்ப் பருத்துப்பார்க்கப் பயங்கரமான இராட்சதன்போ லிருக்கிறான் வியாபாரி. இவர்கள் வியாபாரிகளல்லபோலிருக்கே? சுந்தரி! மகாலட்சுமிபோன்ற உனக்குக் கெடுதி நினைப்பவர்கள் தலையாயிரஞ்சுக்கலாய் வெடிக்குமே. உன்னையா அத்திருட்டு வியாபாரிக்குக்கொடுப்பேன்! ஒருநாளுமில்லை. பெண்ணுசைப் பிடித்தலையும் அத்துஷ்டனைத் தகுந்தமாதிரியாகச் சிட்சிக்கிறேன். பணத்தைப் பறித்துக்கொண்டு ஒரு பெண்ணையும் அவர்களுக்குக் கொடுத்து ஏமாற்றுகிறேன். இவ்விஷயத்தைச் சாத்தனுக்குச் சொல்லவேண்டும். நமக்கு ஒரு புருஷதுணையில்லாவிட்டால் முடியாது. அவனுக்குத் தெரிந்தால் என்ன கெடுதிநேரிடும்? ஒன்றும் நேராது. அவன் மிகவும் நல்லவன். அவனும் ஏழையானதால் இப்பணத்தில் பாதி எடுத்துக்கொள்ளட்டுமே." என்று யோசித்துக்கொண்டு, முதலில் எண்ணிய வண்ணம் அரண்மனைக்கு போகாமல் சாத்தன் வீட்டையடைந்தாள்.

மறுநாள் சாயந்திரம் சந்திரசேகரர் மந்திரியுடன் வண்டியிலேறிக்கொண்டு, முன்னே நாலு போர்வீரர் குதிரைகள்மீது போக, பின்னே நாலுபேர் அவ்வாறேவர, ஆனந்தபுரியைச் சுற்றிப்பார்க்கச் சென்றார். அச்சமயத்தில் அரண்மனை வீதியில் ஒரு சிறுவன் தலையில் ஓர்பெட்டியை வைத்துக்கொண்டு, "இரத்தினம், பவளம், முத்து வாங்கலையோ" என்று உரத்திச் சத்தமிட்டுச் சொல்ல, அவன் பின்னே வியாபாரி வேஷந் தரித்த ஜாதன் வந்துகொண்டிருந்தான். அவர்கள் அரண்மனை வாசற்படியில் வந்து நிற்கக்கண்ட இலட்சுமி, உள்ளே சென்று பிரபுவின் மனைவி இரதிக்குத் தெரிவித்து மறுபடியும் வெளியே வந்து வியாபாரியை அழைத்துப்போய் அரண்மனைக் கலியாண மண்டபத்தில் விட்டாள். வியாபாரியின் சங்கதியறிந்த சாத்தனும் அங்கே சென்றான். அவ்விடத்தில் சுந்தரி தன்னிரு சகிகளுடன் ஓர்பக்கமாய் நிற்க, இரதி மற்றோர் பக்கத்திலிருந்த ஓர் ஆசனத்தி லுட்கார, இலட்சுமி அவளருகில் நின்றுகொண்டாள். பிறகு வியாபாரியின் வேலைக்காரன் பெட்டியிலிருந்த சாமான்களில் சிலவற்றையெடுத்து வெளியே வைக்க, இலட்சுமி அவைகளை யொவ்வொன்றாக எடுத்து இரதிக்குக் காட்டினாள். அங்கிருந்த ஸ்திரீகளில் சுந்தரி இன்னாளென்று வியாபாரிக்குக் காண்பிக்க வெண்ணிய இலட்சுமி ஓர் முத்துமாலையைக் கையி லெடுத்துக்கொண்டு, இது வெகு அழகாயிருக்கிறது, சுந்தரி யம்மணி! இதோ இந்த மாலையைப் பாரென்று சொல்லி அவளிடத்துக்கொடுத்தாள். பிறகு வியாபாரி, சுந்தரியை நோக்கி, அம்மணி! நீங்கள் அதைக் கழுத்திலணிந்து பார்க்கலாமென்று சொல்ல, சுந்தரி அவ்வாறே செய்ய, இலட்சுமி, அம்மணி! இம்முத்துமாலை முன்னிருந்ததைக் காட்டிலும் அதிக அழகும் ஒளியு மடைந்திருக்கிறதென்று கூறினாள். பிறகு சுந்தரி அதைக் கையிலெடுத்துக்கொண்டு, "இதன் விலையென்ன?" என்று வியாபாரியைக் கேட்டாள்.

வியா:—"உங்கள் மனதிற்குப் பிடித்தால் விலை சொல்லுகிறேன்."

சுந்:—"விலையைச் சொன்னபிறகு என்னிஷ்டத்தைச் சொல்லுவேன்."

வியா:—"பவளங்கள் தேவையில்லையா? நல்லவையாயிருக்கின்றன."

சுந்:—"இம்முத்துமாலையின் விலையென்ன?"

வியா:—"நல்ல கெம்பு, பச்சை இவைகளிருக்கின்றன அம்மணி."

சுந்:—"முத்துமாலையின் விலையைச் சொல்லும்."

வியா:—"முத்துமாலைதானுவேண்டும்?"

சுந்:—"இதன் விலையைச் சொன்ன பிறகே யவைகளைப்பார்ப்பேன்."

வியா:—"வேறொன்றும் வேண்டியதில்லையோ?"

சுந்:—"இம்மாலையின் விலையைச்சொல்லமாட்டீரோ?"

வியா:—"நல்ல நல்ல பவளங்களிருக்கின்றன அம்மணி!"

சுந்:—"இதேது சங்கடமாயிருக்கிறது. நானொன்று கேட்கப் பதிலொன்றாக விருக்கிறது. இந்த மாலையின் விலையைச் சொல்லுவீரா யில்லையா?"

வியா:—"வாங்கிக்கொள்வது நிச்சயந்தானே?"

சுந்:—இதென்ன இலட்சுமி! புது வியாபாரமாயிருக்கிறது. எத்தனை தரம் நான் விலையைக் கேட்டாலும் அதைவிட்டு வேறென்னென்னவோ சொல்லுகிறார். கேட்டதிற்குப் பதில் சொல்லவேண்டாமோ?"

இல:—"இந்த வியாபாரிக ளிப்படித்தான். என்ன ஐயா! முத்துமாலையின் விலையைச் சொல்லுங்களேன்."

சுந்தரி யின்னாரென்று தெரிந்துகொண்டதுமுதல் ஜாதரத்தினசெட்டி புத்திமயங்கினவனானான். அவளிடத்துப் பேசுவதே அவனுக்கு மிகவும் ஆனந்தமாயிருந்தது. அப்போது அவன் ஏதோ சிந்திக்கத் தொடங்கிவிட்டான். கே

ட்டதற்குப் பதில் சொல்லிவிட்டால் எங்கே பேச்சு நின்று விடுமோவெனப் பயந்து முடிவான பதிலைச் சொல்லாமலே சம்பாஷணையை விஸ்தரித்துக்கொண்டு போனான். அந்த முத்துமாலையைச் சுந்தரிக்கு இனாமாகக் கொடுத்துவிடலாமாவென்று அவன் அடிக்கடி எண்ணுவான். மறுபடியும் இனாமாக வெப்படிக் கொடுப்பதென்று திகைப்பான். பிறகு என்ன அழகு சுந்தரியென்று அகமகிழ்வான். முத்துமாலைக்குவிலையும் வாங்கலாமோ வென்று ஐயுறுவான். இம்மாதிரி யோசனையி லாழ்ந்துவிடவே, சுந்தரி கேட்டதற்கு வியாபாரி தகுந்த விடை சொல்லாமலே பேசினான். பிறகு சுந்தரி கோபிப்பதைக் கண்டு, இலட்சுமி கூறியதைக் கேட்டவுடன் வியாபாரி, நீங்களென்னவேண்டுமானாலுங் கொடுங்களென்றான். "இதென்ன இலட்சுமி! இப்படியும் ஒருவியாபாரியுண்டா? நீங்களென்னவேண்டுமானாலுங் கொடுங்களென்றுசொல்லுவது சரியா?" என்று இதுகாறும் சும்மாயிருந்த இரதி கேட்டவுடன், இவர்களுக்கு நேரே மேன்மாடியில் நின்று சன்னல்வழியாகப் பார்த்துக்கொண்டிருந்த சந்திரசூடன் வியாபாரியினுடைய முகத்தை யுற்று நோக்கி யேதோ சந்தேகங்கொண்டு திடீரலென்று கீழிறங்கிவந்து சில கேள்விகளைக் கேட்க, அவைகளுக்குச் சரியான சமாதானம் வியாபாரி சொல்லாமையினால், அவர்கள் வியாபாரிகளல்ல, ஏதோ சூதுசெய்ய அரண்மனையில் நுழைந்த துஷ்டர்களென்று நிச்சயித்துக் கோபங்கொண்டு, அவர்களை மரியாதையில்லாமல் கடிந்துபேசினான். அதைக் கேட்ட வியாபாரி, சிறிது பயந்தபோதிலும் அதை வெளி காட்டாமல், சந்திரசூடன் வரம்புகடந்து கூறிய மொழிகளைத் தைரியமாய் நிந்தித்துப் பேசியதைச் செவியுற்ற சந்திரசூடன் அதிக கோபங்கொண்டு வியாபாரியையும் அவனுது வேலைக்காரனையுங் கண்டபடி வைது, ஓர் போர்வீரனை வரவழைத்து அவர்களை அரண்மனைக்கு வெளியிற்கொண்டுபோய்விடும்படி உத்தரவளித்தான். அச்சமயத்தி லின்

னது செய்வதெனத் தெரியாமல் இலட்சுமி மிரளவிழிக்க, அங்கிருந்த மற்றவரெல்லாம் திடுக்கிட்டுச் சும்மாயிருக்க, தன் குமாரன்செய்தது நியாயமென்று, முதலிலேயே வியாபாரியினிடத்துச் சந்தேகங்கொண்ட இரதி எண்ணினாள். பிறகு சந்திரசூடன் புருஷர்களில்லாதகாலத்தில் ஸ்திரீகள் எந்த வியாபாரமுஞ் செய்யக் கூடாதென்று தன் தாயாருக்குச் சொல்லிவிட்டுப் போனான். ஆனந்தபுரிக்கு வருவதற்கு முன்னமேயே அவனுக்கு அவ்வூரில் கள்ளர் பயம் உண்டென்ற சந்தேகமிருந்தபடியால், அவன் புதிதாய் யாரைக்கண்டாலும் சந்தேகிப்பது வழக்கம். அதற்குச் சரியாக வியாபாரி வேஷம் பூண்டுவந்த கள்ளர் தலைவனை ஜாதன் அகப்பட்டுக்கொண்டான். தப்பித்துக்கொண்டது பெரிய அதிர்ஷ்டமென வெண்ணினாலும், சந்திரசூடனைச் சும்மா விடுவதில்லையென்று கோபத்துடன் தீர்மானித்து, போர்வீரன் வந்து வெளியிலே பலாத்காரமாய்த் தள்ளுமுன், ஜாதன் தன்னுடன் வந்த காலனை யழைத்துக்கொண்டு அரண்மனையினின்று வெளியே சென்றான்.

## 13. சந்திரசூடன் மறைதல்.

சுந்தரியும் மனோகரனும் சிங்காரத் தோட்டத்திலிருந்த மாதிரியைக் கண்டு சந்திரசூடன் தன்பிதாவுக்குச்சொல்லி சில நூதனமான ஏற்பாடுகளைச் செய்துவைத்தானென்று முன்னமே கூறியுள்ளோம். அன்றுமுதல் மனோகரன் தானாகப்போய் ஒருவரிடத்தும் பேசுவதில்லை. அரண்மனையிலிருக்கும்போது அவன் தன்னறையைவிட்டு வெளியேவருவதில்லை. சுந்தரி முதலான ஸ்திரீக ளிருக்குமிடத்திற்கு அவன் போகக்கூடாதென்று பிரபு கட்டளையிட்டார். அதனால் அவன் சுந்தரியைப் பார்ப்பதற்குச் சமயம் அகப்படவில்லையேயென்று வியாகூலமடைந்தான். ஆனால் இரதிமாத்திரம் அடிக்கடி வந்து மனோகரனை விசாரிப்பது வழக்கம். அதில் அவனுக்குத் திருப்தியில்லை. சுந்தரி

ஏதாவது கடிதமெழுதி யனுப்பாளாவென்றெண்ணுவான். சகிகள் வந்து ஏதாவது சமாச்சாரஞ் சொல்லார்களாவென்று நினைப்பான். இதுகாறும் ஒன்றும் தெரிவிக்காதபடியால் சுந்தரியின் மனம் மாறிற்றோவென்று ஏக்கமுறுவான். இச்சமயத்தில் ஒருபகல் சம்பாதி மனோகரன் அறைக்குவந்து நெடுநேரம் பேசியிருந்து, இரதிக்கு மனோகரனிடத்துள்ள அபிப்பிராயத்தைத் தெரிவித்துப் போயினான். பிறகு மனோகரன் தைரியங்கொண்டு, சுந்தரியின் எண்ணம் மாறவில்லை, அவள் தாய் அவளிஷ்டத்தை யனுசரித்திருக்கிறபடியால், நாம் இன்னும் சில நாளைக்கு இவ்வரண்மனையி லிருக்கலாமென் றெண்ணினான்.

அன்று சாயந்திரம் சுந்தரி தன் தோழிகளுடன் வழக்கம்போல் சிங்காரத் தோட்டத்திற்குச் சென்று, பேசிக்கொண்டே வெகுதூரம் நடந்து காட்டிற்கருகே போய்க்கொண்டிருக்கும்போது, சிறிது தூரத்தில் ஓர் யௌவன புருஷன் நல்லாடையுடுத்திக் கையிலிருந்த தடியால் பூமியைத் தட்டிக்கொண்டு நடந்துவருவதைக் கண்டாள். தன் சகிகள் அப்புருஷனைப் பார்க்கவில்லையென் றறிந்த சுந்தரி அவர்களுக்குத் தெரியாமலே அவனை யடிக்கடி சந்தேகத்துடன் நோக்கினாள். அவன் நடையைக் கண்டு மனோகரன்தானோ வென்று அகமகிழ்ந்து சுந்தரி பார்க்கையில் அவன் ஓர்மரத்தடியில் நின்றான். அதைக்கவனித்த சுந்தரி மனோகரன்தானென நிச்சயித்து, தன் சகிகளை நோக்கி, இப்போது மனோகரனிவ்விடம் வந்தால் நான் பேசலாமாவென்று கேட்க, சுபாங்கனை "பேசினாலென்ன? எப்போதும் மனம் அவரிடத்தே யிருக்கலாம், பேசக்கூடாதாவென்ன" என்று நாலுபக்கமும் சுற்றிப்பார்த்துச் சங்கதியை யறிந்தாள். அதை யவள் மற்றொரு தோழிக்குத் தெரிவிக்க, இருவருமாகப் பின்தங்கி மெள்ளநடந்தார்கள். சுந்தரி மனோகரனிருந்த விடத்தை நோக்கிச் செல்ல, அவனைக் கண்டு மகிழ்ந்து சந்திரசேகரர் சில நாளைக்குமுன்

தனக்கு விதித்த கட்டளையை மறந்தான். சிலநாளாகப் பாராததினா லுண்டான அதிக ஆசையால் மனோகரனும் சுந்தரியும் தங்களைத்தவிர வேறொருவரு மக்காட்டிலில்லையென மதித்தவர்போன்று ஒருவனையொருவர்கண்டுகளித்து ஒரு மரத்தின்கீழ்த் தங்கி பேசவாரம்பித்தார்கள். சற்றுநேரத்திற்கெல்லாம் பேச்சுநின்றது. சுந்தரி திடீரலென்று எழுந்து தன் காதலனை விட்டு விலகிப்போய் பயந்து நின்று தன் சகிகளை நோக்கினாள். இதற்கென்ன காரணம்? அவர்கள் இருமனமும் ஒருமனமாய் லயித்துப் பேசியிருந்த விடத்தை நோக்கி தற்செயலாய் சந்திரசூடன் வந்தான். அவன் தன் சகோதரியை முதலில் கண்டு, சுந்தரி தனியே காட்டிற்குச் சமீபமாய் வருவானேனென்று அஞ்சினான். பிறகு மரத்தின் பக்கத்திலிருநத மனோகரனைக் கண்டவ்டன் அவன் முகம் சிவந்து கண்களில் கோபப்பொறிகள் தோன்றின. இதை நன்றாய்க் கவனித்த சுந்தரி மிகவும் பயந்து அசைவற்று நின்றாள். தன்னன்பான சுந்தரியின் நிலைமையை யறிந்த மனோகரன் மனந்தாளாமல், அவ்விடம்வந்தவன் அவள் சகோதர னென்பதையும் மறந்து கோபங்கொண்டு கீழேவைத்திருந்த தடியை கையிலெடுத்துக்கொண்டான். அத்தடிக்குள் மிக்க கூர்மையான கத்தியுண்டு. மேலே பார்ப்பதற்கு தடிபோலிருக்கும். ஆபத்துக்காலத்தில் அதுவே வாளாயுதம். இதுகாறும் வாய்திறந்து ஒருவராவது பேசவில்லை. ஏன்? சுந்தரிக்குப் பயம் காரணம். மற்றிருவர்களுக்குங் கோபம் காரணம். சற்றுபொறுத்து சந்திரசூடன் சுந்தரியை நோக்கி "உன் சகிகளெங்கே? அல்லது நீ தனியே வந்திருக்கிறாயா?" என்று கேட்க, சுந்தரி பேசாமல் தன்னிரு சகிகளுமிருந்த விடத்தை நோக்கினாள். பிறகு அவளுடன்பிறந்தான், "நீ அவர்களைப் பிரிந்து இவ்விடத்திலென்ன செய்கிறாய்?" என, அதற்குச் சுந்தரி மௌனஞ் சாதித்தாள். வேறென்னசெய்வாள்? "உன் மீதுங் குற்றமிருக்கிறது சுந்தரி! உனக்குத் தகுந்த ஏற்பா

டும் செய்துவைக்கிறேன். நீ இனி அரண்மனையைவிட்டு வெளியே வரமாட்டாய்" என்று சந்திரசூடன் சொல்லி, அவ்விடத்தில் இவனைக் கவனியாதவன் போல உலாவிக் கொண்டிருந்த மனோகரனை இழிவாகக் கடிந்துபேசினான். மனோகரனுக்குக்கோபமதிகரிக்கவே இருவருக்கும் பலமாய் வாக்குவாத முண்டாயிற்று. இனி முற்றினால் சண்டையுண்டாகி இவர்களுக்கு ஏதாவது ஆபத்து நேரிடுமென் றறிந்த சுந்தரி பயந்து, "அண்ணா! என்மீது குற்றமிருக்க, நீங்கள் ஒருவருக்கொருவர் வித்தியாசமாகப் பேசிக்கொள்வது நியாயமல்லவே" என்று சொன்னாள். பயனில்லை. மறுபடியும் அவள் அண்ணனைச் சும்மாயிருக்கக் கெஞ்சிக்கேட்டுக்கொண்டாள். அவர்கள் கோபம் சிறிது தணிய, சுந்தரி சகிகளுடன் அரண்மனைக்குத் திரும்பினாள்.

பிறகு சந்திரசூடன் ஏதோ யோசித்துக்கொண்டு கோபத்தால் இன்னவிடம் போகிறோமென்று தெரியாமல் காட்டில் நுழைந்தான். மனோகரன் கோபம் முற்றும் தணிந்தவனாய்த் தான்செய்தது பிசகென்று நினைத்து, தன்னிலைமையையுங் கருதி, சந்திரசூடனைச் சமாதானஞ் செய்யவேண்டுமென்றும், அப்போது சூரியனஸ்தமிக்குஞ் சமயமானதால் அவன் தனியே காட்டிற்குள் போவது சரியன்றென்றும் எண்ணி அவனைப் பின்தொடர்ந்தான். சிறிதுதூரம் காட்டிற் சென்றவுடன் உக்கிரமாக சண்டைப் போட்டுக்கொண்டிருந்த இரண்டு காட்டுப்பன்றிகளிலொன்று அதிகோபத்துடன் சந்திரசூடனை எதிர்த்து வருவதுபோலவோடிவந்தது. அப்போது அவன் கையில் ஆயுதமொன்றுமில்லாம லிருந்ததைக் கண்ணுற்ற மனோகரன் வேகமாயோடி தன் கைத்தடியிலிருந்த கத்தியால் அப்பன்றியை வெட்டிக் கீழேவீழ்த்தினான். பன்றியிறந்தது. சற்றுமுன் நேர்ந்த விரோதத்தை நினையாமல் மனோகரன் ஒத்தாசை செய்ததற்குச் சந்திரசூடன் சந்தோஷித்தபோதிலும் அதை வெளிக்காட்டாமலும், தன்னுயிரைக் காப்பாற்றி பல

னுடன் பேசாமலும் அரண்மனைக்குப் போகவெண்ணித் திரும்பினுன். பின்பு மனேகரனும் வேருெருவழியாக அரண்மனைக்குப் போகவெண்ணிக் காட்டை நீங்கி சிங்காரத் தோட்டத்தில் வரும்போது "கெடுவான் கேடுநினைப்பான். நீ சுகமாயிருப்பாய்" என்று ஜடைக்கிழவி உரத்திச் சொல்லி அவனுக் கெதிரே ஓடினுள். அவளுடன் பேசவேண்டுமென்னு மாவலுடன் அவளைப் பின்தொடர்ந்து மனேகரனு மோடினுன்.

அவனுக்கு முன்னதாகவே சென்ற சந்திரசூடன் காட்டில் போகும்போது சூரியனஸ்தமித்து நன்ருய் இருட்டிவிடவே, சிங்காரத் தோட்டத்திற்குப் போகாமல் வழிதப்பி அக்காட்டிலேயே சுற்றிக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் நாலுமனிதர்கள் வந்து அவனைச் சூழ்ந்துகொண்டு, சத்தஞ்செய்யாவண்ணம் அவன் வாயில் துணியைச்சுற்றி யடைத்து, அவனுடுப்புகளையெல்லாங் கழற்றிக் கீழே எறிந்துவிட்டு வேறேவஸ்திர முடுத்தி, அவனைத் தூக்கிக்கொண்டுபோய்விட்டார்கள். சாயந்திரவேளையில் வெளியிற்சென்ருல் கள்ளர் பயமுள்ள சந்திரசூடன் சூரியனஸ்தமித்து இருட்டு முன்னமே அரண்மனைக்குத் திரும்பிவந்துவிடுவான். அன்றையதினம் அஸ்தமித்து இரண்டுநாழிகையாகியும் அவன் வரவில்லை. இரதி மனங்கலங்கினுள். சுந்தரி அன்று காட்டில் நடந்த விசேஷத்தைநினைத்து எண்ணுதவெண்ணமெல்லாம் எண்ணி மெள்ள தன் தாயினிடத்துச் சங்கதியைச் சொன்னுள். பிறகு இரதி அதைப் பிரபுவுக்குச் சொல்ல, அவர் பிள்ளையைத்தேடி யழைத்துவர நாலு போர்வீரர்களைக் காட்டிற் கனுப்பினுர். அவர்கள் சென்ற பின் அரண்மனையி லெல்லோரும் சந்திரசூடன் வரவை எதிர்ப்பார்த்து ஏக்கமுற்றிருக்கையில், மனேகரன் அதிக வேகமாக வந்து அரண்மனைக்குள் நுழைந்தான். அவன் உடுப்புகளில் இரத்தம் பட்டிருந்ததைக் கண்டு அங்கிருந்த

வர்கள் திகைத்து நிற்க, சந்திரசூடன் இன்னும் வரவில்லை யென்றதை யறிந்த மனோகரன் மேன்மாடியில் மந்திரியுடனிருந்த பிரபுவினிடத்துச் சென்று காட்டில் நடந்த விசேஷத்தையும், துஷ்டப் பன்றியைக் கொன்றபோது தனது வஸ்திரத்தில் இரத்தம் தெரித்ததையும் சொன்னான். பிறகு மந்திரி அவனிடத்து ஏதோ சந்தேகங்கொண்டு அவனது இரத்தம் பட்டிருந்த உடுப்புகளையும் கைத்தடியையும் வாங்கி வைத்துக்கொண்டார். அன்றிரவு பத்து நாழிகையாய்விட்டது. சந்திரசூடன் வரவில்லை. அவனைத் தேடச்சென்ற போர்வீரர்களுந் திரும்பிவரவில்லை. பிரபு மனங்கலங்கினார். இரதி கண்ணீர்விட்டழத் தொடங்கினாள். சுந்தரி ஏக்கமுற்றாள். மந்திரி யோசிக்கலானார். மனோகரன் தீர்க்க சிந்தனையிலாழ்ந்தான். அரண்மனை வேலைக்காரர்களெல்லாம் அங்குமிங்கு மோடியலைந்தனர். இராத்திரி பதினைந்து நாழிகையாச்சுது. பிரபுவின் குமாரன் வரவில்லை. ஆனால் அவனைத்தேடச் சென்ற போர்வீரர்கள் திரும்பிவந்தார்கள். அவர்களி லொருவன் பிரபுவின் முன்சென்று காட்டிலிருந்துகொண்டு வந்த சரிகை உடுப்புகளையும் கைத்தடியையும் கீழேவைத்து, சுவாமி! நாங்கள் காடுமுழுவதும் தேடினோம். தங்கள்புத்திர னகப்படவில்லை. இந்த உடுப்புகள் மாத்திரம் ஒரு மரத்தடியில் வீழ்ந்திருந்தன. இவைகளுக்கு அடுத்தாப்போல இந்தச் சிறிய தடியுமிருந்தது. இவைகளெல்லா மிருந்தவிடத்திற் கருகாமையில் இரத்தம் பெருகியோடி யோர்பள்ளத்தில் சிறியகுளம்போல் நிறைந்திருக்கிறதென்று மிகவும் பயந்து நடுநடுங்கி வாய்குளறிச் சொன்னான். உடனே மந்திரி கீழேயிருந்த உடுப்புகளைப் பிரித்துப்பார்க்கையில், பிரபு மூர்ச்சித்துக் கீழேவிழுந்தார். அப்போது அவ்விடம் வந்த இரதி, பிரபு கீழேவிழுந்திருப்பதையும், சந்திரசூடன் உடுப்புகள்மாத்திரம் தனியே யவ்விடத்திருந்ததையுங் கண்டு, ஓவென்று அலறிக் கூச்சலிட்டுக் கீழேவிழுந்து பிரக்ஞையை

யிழந்தாள். தாய்க் கூச்சலிட்டதைக் கேட்டுவந்த சுந்தரி தன் தாயும் தந்தையு மிருந்த நிலைமையையறிந்து பிரமித்துத் திகைத்து மரம்போல் அசைவற்று நின்றுள்.

## 14. சுலோசனர் காதலித்தல்.

ஆனந்தபுரி யரண்மனையில் சந்திரசேகரப் பிரபுவைக் குடும்பத்துடன் கொண்டுவந்து விட்டுத் திரும்பி இரத்தினபுரிக்குச் சென்ற சுலோசனர் எவ்வாறிருக்கிறு ரென்பதைச் சிறிது கவனிப்போம். விவாகத்தைக்குறித்துச் சந்திரசேகரர் இன்னும் கடிதமெழுதவில்லையேயென்று சுலோசனர் ஏக்கமுற்றுர். உண்ணும்போதும் உலாவும்போதும் சுந்தரியைத் தவிர வேறு ஞாபகம் அவருக்குக்கிடையாது. அவர் மனம் எப்போதும் சுந்தரியையே விஷயமாகக்கொண்டதால், மனதை நம்பிய அவருடைய ஐம்பொறிகளும் அவ்வாறேயிருந்தன. அவர் கண்களுக்குத் தோன்றுவனவெல்லாம் சுவர்ண சாயையுடைய சுந்தரியின் உருவாகவே காணப்பட்டன. அவர் காதுகளுக்குக் கேட்பனவெல்லாம் அவ்வணங்கின் தேனினு மினியபேச்சுக்களாகவேயிருந்தன. அவர் முகர்வனவெல்லாம் அவ்வழகியின் நிர்மலமான தேகத்தின்கண் சுவதசித்தமாயுண்டாகும் சுவாசனையாகவும், ருசிபார்த்து அவர்உண்பனவெல்லாம் அந்நங்கையின் அழகிய அதரத்தினின் றெழுகும் அமிர்தம்போலவும், ஸ்பரிச்சிப்பன யாவும் அம்மெல்லிய காந்தையின் தேகாலிங்கனமாகவும் அவருக்கு அனுபவசித்தமாயின. சில வேளைகளில் அவர் வாய்விட்டுச் சுந்தரி! எனக் கூப்பிடுவார். தனக்கெதிரில் காணப்படும் சுந்தரியின் உருவெளித் தோற்றத்தை நிசமென மருண்டுகண்டு எப்போது வந்தாய் சுந்தரி! எனச் சொல்லி மிகுந்த ஆவலுடன் எழுந்தோடுவார் ஒருவேளை. நம்மிருவரையும் ஒன்றுய்ச் சேர்த்துவைத்த பிரமனுக்கு நாமென்ன கைம்மாறு செய்யப்போகிறோம் சுந்தரியென்பார் மற்றொருவேளை. இவையெல்லாம் கவ

ணித்திருந்த அயலார் இதென்ன பைத்தியம் சுலோசன ரே! என்னும்போது, எல்லாம் பொய்யெனத் தெளிந்து பெருமூச்செறிந்து மெய்சோர்ந்து பிரக்ஞையிழந்து கீழே விழுவார். காலத்தில் உண்பதை மறந்தார். உறக்கத்தைத் தொலைத்தார். இஷ்டர்களுடன் பேசுவதை விட்டார். சுந்தரியை எப்போது காண்பேன், சந்திரசேகரரை யெப்போது கேட்பேன் என்று சொல்லிக்கொண்டு, இதோபோகிறேன் ஆனந்தபுரிக்கு என்று புறப்படுவார். மறுபடியும் கடிதம் வருவதற்கு முன்போகக்கூடாதென் றெண்ணித் திரும்புவார். இவ்வாறு சுலோசனர் காதல் மிகுதியால் மனத்தடுமாற்ற முற்று எப்போதும் ஏதோபிதற்றலானர். இவ்வாறிருக்கையில் ஓர் வேலைக்காரன் கடிதமொன்றுகொண்டுவந்து அவர் கையில் கொடுத்தான். சுந்தரியா கொடுத்தாளென்று அதை யவசரமாய் வாங்கிப் பிரித்து, யார் கையெழுத்திட்டிருக்கிறார்க ளென்று பார்த்தபோது, தங்கள் ஊழியன் சாத்தன் என்றிருந்ததைக் கண்டு சுலோசனர் முகஞ் சுளித்துக்கொண்டு கடிதத்தைப் படிக்க வாரம்பித்தார். அவர் நினைத்த விஷய மதிலொன்றுமில்லை. "சந்திரசேகரப் பிரபுவின் குமாரன் சந்திரருடனே இரண்டுநாளாகக் காணோம். கொலையுண்டதாகத் தெரிகிறது. மனோகரன்மீது சந்தேகம். அரண்மனையில் அழுதகண்ணும் சிந்தியமூக்குமாய் ஒவ்வொருவரும் துக்கத்தி லாழ்ந்திருக்கிறார்கள். இந்தச் சமயத்தில் தாங்களிவ்விடம் வருவது நலம்.'' என்று சாத்தன் எழுதியிருந்தான். ஆனந்தபுரியிலிருந்து வரும்போதும் சுலோசனர் சாத்தனுக்குச் சுந்தரி விஷயமாய் எவ்வளவோ திட்டமான ஏற்பாடுகள் செய்து, தனக்கு அடிக்கடி கடிதமெழுத வேண்டுமென்று கட்டளையிட்டுவந்தார். அதற்காகச் சாத்தன் எழுதியது இவ்வொருகடிதமே. அதிலும் சுந்தரியைக் குறித்து ஒன்றும் எழுதவேயில்லை. அது சுலோசனருக்கு அதிக கோபத்தை யுண்டுபண்ணியதால் அவர் சற்றுநேரம் சும்மாயி

ருந்தார். சுந்தரியின் அழகையுங் குணத்தையும் அடிக்கடிப் பார்த்த சாத்தனும் இலட்சுமியும் மகாகொடிய மனதையுடைய சுலோசனர் கையில் அப்பெண் ணகப்படாமலிருக்கவேண்டுமேயென்று அடிக்கடி கடவுளைப் பிரார்த்திப்பார்கள். இத்துடன் அவர்கள் மனோகரனுடைய குணத்தையும் நன்குமதித்து அவ்வழகனுக்கும் சுந்தரிக்கும் விவாகமாகாதோ வென்று அடிக்கடி யெண்ணுவார்கள். ஆதலால் அவர்கள் சுலோசனருக்கு சுந்தரி விஷயமாய் ஒன்றும் எழுதாமலே யிருந்துவிட்டார்கள். அதனாலுண்டான கோபந் தணிந்தபிறகு சுலோசனர் யோசிக்கலானார். சந்திரசூடன் உயிருடனிருந்தால் ஒருவேளை சுந்தரியை எனக்குக் கொடுக்கக்கூடாதென்று தடுக்கலாம். அவன் தொலைந்தது நமக்கு அனுகூலமே. பிறகு மனோகரன் எங்கே போட்டியாக வருவானோ வென்ற பயமிருந்தது. அதுவும் இன்றோடே தொலைந்தது. சந்திரசூடனை மனோகரன் கொன்றதாகவல்லவோ சந்தேகமிருக்கிறதாம். நமக்கு அது போதுமானது. அந்தக் கொலையை அவன் செய்ததாகவே ஸ்தாபித்துவிடுகிறேன். இதைச் செய்துவிட்டால் அவனும் பூலோக வாழ்க்கையைத் துறக்கவேண்டியதுதான். பிறகு சுந்தரி நமக்குச் சொந்தமே. சந்திரசேகரருக்குப் பெண்ணை எனக்குக் கொடுக்க இஷ்டமுண்டு. ஒருவேளை அவர் மனைவி தடுக்கலாம். அவளென்ன ஸ்திரீசாதி, எப்படிச் சொன்னால் அப்படிக் கேட்கவேண்டியவள். ஆகா! இன்றைக்கு நல்ல சமாச்சாரம் வந்தது. முடிந்தது கலியாணம். ஆனந்தபுரிக்குப் புறப்படுவேனென்று சுலோசனர் தீர்மானித்தார். மகா தயாளுவான சந்திரசேகரரின் புத்திரன் கொல்லப்பட்டா னென்று சமாச்சாரம் வந்ததற்குச் சிறிதுகூட விசனப்படாமல், அது தனக்கோர் சகாயமென்று சந்தோஷப்பட்ட சுலோசனருடைய மனதை யென்ன வென்று சொல்லலாம். நிரபராதியாயிருக்கும் மனோகரன் மீது சந்தேகமாமென்றதை யறிந்தவுடன் அதையே ஸ்தா

பிக்க வெண்ணங்கொண்ட இத்துஷ்டருக்குங் கடவுள் து
ணைசெய்வாரோ?

இதேசமயத்தில் ஆனந்தபுரியில் இலட்சுமி சாத்தன்
வீட்டி லுட்கார்ந்து அவனுடன் பேசிக்கொண் டிருக்கை
யில் "சாத்தா! இன்று இரவு பேர்வழிகள் வந்துவிடுவார்க
ளே என்னசெய்கிறது?" என்றாள். "வன்னியத்தெருவு
ஆசாமியைப் பிடித்துத்தான் காரியத்தைமுடிக்கவேண்டும்.
நீ அவனைக்கண்டு முடிவாகப் பேசிவிட்டுவா. அதிக நேர
மாய்விட்டது நான் அரண்மனைக்குப் போகிறேன். இலட்
சுமி! எனக்கு அரண்மனைக்குப் போகவே இஷ்டமில்லை.
பிள்ளையிழந்தவர்கள் படுந்துயரத்தை பார்க்கவே முடியவி
ல்லை. சந்திரசூடன் சங்கதி என்னவாயிருக்கும்?" என்று
சாத்தன் கேட்க, இலட்சுமி, "அதுதான் தெரியவில்லை.
மனோகரன் கோபத்தால் அவனைக் கொன்றிருப்பானென்
று சந்தேகிக்கிறார்கள். அது எனக்குச் சரியாகத் தோன்
றவில்லை. ஏன் சாத்தா! அன்றையதினம் முத்துவியாபா
பாரஞ் செய்யவந்த செட்டியுடன் சண்டைபோட்டதால்,
அவன் ஏதாவது செய்திருப்பானோ?" என்று வினவ, "அ
வனைக் கோபித்ததற்காகக் கொலையா செய்யாதிருப்பான்.
நான் நினைக்கவில்லை" என்று சாத்தன் சொல்லிவிட்டு அர
ண்மனையேகினான். இலட்சுமி வன்னியத்தெருவை நாடிச்
சென்றாள். அத்தெருவில் வேஷம்போட்டு நாடகமாடும்
சில சாதியாருண்டு. அவர்களில் மிகவும் அழகுபொருந்தி
சுபாவமாகவே ஸ்திரீகுரலுடைத்தான ஒரு சிறுவன் இரு
ந்தான். அவனழகையும் குரலையும் தேகவமைப்பையும்
பார்த்தால் நல்ல இலட்சணமுள்ள ஸ்திரீயாகப் பிறக்கவே
ண்டியவன் தப்பிப் புருஷனாகப் பிறந்துவிட்டானென்று
எல்லாரும் நினைப்பார்கள். புருஷனாகப் பிறந்தபோதிலும்
உத்தம ஸ்திரீகளுக்குரிய இலட்சணங்களையெல்லாம் விளை
க்கக்கூடாதென் றெண்ணியோ அவன் நாடகத்தைச் சேர்
ந்து எப்போதும் ஸ்திரீவேஷமே போடலானான். அவனைப்

பகற் காலத்தில் பார்த்த சில புருஷர், நல்லழகுள்ள மங்கை என்னதைரியமாய் ஆடவர் ஆடையுடுத்து ஆண்மகனைப் போல நடித்து நடக்கிறுளென்று சொல்லி, மங்கையென் று மதித்ததால் சித்தப்பிரமைகொண்டு அவனைப் பின்தொடர்ந்து போவார்கள். இத்தகைய சிறுவன் பெயர் வசீகரன். மகாபுத்திசாலி. தந்திரசாலிகூட. சுபாவமாய்த் தனக்கமைந்த ஸ்திரீ லட்சணங்களுடன் இவன் விலையுயர்ந்த ஆடையாபரணங்களை யணிந்து வெளியூர்களுக்குச் சென்று நல்லதாசியைப்போல் நடித்து விளங்கி, சிலவிட புருஷர்களை மயக்கி, பணத்தைப் பறித்துக்கொண்டு அவர்களை ஏமாற்றி வந்திருக்கிறுன். இவ்வசீகரனைத்தான் இலட்சுமி தேடிச்சென்றுள். அவள் அவனைக்கண்டு தனியே யழைத்துப்போய் அதிகநேரம் பேசியிருந்து, கடைசியாக இன்று இரவு எட்டுமணிக்குச் சரியாக நான் சொன்னமாதிரி வந்துவிட வேண்டுமென்று அவனுக்குச் சொல்லிவிட்டு அரண்மனைக்குப் போனுள்.

## 15. கள்ளரும் சுலோசனரும் ஏமாந்தது.

இனி சிருங்கமலைக் கோட்டைக்குச் செல்லுவோம். அங்கென்ன நடக்கிறது? பகல் சுமார் இரண்டுமணி. கள்ளச்சகோதரர்க ளிருவரும் போசனஞ் செய்து தாம்பூலம் போட்டுக்கொண்டிருக்கையில், ஜாதன், இன்றைக்குத்தான் நமக்கு நல்லகாலம் தம்பி! நமது கோட்டைக்கு ஓர் பெண் இரத்தினம் வரப்போகிறுள் என்றுன். இலட்சுமி என்ன செய்கிறுளோ? என்று அஜாதன் சொல்ல, அந்தச் சந்தேகம் உனக்கு வேண்டாம். எந்தவிடத்தி லிச்சங்கதியைக் குறித்து இலட்சுமியுடன் பேசி நிச்சயஞ் செய்தேனே அவ்விடத்திலுள்ள பிள்ளையாருக்கு நம்முடைய காரியம் ஜெயமாகுமானல் நூறுதேங்கா யுடைப்பதாய்ச் சொல்லியிருக்கிறேன். பிள்ளையார் சும்மாயிருக்குமா? இதுவுமல்லாமல் நமது சிருங்கமலை யம்மனுக்கும் பூசைபோடுவதா

கச் சொல்லியிருக்கிறேன். ஒருவேளை பிள்ளையார்தான் சும்மாயிருந்தால், நமது அம்மன் சும்மாயிருக்குமா? என்று ஜாதன் தான்செய்துகொண்ட பிரார்த்தனைகளைச் சொன்னான். ஒருவேளை இலட்சுமி மோசஞ்செய்தபோதிலும், நாம் எப்படியாவது அரண்மனைக்குள் புகுந்து அப்பெண்ணை நமது வசமாக்கிக்கொள்ள வேண்டுமென்றான் தம்பி. அதற்கென்னதடை. அரண்மனையிலிருந்து ஒருதுஷ்டனை இவ்விடத்திற்குக் கொண்டுவந்துவிட்டோம். இன்னொரு ஆசாமியிருக்கிறான். அவனுடன் நாம் ஒருகை பார்த்துக் கொள்வோம். பிள்ளையாரும் அம்மனும் என்னசெய்கிறார்களோ அதையும் பார்ப்போம். இந்தக் காரியம் முடியாவிட்டால் அந்தப் பிள்ளையாரை கோயிலிலிருந்துபுரட்டிக் குளத்திலுருட்டிவிடேனோ? அந்த அம்மனை மலையிலிருந்து பிடுங்கித் தூள் தூளாகச்செய்து காற்றில் பறக்கவிடேனோ? சும்மாவிட்டிடுவேனோ? என்று ஜாதன் மீசையின்மீது கையைப்போட்டு ஓர் பெரிய சத்தமிட்டான். பிறகு அவர்கள் நல்ல வஸ்திரங்களை யணிந்து, நெற்றியில்பொட்டிட்டு, மீசையை முறுக்கிவிட்டுக் கையில் தடிபிடித்துக் கண்ணாடியில் தங்கள் பிரதிபிம்பங்களைக்கண்டு மகிழ்ந்து நிற்குஞ் சமயத்தில், "சுவாமி! வண்டி சித்தமாயிருக்கின்றது" வென்று ஒருவன் வந்து சொல்ல, கள்ளத்தலைவர்கள் வெளியில்வந்தார்கள். வண்டியேறுமுன், "ஆனந்தபுரிப் பிள்ளையாரே! சிருங்கமலையம்மனே! ஜாக்கிரதை. காரியமானால் கும்பிடுவோம். இல்லாவிட்டால் கொன்றிடுவோம்" என்று ஜாதன் தன்னிஷ்ட தேவதைகளை ஸ்தோத்திரஞ் செய்த பின்பு, இருவருமாக வண்டியிலேறி ஆனந்தபுரிக்குப் பிரயாணப்பட்டார்கள். துஷ்டர்களுக்குத் தெய்வங்கூடப் பயப்படவேண்டும்போலும். இவர்கள் எண்ணம் இவ்விதம், கடவுளின் கருத்தை யாரேயறிவார்.

அன்றிரவு சுமார் எட்டுமணிக்கு ஆனந்தபுரி யரண்மனையில் இரதியும் சுந்தரியுமிருந்த அறைக்கு இலட்சுமி

சென்று, புத்திரசோகத்தால் துக்கித்துக்கொண்டிருந்த இரதிக்குத் தேறுதல் சொல்லிப் பக்கத்தி லுட்கார்ந்தாள். எவ்வளவு சொல்லியும் இரதியின் துக்கம் ஆறவில்லை. பிள்ளையை நினைத்துக்கொண்டு இரதி ஓவென்று வாய்விட்டுப் புலம்பினாள். அப்போது சுந்தரி, "அம்மா! அண்ணா சந்திரகூடன் திரும்பிவருவான். அழாதேயம்மா" என்று சொல்லியதைக் கேட்ட இரதி, "என்கண்மணி இன்னும் உயிருடன் பிழைத்திருப்பனா? இன்றைக்கு மூன்றுநாளாகிறதே. என்னப்பன் உயிருடனிருந்தால், எங்கேயிருப்பான்? எங்கேயுண்பான்? எவ்விடத்தில் படுப்பான்? ஐயோ! தெய்வமே! பத்துமாதம் சுமந்துபெற்ற என்வயிறு பற்றி எறிகிறதே! எனக்கு ஒன்றுந் தோன்றவில்லையே! என்று கீழே விழ்ந்து மூர்ச்சித்தாள். பிறகு சுந்தரி தாய்க்கு உபசாரங்கள் செய்து தேற்றினாள். இவையனைத்தையும் அதிக விசனத்துடன் பார்த்திருந்த இலட்சுமியின் ஞாபகம் ஜாத இரத்தினசெட்டி மீது சென்றது. நாழிகையாய்விட்டபடியால் இலட்சுமி வெளியே சென்றாள். எங்கேசென்றாள்? அரண்மனைக்குப் பின்பக்கத்திலிருந்த பூந்தோட்டத்திற்குள் நுழைந்து ஓர் மேடையின்மீ துட்கார்ந்து அவள் யோசித்துக்கொண் டிருக்கும்போது, அவளுக் கெதிராக ஓர் ஸ்திரீ இரத்தினம் வந்து நின்றாள். இனி நடக்கும் வேடிக்கை முழுவதையும் ஒன்றுவிடாமற் பார்ப்பதற்குச் சந்திரனும் ஆகாயத்தில் புறப்பட்டு, பிறர் செய்யுங் குற்றத்தை அவர் அறியாது பக்கத்திலிருந்துப் பார்க்க விரும்பி மெள்ளவருபவர்கள் போன்று, அத்தோட்டத்தி லுள்ள மரங்களின் கிளைகளுக் கிடையேயுள்ள சந்துகளின் வழியாய் இலட்சுமியையும் அவள் பக்கத்தில் நின்று பேசிக்கொண்டிருந்த அழகிய அணங்கையும் நோக்கினான். அப்போது இலட்சுமி அவ்வனிதா இரத்தினத்தை நோக்கி, "உன்னை வசீகரியென்று கூப்பிடட்டுமா? அல்லது சுந்தரி

யென்றழைக்கட்டுமா?'' என்று கேட்க, "நானிப்போது சுந்தரியல்லவோ'' என்றாள் அவ்விளநங்கை. அச்சமயத்தில் தோட்டத்தின் வாசற்படிக்கு நேராக மேலே எறிந்துகொண்டிருந்த விளக்கு மறைந்ததைக் கண்டு ஓர் ஆடவன் தன்னுடன் வந்தவர்களை வெளியே நிறுத்தித் தோட்டத்திற்குள் நுழைந்தான். "வாருங்கள் ஜாத இரத்தின செட்டியாரே! அதோ மல்லிகைச் செடியின் ஓரமாய்ச் சுந்தரி நிற்கிறாள் பார்த்தீர்களா?'' என்று இலட்சுமி கூறி, அவ்விடத்திற்கேகுமபடி செட்டிக்கு ஜாடைகாட்டினாள். வசிகர சுந்தரியை நோக்கி ஜாதன் மெள்ள நடந்துபோக, உங்கள் சுந்தரிதானா நன்றாய்ப் பார்த்துக்கொள்ளுங்கள் செட்டியாரே!'' என்று இலட்சுமி சொல்லிக்கொண்டே செட்டியைப் பின்தொடர்ந்தாள். தலைகுனிந்து பூமியைப் பார்த்துக் கொண்டிருந்த வசிகர சுந்தரியை ஜாதன் உற்றுநோக்கி, "இன்னும் சந்தேகமா?'' என்றான். "ஓகோ! இவள் சுந்தரியல்லவே, இதில் இன்னும் சந்தேகமா யென்கிறாயே, கள்ளச்செட்டியே'' என்று இலட்சுமி நினைத்தாள். ஆனால் செட்டியோ பிரபுவின் புத்திரி சுந்தரியென்றே நம்பிச்சொன்னான். ஏனெனில், சுந்தரியும் நாடகமாடும் வசிகரனும் ஓரே உயரமும் தேகப்பருமனு முடையவர்கள். இத்துடன், முன்னொருநாள் ஜாதன் முத்து வியாபாரஞ் செய்ய அரண்மனைக்கு வந்தபோது, சுந்தரி எந்தப் புடவையை யெவ்வண்ண மணிந்திருந்தாளோ, அம்மாதிரிப் புடவையை யவ்வண்ணமே வசிகரனை யணிந்துகொள்ள இலட்சுமி ஏற்பாடு செய்திருந்தாள். அக்காலத்தில் பிரபுவின் மனைவி இரதி வசிகரனைக் கண்டாலும் சுந்தரியென்று பிரமிப்பாள். அவ்வளவு நன்றாய் வசிகரன் நடிக்கலானான். தன் முகத்தைப் பிறர்முகம்போல மாற்றிக்காட்ட மிகவும் தேர்ந்தவன் வசிகரன். இவ்வளவு சாமர்த்தியமுள்ள வசிகரனைச் சுந்தரியெனவே நம்பிய ஜாதனைப் பார்த்து, ஆயிரம் பொன் எங்கே செட்டியாரே? என்று இலட்சுமி கேட்க, இதோ

விருக்கிறது என்று ஜாதன் ஒரு முடிப்பை யவள் கையில் கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு இலட்சுமி சிறிது தூரம் ஒதுங்கிப்போய் நின்றாள். நல்ல நிலவு. சில்லென்று குளிர்ந்தகாற்று. கம்மென்று மல்லிகை வாசனை. பார்ப்பதற்கு அதிக சுந்தர வனிதா இரத்தினம். இதன் மத்தியில் ஜாதன் புத்தி மயங்கினன். வசிகர சுந்தரியை நோக்கி, "என் அருமைச் சுந்தரியே! அன்று நீ ஆசைப்பட்ட முத்துமாலை யிதோ விருக்கிறது" என்று அவள் கழுத்திலணிந்து பக்கத்தில் நின்று அவளது வலது தோளைத் தனது வலது கையால் தழுவிக்கொண்டு தனது முகத்தை அவள் முகத்தோடணைத்து, என் கண் மணியேயென்று ஒரு முத்தமிட்டனன். இதைக்கண்ட இலட்சுமி என்னசெய்கிறாள்? சத்தஞ்செய்யாமல் சிரிக்கிறாள். சுந்தரிக்குள் ளொளித்திருக்கும் வசிகரன் என்ன செய்கிறான்? வாயுந்திறவாமல் சத்தமுஞ்செய்யாமல் உள்ளேயே சிரித்துக்கொள்ளுகிறான். பிறகு செட்டி, சுந்தரி! என் குலத்திற்கோர் திலகம்போன்றவளே! என்னுடன்வருகிறாயாவென்றான். சுந்தரி பதில் சொல்லவில்லை. "இனிமேல் என்னிடத்து உனக்கு வெட்கம் வேண்டியதில்லை. வாய்திறந்து பேசினல்தான் எனக்கிஷ்டம்" என்று செட்டி கெஞ்ச வாரம்பித்தான். சுந்தரி பேசவில்லை யோசித்தான் செட்டி, ஒன்றுந்தெரியவில்லை. மறுபடியும் அவளைக் கட்டிக்கொள்ளுகிறான். முத்தமிடுகிறான். முகர்ந்து பார்க்கிறான். என்னவாசனை யென்கிறான். பேச மாட்டாயாவென்று வேண்டுகிறான். இவையொன்றும் பயனில்லை. பிறகு செட்டி சுந்தரியைக் கையைப்பிடித் தழைத்துக் கொண்டு இலட்சுமி நின்ற விடத்திற்குப்போய் என்னுடன் சுந்தரி பேசமாட்டே னென்கிறாளே, அது என்ன வென்றான். அதற்கு இலட்சுமி, "செட்டியாரே! நான் சொல்லியிருந்ததை மறந்துவிட்டீர்களே, மருந்தின் மயக்கத்தினலல்லவா சுந்தரி யிப்போது உம்முடைய வசத்திலிருக்கிறாள்.

பேசமுடியாது. நீங்கள் சீக்கிரம் அழைத்துக் கொண்டு போய்விடுங்கள். தாமதமென்ன?'' என்றாள். அதைக்கேட்டஜாதன் உடனே தோட்டத்திற்கு வெளியேபோக வாரம்பித்தான். சுந்தரியும் தாமதமின்றி அவனுடன் நடந்தாள். ஜாதனும் அஜாதனும் இருபக்கங்களில்வர, சுந்தரி மெள்ள நடந்துபோனாள். இவர்களுக்குமுன்னே இரண்டு ஆட்களும், பின்னே இரண்டாட்களும்போய்க் கொண்டிருந்தார்கள். வழியில் மாந்தோப்பிலுள்ள பிள்ளையாருக்குச் சொல்லியவண்ணம் நூறு தேங்காயுடைத்துப் பிரார்த்தனையைச் செலுத்தினார்கள். அவர்கள் ஆனந்தபுரியெல்லையைக் கடந்துபோகையில் இரவு சுமார் பத்துமணி யாகிவிட்டது. அக்காலத்தில் சனங்கள் போக்குவரவின்றி நிசப்தமாயிருந்தது. அதுவரைக்கும் மனதிற்குள்ளேயே சந்தோஷித்துக்கொண்டிருந்த அஜாதன் வாய்திறந்து பேசவாரம்பித்தான்.

"அண்ணே! இலட்சுமி நமக்குச்செய்த வுபகாரத்தை மறக்கக்கூடாது'' என்றுசொல்ல, "அதை மறக்கமுடியுமோ?'' என்றான் ஜாதன். பிறகு தம்பி, "என்ன அழகு சுந்தரி'' யென, "இரண்டாயிரம் பொன்னல்லவோ'' என்றான் அண்ணன். இவ்வாறு அவர்கள் தாங்களடைந்த லாபத்தைக்குறித்துச் சந்தோஷித்துப் பேசிக்கொண்டு நடக்கையில் காட்டிற்குள் சென்றார்கள். அக்காட்டில் பகலிலேயே சனங்கள் வருவது அருமை. அந்தஇரவில் ஒருவரும் வரப்போகிறதில்லையென நினைத்து, கள்ளச்செட்டிகள் தங்களுடன் வந்த வேலைக்காரர்களை சிருங்க மல்லம்மன் கோயிலுக்குப்போய்ப் பூசைபோட்டு சித்தமாயிருக்கக் கட்டளையிட்டு அனுப்பிவிட்டார்கள். பிறகு இரு சகோதரர்களும் தங்கள்காதலி சுந்தரியுடன் நடந்துபோகையில், நிமிஷமொருதரம் சுந்தரியின்முகத்தைப் பார்ப்பார்கள். இன்னும் பயக்கத்திரவில்லையென்று எங்குவார்கள். இவ்வாறு அடிக்கடி அவளைப் பார்த்துப்பார்த்து நடந்து

போகையில், அஜாதன்; "அண்ணே! நாம்தான் புருஷர்கள், நடந்து வழக்கம். நமது சுந்தரியோ இராசகன்னிகை, ஒருநாளும் நடந்தறியாள். மயக்கத்திலொன்றுந் தெரியாமலிப்போது நம்முடன் நடந்தபோதிலும், பிறகு அவளுக்கு மெத்த அலுப்பாயிருக்கும். ஆகையால் சற்றுநேரம் உட்காருவோம்" என்றான். அதற்கு ஜாதனிசைந்து, நீ சொல்லுவது சரிதான் என்று கூற, மணற்குவியலாயிருந்த விடத்திலிருவரும் உட்கார சுந்தரியும் உட்கார்ந்தாள். "சுந்தரி! எத்தனைநாழிகை பேசாதிருப்பாய்?" என்று ஜாதன் கேட்டான். பதிலில்லை. சுந்தரியை சிரசுமுதல் பாதபரியந்தம் ஒருதடவை அஜாதன் கையால் தடவிப்பார்த்து, என்னமிருதுவானதேகம் அண்ணே! யென்றுகூறினான். பிறகு ஜாதன், அவள் இருகால்களையுந் தடவிகொடுத்து, இவ்வருமையான கால்கள் ஒருநாளும் நடந்திராவே யென்று தனது இருகரங்களாலும் பிடிக்கலானான். அண்ணே? நீ நில்லு நான் சற்றுநேரம் கால்பிடிக்கிறேனென்று தம்பிஆரம்பித்தான். வசீகரனுக்கு என்ன அதிர்ஷ்டம்! இரண்டுதடித்தஆசாமிகள் மாற்றிமாற்றிக் கால்பிடிக்கஏற்பட்டார்கள். "அண்ணே! சுந்தரியைநாம் இனிநடத்தி அழைத்துக்கொண்டுபோகக்கூடாது. நாம் தூக்கிக்கொண்டு போகவேண்டும்" என்று அஜாதன்கூற, "அதுதான்சரி" யென்று ஜாதன் எழுந்திருந்து அவளைத் தன்தோளில் தூக்கிக்கொள்ளவாரம்பிக்க, அஜாதன் "நான் தூக்கிக்கொள்ளுகிறேனே" என, ஜாதன், "நான்தான் முன்னே, நான்மூத்த சகோதரனல்லவோ" என்றான். "நீங்கள் மூத்தசகோதரர்தான், மரியாதையாயிருங்கள். நான் என்தோளில் தூக்கிக்கொள்ளுகிறேன், உங்களுக்கேன் இந்தக்கஷ்டம்" என்று அஜாதன்சொல்லியதைக் கவனியாதவன்போல ஜாதன் சுந்தரியைத் தன்தோளில் வைத்துக்கொண்டு, அவளிரு பாதங்களையும் தன்னிருகைகளால் பிடித்துக்கொண்டு அதிக உல்லாசமாயும் சந்தோஷமாயும் சுந்தரியின்மீதுள்ள மோகத்

தால் வசீகரன் தேகச்சுமையை ஒரு பாரமாகக் கருதாமல் நடந்துபோனான். இது அஜாதனுக்குப் பொறுக்கவில்லை. "என்னதான் மூத்தசகோதரனாயிருந்தாலும் எத்தனைநாழிகை தூக்கிக்கொண்டுபோகிறது" என்று முணுமுணுத்துக் கொண்டே இவன் ஜாதனுக்குப் பின்னால் நடந்துபோனான். சற்றுநேரம் பொறுத்து, அண்ணே! போரும், இனி என் தோளில் மாற்றிவிடுளென்று அஜாதன் தன்தோளைச் சாய்த்துக்காட்டினான். ஜாதன் இவனைக்கவனிக்கவில்லை. அவன் மெய்மறந்தவனானான். அதைக்கண்ட அஜாதன் சுந்தரியின் காலைப்பிடித்திழுக்க வாரம்பிக்கவே, ஜாதன் இனிமுடியாதென்று சுந்தரியைத் தம்பி தோளில்மாற்றினான். அஜாதன் தனக்குண்டான ஆனந்தத்தை வாய்விட்டுச்சொன்னால் எங்கே அண்ணன் மறுபடியும் சுந்தரியைக் கேட்பானோவென்று நினைத்துப்பேசாமலும், எங்கேவிரைவாக நடந்தால் சீக்கிரம்வழிமுடிந்து விடுமோவென்னும்பயத்தால் மெள்ளவும், நடந்துபோனான். சிறிதுநாழிகைசென்றபின், இதுகாறும் மயங்கியவள்போல் இருந்த சுந்தரி மயக்கம் நீங்கிவிட்டதெனக் காண்பிப்பவள்போல அஜாதன்தோளில் நில்லாமல் கீழேயிறங்கமுயன்றாள். அதையறிந்த அஜாதன், அண்ணே! மயக்கந்தீர்ந்து விட்டதுபோ லிருக்கென்று சொல்லி சுந்தரியைக் கீழேவிட்டான். சுந்தரி கீழிறங்கினவுடன், ஓவென்று ஒருபெருங் கூச்சலிட்டு, நீங்கள் யார்? என்னை இங்கே எப்படிக்கொண்டுவந்தீர்கள்? என்று அதிகம்பயந்தவள்போல நடித்துக் கள்ளர்களைக்கேட்டாள். "பயப்படாதே சுந்தரி! நாங்கள் உன்னிடத்தில் பட்சமுள்ளவர்கள்தான்" என்று ஜாதன்சொல்லும்போது, குதிரைகள் அதிவேகமாய் ஓடிவரும் சத்தங்கேட்டது. கள்ளர்கள் திகைத்துநின்றார்கள்.

குதிரைகள் அதிக சமீபத்தில் வந்துவிட்டன. முன்னே இருவர், பின்னே இருவர் கையில் உருவியகத்தியுடன் வர, அவர்கள் நடுவில் நல்லாடையணிந்து பிரபுவைப்போல்

ஒருவர் உட்கார்ந்துவர, அக் ஐந்துநபர்களை நிலவில் நன்றாய்க்கண்ட கள்ளர்களிருவரும் சுந்தரியைத்தனியேவிட்டு வெகுதந்திரமாயோடி ஓர் புதருக்குள் புகுந்தார்கள். நால்வர் நடுவே பிரபுவாக விளங்கியவர் அவ்விடத்தில் தனியேநிற்கும் பெண்ணுருவத்தைக்கண்டு அதிசயித்து, யார்அம்மணி! இரவில் காட்டிலே தனியேநிற்கிறாய்? என்று கேட்டார். அவரது தொனியையும் அவர்கேட்ட மாதிரியையுங் கவனித்துத் தைரியங்கொண்டவளாய் வசீகரசுந்தரி! ஆட்களின்னாரென்று தெரிகிறவரையில் உண்மையைச் சொல்லக்கூடாதென்று நினைத்து, "ஆனந்தபுரியிலிருக்கும் சந்திரசேகரப் பிரபுவினுடையகுமாரத்தி நான்" என்று பிரபுவின்கேள்விக்கு விடைதந்து, தான்போட்ட வேஷத்தையே ஸ்தாபித்தாள். அதைக் கேட்டவுடன் பிரபு குதிரையை விட்டுத் திடீரலென்று கீழேகுதித்து "சுந்தரியா நீ!" என்று மிகுந்த வாச்சரியத்துடன் "நீ தனியே யிவ்விடம் வருவானேன்?" என்றுகேட்க, வசீகரசுந்தரி, "என்னை ஆபத்துக்காலத்தில் காப்பாற்றவந்த இரட்சகரே! கேளுங்கள். நானின்று சாயந்திரம் நிலவுவந்தவுடன் அரண்மனைக்கு அடுத்தாப்போலவிருக்கும் பூந்தோட்டத்திற்குவந்தேன். அதுதான் எனக்குத்தெரியும். பிறகு இவ்விடத்தில்ஒருமனிதன் தோளிலிருந்து நான்இறங்கும்போது தூங்கிவிழிப்பவள் போல விழித்துக்கொண்டேன். இன்னொரு மனிதனுமிருந்தான். அவர்களைக்கண்டுபயந்து அலறிக் கூச்சலிட்டேன். இதற்குள்ளாக தங்களுடைய குதிரைகள்வரும் சத்தத்தைக்கேட்டு அவர்கள்பயந்து நின்றார்கள். தாங்கள் அதிக சமீபமாகவந்தபோது அவர்கள்மாயமாய் மறைந்துபோனார்கள். நல்ல சமயத்தில் தங்களைப் பகவான் இவ்விடம் கொண்டுவந்துவிட்டார். இனி நான்பிழைத்தேன். தயவுசெய்துஎன்னைக்காப்பாற்றி அரண்மனையில்கொண்டுபோய் விடவேண்டும் பிரபுவே! தாங்கள்யாரோ எனக்குத் தெரியவில்லை." யென்று சொன்னாள். இதைக்கேட்ட பிரபு அதி

சயங்கொண்டு, ஆனந்தபுரியில் இவ்வளவு காரியங்கள் நடக்கின்றனவாவென்று மூக்கின்மேல் கைவைத்துச் சிறிதுநேரம் யோசித்திருந்து, "நல்லது சுந்தரி, நீ பயப்படவேண்டாம். நான் ஆனந்தபுரிக்குத்தான் போகிறேன், நீ என்னுடன்வரலாம்" என்று அவளை ஓர்குதிரையின்மீது உட்காரச்செய்து அவரும் தன் குதிரையின்மீதேறிக்கொண்டு ஆனந்தபுரிக்குப் புறப்பட்டார். வெகுதூரம்வரைக்கும் ஒன்றும் பேசாமல் அதிக யோசனையுடன்சென்ற பிரபுவானவர் ஆனந்தபுரிக்குச் சமீபமாகப்போகும்போது வசீகரசுந்தரியை நோக்கி, "உன்னுடையபிதாவுக்கு என்னென்ன கஷ்டங்கள் உண்டாயிற்று. பட்டணத்தையிழந்தார். புத்திரனையிழந்தார். நானிப்போது இவ்விடம் வராமற்போனால் உன்னையுமிழந்திருப்பார். இதென்ன அநியாயம், ஒருவருக்கு எத்தனை துன்பங்கள் ஒரேகாலத்தில்நேரிடும்" என்றுசொல்ல, வசீகரசுந்தரி, "எங்கள் குடும்ப விருத்தாந்தமெல்லாமறிந் திருக்கிறீர்களே? தாங்கள் யார்?" என்றுகேட்க, பிரபு, "அதைப்பிறகு தெரியப்படுத்துகிறேன். உனக்கு விவாகமாயிற்றோ சுந்தரி?" என்று அவள் முகத்தை நோக்கினர்.

அப்போது சுந்தரி, இல்லையென்று தெரிவிக்கத் தலையசைத்தனள். பிறகு பிரபு, "இந்தக்காலத்தில் சனங்கள் பொய்சொல்ல அஞ்சுகிறதில்லைபோலிருக்கு. நீங்களிப்போதிருக்கும் ஆனந்தபுரிக் கதிபதியாகிய சுலோசனருக்கும் உனக்கும் விவாகமாய்விட்டதாகக் கேள்விப்பட்டேன்." என்றார். வசீகரசுந்தரி, "என்பிதாவிற்கு நீங்கள் சினேகிதராயிருக்க, உங்களுக்குத்தெரியாமல் விவாகம் நடந்துவிடுமா?" என, பிரபு, "அதனால்தான் நான் அதை நம்பவில்லை. ஆனாலும் விவாகவிஷயமாய்ச் சுலோசனரைக் குறித்து ஏதாவது பேச்சுநடந்திருக்குமோ?" என்று கேட்டார். அதற்கு வசீகரசுந்தரி, "ஆகாஉண்டு, அரண்மனையில் எல்லாருக்கும் அவருக்குக் கொடுக்கத்தானிஷ்டம், அவ

ரை யுங்களுக்குத் தெரியுமோ?'' என்றாள். "எனக்கு நன்றாய்த்தெரியும் அந்த மகாப்பிரபுவை. சுலோசனருக்கு இணையாக நான் யாரைச் சொல்வேன்'' என்று பிரபு சொல்லும்போது ஆனந்தபுரிவந்து சேர்ந்துவிட்டார்கள். அரண்மனைக்குச் சமீபமாக வரும்போது வசீகரசுந்தரி நாணினவள்போல நடித்துச் சாடைகாட்டி குதிரையை விட்டுக் கீழே யிறங்கி நடக்க வாரம்பித்தாள். அரண்மனைக்கு எதிரில் வந்து பிரபு குதிரையைவிட்டு இறங்கும்போது அவ்விடத்திலுள்ள காவலாளர்கள் கண்டு திகைத்து நிற்கையில், எல்லாருக்கும் முன்பாக வசீகர சுந்தரி அரண்மனைக்குள் போவதுபோல போக்குக்காட்டி அடுத்தாப் போலிருந்த சந்தில் நுழைந்து பூந்தோட்டத்திற்குள் புகுந்து கதவைத் திறந்துகொண்டு அதி சீக்கிரமாய் வன்னியத் தெருவிற் கோடிவிட்டாள்.

அரண்மனைக்கு வந்த பிரபு உள்ளே செல்ல, அப்போது சாத்தன் அவரை எதிர்கொண்டுபோய் "வரவேண்டும் சுவாமி! ஏது இந்தத்தடவை இரவில் புறப்பட்டு வந்தீர்கள்?'' என்று கேட்டான். அதற்குப் பிரபு, "இரவில் நான் வந்தபடியினால் தான் சுந்தரி உயிர் பிழைத்தாள்.'' என்றார். "என்ன சுவாமி! நீங்கள் சொல்லுவது எனக்குத் தெரியவில்லையே?'' என்று சாத்தன் சொல்ல. "ஏனடா! இப்போது சுந்தரி உள்ளேவரவில்லையா?'' என்று பிரபு கேட்டார். அதற்குச் சாத்தன், "எந்த சுந்தரி சுவாமி?'' என, பிரபு, "எத்தனை சுந்தரி யிருக்கிறார்கள்? சந்திரசேகரர் புத்திரிதான்.'' என்று சிறிது சந்தேகத்துடனும் கோபத்துடனும் சொன்னார். ஏது சுந்தரி பயித்தியம் பூரணமாய்ப் பிடித்திருக்கிறப்போ லிருக்கிறது. வரும்போதே சுந்தரி வந்தாளென்கிறாரே யென்று நினைத்துக்கொண்டு சாத்தன், "சுந்தரியம்மாவா உங்களுடன் வந்தார்கள்?'' என்று அதி வினயத்துடன் கேட்டான்.

"அடே அதிருக்கட்டும். இப்போது சுந்தரி எங்கே யிருக்கிறாள்?"

"அந்த அம்மாள் உள்ளே படுத்து உறங்குகிறாள் சுவாமி!"

"உண்மைதானா சாத்தா?"

"அதிலென்ன சந்தேகம் சுவாமி?"

"அடே அரண்மனையில் விசேஷமொன்றுமில்லையா?"

"சந்திரசூடரை நாலுநாளாகக் காணோம். எல்லாவிடங்களிலும் தேடியாய்விட்டது. இதைக்குறித்துக் கடிதத்திலெழுதி யிருந்தேனே?"

"இன்று இராத்திரி விசேஷமொன்று மில்லையா? எது நீகூட வெகு சாக்கிரதையாக வேலை செய்கிறாப்போ லிருக்கு?"

எது பயித்தியம் மண்டைக் கேறிவிட்டாப்போ லிருக்கு? கோபங்கூட வருகிறதே யென்று வாய்திறவாமலே கொல்லிக்கொண்டு சாத்தன்,

"சுவாமி! இராத்திரி ஒரு விசேஷமு மில்லை. எல்லாரும் வழக்கம்போல் சாப்பிட்ட பிறகு சற்றுநேரம் பேசியிருந்து படுத்துவிட்டார்கள். நானும் அப்போது படுத்து, நீங்கள்வர சற்று முன் எழுந்திருந்து அரண்மனையைச் சுற்றிப் பார்த்துப் படுத்தேன்." என்றான்.

"இலட்சுமி எங்கே கூப்பிடு" என்றார்பி ரபு.

"சுந்தரியம்மாள் அறையில் படுத்திருக்கிறாள்" என்று சாத்தன் அவ்வறைக்கோடி, இலட்சுமியை யெழுப்பி, "சலோசனர் வந்திருக்கிறார், உன்னைக் கூப்பிடுகிறார், எழுந்துவா சீக்கிரம்." என்று சொல்ல, "உண்மையாகவா?" என்று இலட்சுமி கேட்க, "உண்மைதான், ஏதோ கோபத்துடன் வந்திருக்கிறார். எழுந்திரு சீக்கிரம்" என்று சாத்தன் மறுபடியும் சொல்ல, இலட்சுமி மெள்ள எழுந்திருக்க, "சுந்தரி பயித்தியம் நன்றாய்ப் பிடித்திருக்கிறது. வரும்போதே சுந்தரி வந்தாளா என்கிறார். சுந்தரி என்றால் உயிர்

பிள்ழைத்தாளென்கிறர்" என்று சாத்தன் சொல்ல, இலட்சுமி சுலோசனரிடத்துச் சென்றள். "இலட்சுமி! நீ இப்போது நன்றய்த் தூங்கக் கற்றுக்கொண்டாப்போ லிருக்கு? என்று சுலோசனர் கேட்க, அதற்கு இலட்சுமி, "இல்லை சுவாமி! இரவு இரண்டு மூன்றுதரம் எழுந்திருந்தேன்" என்றள். பிரபு, "எழுந்து நீ செய்தது என்ன?" என்று கேட்க, இலட்சுமி, "இராத்திரியெல்லாம் சுந்தரி யம்மணிக்குத் தலைவலி யதிகமாயிருந்தது. அந்நோய்க்குச் சில சிகிச்சை செய்தேன். சற்றுமுன் தான் தூங்க வாரம்பித்தாள். நானும் தூங்கிவிட்டேன்" என்றள். அதைக்கேட்ட பிரபு மிகுந்த வாச்சரியங்கொண்டு, அவ்விடத்தில் நின்ற சாத்தனைநோக்கி, "இப்போது எனக்கு முன்னே ஒருவரும் அரண்மனைக்குள் வரவில்லையா?" என்று கேட்க, அவன் "ஒருருவரும் வரவில்லையே சுவாமி" என்றன். பிரபு திகைத்து நின்று, சற்று பொறுத்து தன்னறைக்குள்போய் ஒரு சோபாவின்மீது உட்கார்ந்து சாய்ந்துகொண்டு, ஒருகையால் மீசையை முறுக்கி முறுக்கி விட்டுக்கொண்டு தீர்க்கவாலோசனையி லாழ்ந்தார்.

## 16. மனேகரன்சிறைச்சாலையடைதல்.

தனியே தன்னறையி லுட்கார்ந்த சுலோசனர் மிகவும் மனவருத்தத்துடன் யோசிக்கலானர். இதென்னவாச்சரியம்! சுந்தரி அரண்மனையிலிருக்க என்னுடன்கூடவந்த ஸ்திரீயார்? சுந்தரியின்மீது கொண்ட காதலைப் பொறுக்கமாட்டாமல் அவஸ்தைப்பட்டதற்குக் கடவுளே மனமிரங்கி நடுவழியிலேயே என்காதலியைச் சந்திக்கச் செய்தாரென நான்மகிழ்ந்ததும் பொய்யாகுமா? என்னுடன்வந்த கட்டழகி சுந்தரியைத் தவிர வேறு யாராயிருக்கலாம்? வேறு எந்தஸ்திரீக்கு இவ்வரண்மனைச் சங்கதி தெரியும்? அப்படி யன்னிய ஸ்திரீக்குத் தெரிந்திருந்தபோதிலும் அவளேன் தனியே காட்டிற்கு வரவேண்டும்? வந்தவள்

தன்னைச் சுந்தரியெனச் சொல்லிக் கொள்வானேன்? என்னுடன்வந்தவள் ஸ்திரீதானா? அல்லது வனதேவதையா? மோகினியென்கிறார்களே, ஒருவேளை அதுவாயிருக்குமோ? அல்லதுசுந்தரியினிடத்திருக்கும் பிரேமையினாலுண்டான என்சித்தப் பிரமையே ஓர் பெண்ணுருவாகி என்னிடம்வந்ததோ? சித்தப்பிரமையல்ல, அவள் ஓர் பெண்தான். இதில் ஏதோ சூதிருக்கிறது. இதைப்பகிரங்கப்படுத்தாமல் இரகசியமாய் உண்மையை யறிய வேண்டுமென்று சுலோசனர் தீர்மானித்தார். பொழுதும் விடிந்துவிட்டது.

சுலோசனர் அரண்மனைக்கு வந்தவுடன் சொல்லியவையெல்லாங் கேட்ட இலட்சுமி, வசிகரன் வியாபாரிகளையேமாற்றிவிட்டு ஓர் அபாயமுமின்றி ஊர்வந்து சேர்ந்தானென் றறிந்து, வன்னியத் தெருவிற் கோடி, வசிகரனைக் கண்டு, பூந்தோட்டத்தை விட்டது முதல் திரும்பி சுலோசனருடன் அரண்மனைக்குவந்து சேர்ந்தவரைக்கும் நடந்தவையெல்லாம் அவன் சொல்லக்கேட்டு, கள்ள வியாபாரி அவன் கழுத்தி லணிந்த முத்துமாலையை வாங்கிக்கொண்டு, அவனுக்கு ஐந்நூறு பொன் இனமாகக் கொடுத்துவிட்டு, அதிக விரைவாக அரண்மனைக்குத் திரும்பினாள். இவையெல்லாவற்றையும் அவள் சாத்தனுக்குச் சொல்ல, அவன் சுலோசனர் முதலில் தன்னைக் கேட்ட கேள்விகளுக்குக் காரணமிருக்கிறதென்று அறிந்து சந்தேகம் நீங்கினான். அக்காலத்தில் அரண்மனை மேன்மாடியில் சந்திரசேகரர், சுலோசனர், சுதந்திரர் ஆகிய மூவரும் பேசிக்கொண்டிருந்தார்கள். சந்திரசேகரர் கூறியவையெல்லாம் மிக்க கவனத்துடன் கேட்டுக்கொண்டிருந்த சுலோசனர் பெருமூச்சு விட்டு "சந்திரசேகரரே! நீங்கள் சொல்லியவையெல்லாமறிந்தேன். என்னூரில் வந்தபின்பு தங்களுக்குண்டான துக்கத்திற்கு நான் மிகவும் விசனப்படுகிறேன். என்னிசனத்தையாரோ அறிவார். இனி என்னா லியன்றவரையில் பாடுபட்டுக் குற்றவாளியைக் கண்டு பிடிக்கிறேன். சங்கதி

யென்னமோ வெளிப்படையாகத்தா னிருக்கிறது. ஆனால் அதை ருசுப்படுத்த சாட்சிகள் வேண்டி யிருக்கின்றன. இப்போது நீங்கள் ஒன்றுசெய்யவேண்டும். நமக்கெல்லாம் இராசாவாகிய மகதவரசன் எற்படுத்திய சட்டத்தை யனுசரித்து, நமது ஊரில்நடந்த கொலையைக்குறித்து இராஜ சமுகத்திற்குத் தெரியப்படுத்த வேண்டும். இத்துடன் இன்னமனிதன்பேரில் சந்தேக மிருக்கிறதென்றும், அவனைக் காவலில் வைக்கப்பட் டிருக்கிறதென்றும் எழுதவேண்டும் என்றுசொல்ல, சந்திரசேகரரும் மந்திரியும் அதை அங்கிகரித்து இராஜாங்கத்திற்குக் கடித மெழுதிவிட்டார்கள். கபடநெஞ்சினராகிய சுலோசனர் தன்னூரை விட்டுப் புறப்படும்போது தீர்மானித்த வண்ணம் மனோகரனைக் குற்றவாளியாக்க முயன்றனர். அச்சமயத்தில் சந்திரசூடனைத் தேடிக் கண்டுபிடிக்க அயலூருக்குச் சென்றிருந்த போர் வீரர்கள் சந்திரசேகரர் முன்வந்து சந்திரசூடனை எங்குங் கண்டிலேமென்று சொல்லக்கேட்ட பிரபு துக்கித்தனர். அப்போது சுலோசனர் "நீங்கள் விசனப்படுவதில் பயனில்லை. சந்திரசூடன் கொல்லப்பட்டது உண்மையே. அவன் வேறூர்போக நியாயமில்லை. அவனை வேறொருவர் கொல்லவும் ஒரு காரணமில்லை. மனோகரன்தான் அவனைக்கொன்றவன். நான் சத்தியஞ்செய்து சொல்லுவேன். தகுந்த காரணமிருக்கிறது. மனோகரன் தன்னிலைமை யறியாமல் சுந்தரியின்மீது காதல்கொண்டதும், அதையறிந்த சந்திரசூடன் அவனைக் கண்டித்ததும் போதுமான காரணங்கள். காமத்திற்குக் கண்ணில்லை. கோபத்திற் களவில்லை. இதனால் கொலை நேர்ந்தது அதிசயமல்ல. தாங்கள் சத்தியபுரியிலிருக்கும்போது அன்னிய புருஷனை யரண்மனையில் வளர்ப்பது ஒருகாலத்தில் அனர்த்தமாய் முடியுமென்று சொன்னேனே ஞாபகமிருக்கிறதா? பாருங்கள் நான்சொன்னதற்குச் சரியாக முடிந்துவிட்டது" என்று கபடமே தன்னுருவாகக்கொண்ட சுலோசனர் கூறும்போது, சந்திரசேகரர்தான் செய்தது பிசகுதானென்று ஒத்துக்கொண்டனர்.

அரண்மனை மேன்மாடியில் சுலோசனர் பேசியவை யெல்லாங் கேட்டுக்கொண்டிருந்த சம்பாதி அதிகவிரைவா யோடி யாவருக்குந் தெரியாமல் மனோகர னறையிற் புகுந் து சங்கதிமுழுவதையும் சொல்லிப்போயினன். அதைக் கேட்ட மனோகரன் மனஞ்சலிக்காமல், யாதுவரினும்வருக, எல்லாமீசன்செயல் எனக்கருதி, ஜடைக்கிழவி அடிக்கடி "கெடுவான் கேடுநினைப்பான்" என்று கூறுவது இச்சுலோ சனரையெண்ணித் தானோவென்று சந்தேகித்து ஆலோ சிக்கலானன். உலகத்தில் பொய் மெய் போலவும், மெய் பொய் போலவும் மாறித் தோற்றுவது வழக்கந்தானே. கடைசியாகப் பொய் பொய்யாகவும் மெய் மெய்யாகவும் முடிவது சத்தியம். அதுதானே ஜகதீசனது அருள் உல கில் விளங்குவதற்கு ஓர் அடையாளம். ஆகவே அருளே திருமேனியாகவுடைய எம்பெருமானின் கருத்திற்குவிரோ தமாக ஒன்றும் நடவாது. ஒன்றுமறியாத ஏழையாகிய யான் சந்திரசூடனைக் கொன்றேனென்று என்மீது வீண் பழியைச் சுமத்துவது நியாயமல்ல. ஆகையால் அப்பழி என்னை ஒருநாளும் கெடுக்காது. என்னையெதுவேண்டுமா னும் அவர்கள் செய்யட்டும். என்தேகத்திற்கு அவர்கள் காவலிட முடியுமேயல்லாமல் என்மனதை சிறையிலடைக் கமுடியுமோ? என்று மனோகரன் எண்ணும்போது சுதந்தி ரமந்திரி அறைக்குள் நுழைந்தார். உடனே மனோகரன் எழுந்து நின்று வணங்கி "தாங்கள் என்னறைக்கு வந்த தற்கு நான் என்னபாக்கியஞ் செய்தேனோ? என்னவிசே ஷம்?" என்று கேட்க, மந்திரி, "பிரபுவினுடைய உத்தரவு பிரகாரம் நீ இந்த அறையைவிட்டு நீங்கி, அரண்மனைக்கு வெளியே யிருக்கும் அறையில் வசிக்கவேண்டும். அவ்வ றையைவிட்டு நீ வெளியே போகக்கூடாது. உனக்குவேண் டியவையெல்லாம் அவ்வறையிலேயே நடக்கும். இரத்தி னபுரியிலிருந்துவந்த போர் வீரர்களிருவர் உனக்குக் கா வலாக யிருப்பார்கள்" என்று சொன்னர். மனோகரன்புன்

னைசெய்துகொண்டு "இவ்வறையை விட்டு அவ்வறைக்குப் போகச் சித்தமாயிருக்கிறேன். அதுமகாப்பிரபுவின் உத்தரவாதலால் எனக்கிஷ்டமே. வெளியில் போனவர்கள் திரும்பி வீடுவந்து சேர்வார்களென்னும் நிச்சயமில்லாத இவ்வூரில் என்னைக் காப்பதற்கு இரண்டு ஆட்களைத் தந்த பிரபுவின் கருணைக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். எனக்கு மிகவும் சந்தோஷமுண்டாகிறது. அறையைவிட்டு வெளியில் வராமலே எனக்கு வேண்டுவனவெல்லாம் கிடைக்குமாயின் அதைக்காட்டிலும் உயர்ந்த பதவி உலகிலொன்றுண்டோ? என்விஷயத்தில் ஜகதீசன் கருணையிருந்தவாறென்னே! மந்திரியாரே! இப்புதிய ஏற்பாடு செய்ததற்கென்ன காரணம்? என்று கேட்க, அதற்கு மந்திரி, "சந்திரசூடனைக் கொலைசெய்ததாக உன்மீது குற்றமேற்பட்டிருக்கிறது" என, மனோகரன், "கொல்லப்பட்டானென்றே நிச்சயித்தாய் விட்டதோ? என்று வினவ, மந்திரி, "ஆமாம். நாழிகையாகிறது. சீக்கிரம் புறப்படு" என்றார். உடனே மனோகரன், "வாருங்கள் போகலாம். கொலையென்று ஸ்தாபிக்குமுன், சந்திரசூடனுடைய பிணத்தை யாராவது கண்டிருக்கவேண்டுமே. இல்லாவிட்டால் கொலையேது?" என, மந்திரி சிறிதுகோபித்தவர்போல, "உன்னுடைய கேள்விகளுக்கெல்லாம் சமாதானஞ்சொல்ல நான் இவ்விடம் வரவில்லை" யென்று கூறியதைக்கேட்டு, மனோகரன் தன்னை மன்னிக்கும்படி மந்திரியை வினயமாய்க் கேட்டுக்கொண்டு அவ்வறையை விட்டு வெளியிலேவர, கையில் கத்தியேந்தி இரு காவலாளர்கள் முன்னேசெல்ல, மந்திரி மனோகரனை யழைத்துப்போய் வெளி அறையிற் சேர்த்தார்.

மந்திரியானவர் மனோகரன் பேசிய யாவற்றையும் சந்திரசேகர ரிடத்துச் சொல்லும்போது மிக்க கவனத்துடன் தன்னிருகாதுகளும் போதாதென, இமைகொட்டாமல் தன் னிருகண்களையும் மந்திரியினிடத்து நாட்டின

சுலோசனர். கடைசியாக சந்திரசூடன் பிணத்தைக்காணு தவரையில் கொலையேது என்று மனோகரன் கூறினானென்ற தைக் கேட்ட சந்திரசேகரர் யோசிக்கத் தொடங்கியதை யறிந்த சுலோசனர், இதுதான் சமயமென்று தன் கபடவா ர்த்தைகளை யாரம் பித்தார். "சந்திரசேகரரே? தாங்கள் மிகவும் சாத்வீக குணத்தையே பெற்ற நல்ல பிரபு. சூது வாதின்னதென்று கேட்டறியீர். பொய், களவு, வஞ்சகம், பொறாமை ஆகியவிவைகள் தங்களுக்கு அர்த்தமில்லாதவெ றுஞ் சொற்கள். இப்பதங்கள் தங்களுக்கு ஆகாயதாமரை, குதிரைக் கொம்பு, மலடிமகன் என்பவைபோல்வனவாகும். வெளுத்ததெல்லாம்பால் கருத்ததெல்லாம் தண்ணீர் என்று எண்ணுமியல்பினர். தங்களுக்கு இவ்வுலகில் சூதானகாரிய ங்கள் எவ்வளவு நடக்கின்றன வென்பது தெரியாது. எது எப்படித் தோன்றுகிறதோ அதை அப்படியே நம்புகிற மகாசாது. சாதுக்களையும் துர்ச்சனரையும் சமமாய்ப் பார்க் கும் மனமுடையீர். தாங்களிம்மாதிரி பிரபுவென்று நன் ருய் அறிந்திருக்கிறான் மகா சூதனாகிய மனோகரன். எப்ப டிப்பேசினால் தங்களுக் கிஷ்டமாயிருக்குமோ அதை நன் ருய் அறிந்து பேசினான் மகா வஞ்சகனான அத் துஷ்டன். தாங்கள் ஏதோமுன் சன்மாந்திர புண்ணியத்தால் நல்ல பக்தரா யிருப்பதையு மறிந்து அக்கபடன்தானும் அம்மா திரியாக விருப்பதாகக் காண்பிக்க, ஜகதீசன் என்றும், கரு ணையென்றும் சில பேச்சுகளைச்சொல்லி பக்தன்போல நடி க்கிறான். அவன் பேச்சையும் நடிப்பையுங் கவனிக்காமல் நாம் உண்மையை யறியவேண்டும். அவன் கடைசியாகப் பேசியதை யோசிக்கின், பின்னால் தனக்கு நேரிடக்கூடிய வையெல்லாம் வெகுதீர்க்கமா யோசித்து மகா சாதுவான தங்கள் புத்திரனைக் கொன்றிருக்கிறானென்று ஏற்படுகி றது. தாங்கள் நல்ல பாம்பைப் பால்வார்த்து வளர்ப்பது போல மனோகரனை யரண்மனையில் வளர்த்தீர்கள். பாம் பின்மீது குற்றமொன்றுமில்லை. அதற்கு இயற்கையாயமை

ந்த தொழிலைத்தான் செய்தது. பாருங்கள், பிணத்தைக் காணுதவாையில் கொலையேது என்று கேட்கிறுன். இதனுல் தாங்களென்ன நினைக்கிறீர்கள்?" என்று சுலோசனர் கேட்டபோது, சந்திரசேகரர், "அவ்வாறுகூறியதில் ஏதோ சூதிருக்கவேண்டும்" என்றுர். "நன்றுய்ச் சொன்னீர்கள் இப்போதுதான் தங்களுக்குத் துஷ்டர்களுடைய குணமும் செய்கையு மிவ்வாறிருக்குமென்று கொஞ்சம் தெரிகிறது" என்று சுலோசனர் சொன்னுர். இது உண்மைதானே. சுலோசனருடைய பார்வையிருந்தாலும் போதுமே. பிறகு மந்திரி தான் சும்மாயிருப்பது அழகல்லவென்றுநினைத்து, "அவன் சந்திரசூடனைக் கொன்றதுமல்லாமல் தேகத்தையும் யாவருங் காணுவண்ணம் அழித்துப்போட்டானென்று தோன்றுகிறது" என்றுர். மகாபுத்திசாலியிவர். அதற்கு சந்திரசேகரப் பிரபு, "இவையெல்லாம் யோசிக்கின் மனேகரன் காமத்திலிருந்து பிறந்த கோபவெறியால் சந்திரசூடனைக் கொன்றுனென்று ஏற்படுகிறது" என்று சொல்லும்போது, "ராம், ராம் சீதாராம்" என்று கீழே யாரோ ஒருவர் இனியகுரலுடன் சொல்லிக்கொண்டுவந்த சத்தமானதுகேட்டது. உடனே சாம்பன் ஓடிவந்து, இராமதாசர் வந்திருக்கிறுரென்று சொல்லவும், பிரபு அவரை அதிக மரியாதையாக மேன்மடிக்கு அழைத்துவர உத்தரவளித்தார். சிவபூசை வேளையில் கரடி புகுந்ததுபோல இவர்எங்கேயிருந்து வந்தாரென்று நினைத்துக்கொண்டு சுலோசனர் தனது ஆசனத்தைவிட்டு எழுந்து நிற்க, இராமதாசரும் வந்தார். பிறகு சுலோசனர் அங்கு நிற்கமுடியாமல் ஏதோ சில சாக்குகளைச் சொல்லிக்கொண்டு கீழிறங்கிவிட்டார்.

---

## 17. கள்ளர்கள் கடைசிதீர்மானம்.

இனிச் சிருங்கமலைக் கள்ளர்கள் எவ்வாறு போனுர்களென்பதை விசாரிப்போம். "கைக்கெட்டியது வாய்க்கெ

ட்டவில்லை" என்றபடி அவர்கள் தங்களருமைக்காதலியை நடுவழியில் இழக்க நேர்ந்தபோது ஓர் புதருக்குள் ஒளித்துக்கொண்டார்கள். குதிரைமீது பிரபுவைப்போல் உட்கார்ந்துவந்தவர் வசீகர சுந்தரியுடன் பேசியதைக் கேட்டபோது அவர்கள் அவரை சுலோசனரென்று நன்றாய் அறிந்தார்கள். அவர் சுந்தரியுடன் அவ்விடத்தை விட்டகன்றபின் கள்ளச்சகோதரர்கள் தங்கள் கோட்டைக்குப்போக வாரம்பித்தார்கள். "நாமிப்படி மோசம்போவோமா அண்ணே! இந்தச்சமயத்தில் நாமிவ்விடம் வருவோமென்று சுலோசனருக்கு எப்படித்தெரியும்? ஏதோ இலட்சுமிசூது செய்திருக்கிறாள், நிச்சயம்" என்று அஜாதன்சொன்னான்.

"இல்லைதம்பி! சுலோசனர் தற்செயலாய்த்தான் வந்திருக்கிறாரென்று எனக்குத் தோன்றுகிறது. இலட்சுமியின் சூது ஒன்றுமில்லை"

"அப்படியானால் சுலோசனர் நடுராத்திரியில் இக்காட்டிற்கு வருவானேன்?"

"வேறு ஏதாவது அவசரமான வேலை யிருக்கலாம். நாம் வருவது அவருக்குமுன்னமே தெரிந்திருக்குமாயின், அவர் சுந்தரியுடன் அவ்வாறுபேச வாரம்பித்திருக்கமாட்டார். அவ்வளவு ஆச்சரியமுங் கொண்டிருக்கமாட்டார்."

"சரிதான். இலட்சுமி உண்மையாகத்தான் பாடுபட்டிருக்கிறாளென்று நினைக்கிறாயோ அண்ணே?"

"ஆமாம். அதில் சந்தேகமேயில்லை."

"நாமெவ்வளவோ பெரியவேலைகளை யெல்லாஞ் செய்திருக்கிறோம். கடைசியாக ஒரு ஸ்திரீ நம்முடையவச மகப்பட்டுக்கொண்டபின் அவளைக் காப்பாற்றிக்கொள்ள நமக்குச் சக்தியில்லாமல் போய்விட்டதே அண்ணே! சுந்தரி சுலோசனருக்குத்தான் சொந்தமாக்கும்."

"நாமென்ன செய்கிறது தம்பி? ஐந்துபேர் உருவிய கத்தியுடன் வந்தால் அவர்களை நாமெப்படி எதிர்ப்பது? நம்முடைய கையில் ஆயுதமில்லை, நமக்கு ஒத்தாசை செய்

ய வேறுமனிதருமில்லை. வந்தவரோ இவ்வூர்க்கதிபதி. அவரிடத்து அகப்பட்டுக்கொள்ளாமல் நாம் தந்திரமாய்த் தப்பித்துக்கொண்டது நம்முடைய அதிர்ஷ்டம்.''

"ஆமாம். நாம் தந்திரமாய் வேலைசெய்யவேண்டுமேயல்லாமல் பகிரங்கமாய் ஒன்றுஞ் செய்யக்கூடாது. நூறு தேங்காயை ஓரேகாலத்தில் தின்று வயிறு பெருத்தப்பிள்ளையாரும், கொழுத்த ஆட்டுக்கடாக்களை, இத்தனைநேரம், உயிருடன் உருட்டி விழுங்கியிருக்குஞ் சிருங்கமலை யம்மனும் நமக்குத் துணைசெய்திருந்தால் நாம் சுந்தரியை யிழந்திருக்கமட்டோம் அண்ணே.''

"குதிரை செத்ததுமல்லாமல் குழிதோண்டக் கூலியுமென்றவாறு, இரண்டாயிரம் பொன்னையும் முத்துமாலையையு மிழந்ததுடன், பூசைபோட்டதிலும் நமக்குச் சிலவு உண்டாயிற்று.''

"இத்தெய்வங்களை நாம் நம்பலாகாது. இவைகளை முனியோசனை செய்தவாறு தொலைத்துவிடவேண்டும்.''

"அவசரப்படக்கூடாது தம்பி. ஒருதரத்திற்கு இரண்டுதரம் பார்ப்போம்.''

"இன்னும் சுந்தரிபாசையுனக்கிருக்கிறதா அண்ணே?''

"இதோடே விட்டேனு? இந்நிலாக்காலம் போய் இருள்வந்தவுடன் ஒருநாள் நல்லசமயம் பார்த்து நடுராத்திரியில் நமது ஆட்களுடன் அரண்மனை புகுந்து சுந்தரியையெப்படியாவது தூக்கிக்கொண்டு வந்துவிடவேண்டும். இதுதான் முடிவான தீர்மானம்.''

"நாம் இதை முன்னமேயே செய்திருக்கலாமே? ஏன் இவ்வளவு பணத்தைச் செலவழித்திருக்கவேண்டும். இப்போது சுந்தரியை காட்டில் கண்டு அழைத்துப்போகிற சுலோசனர் சும்மாயிருப்பாரா? இனிச் சுந்தரி எவ்வளவு ஜாக்கிரதையாக இருப்பாள்? அவளுக்கு எத்தனைக் காவலாளர்கள் ஏற்படுவார்கள்? நீ செய்யும் யோசனை முடியாதண்ணே?''

தம்பி! உன்னிடத்தில் ஒரு கெட்டவாடிக்கை யிருக்கிறது. நீ எதையுஞ் சந்தேகிக்கிறாய். அதற்கேற்றாற்போல எல்லாங் கெட்டுவிடுகின்றன. காவற்காரர்க ளிருந்தாலென்ன? அவர்களே தூங்கிவிட்டாலும் போச்சுது. அல்லது விழித்திருந்தால் ஆளுக்கொரு மொசுரா கொடுத்தால் வேலை யாச்சுது. நாம் பிராணனுக்குத் துணிந்து வேலை செய்தால் சுந்தரி நமது சிருங்கமலைக் கோட்டைக்கு இராணியாவது நிச்சயம். அவள் தம்பியும் நமக்கு மந்திரி யாவான்.'' என்று ஜாதன் சொல்லிக் கொண்டு நடக்கையில், ஓர் மரத்தி லிருந்து ஜடைக் கிழவி துணிமூட்டைகளுடன் சரேலென்று கீழிறங்கி கள்ளச் சகோதரர்கள் தன்னைக் கவனிக்கா வண்ணம் அவர்களைப் பின் தொர்ந்து போனாள். கள்ளத் தலைவர்களுடைய உத்தரவு பிரகாரம் சிருங்கமலை யம்மனுக்குப் பூசை செய்து முடித்த வேலைக் காரர்கள் எஜமானர்களுடைய வரவை எதிர்ப் பார்த்துக் கொண் டிருக்கையில், இரு சகோதரர்களும் கோயிலுக்குள் நுழைந் தார்கள். அப்போது அவர்களைப் பின் தொடர்ந்து சென்ற ஜடைக் கிழவி கோயி லுக்குச் சமீபமாய் வெளியேயிருந்த ஓர் மரத்தின்மீதேறி யுட்கார்ந்துகொண்டிருந்தாள். கோயிலில் அம்மனுக்கெதிராக ஜாதன் நின்று கொண்டு, "ஹே அம்மனே! எங்கள் காரியங் கெட்டுப்போயிற்று. அவசரப்பட்டு உனக்குப் பூசைபோட்டோம். உனக்கிந்த பூசை சரிக்காது. ஆனாலும்இன்னொருதரம் பிரயத்தினஞ் செய்யப் போகிறோம். அப்போது நீதுணையிருந்து எங்கள் காரியத்தை முடிக்கவேண்டும். காரியம் முடிந்தால் உனக் கின்னும் பலமானபூசை போடுகிறோம். உன் கோயிலைப் பெரிதாகக் கட்டுகிறோம். தினம் விளக்கேற்றிவைக்கிறோம். எங்கள்வேலை மறுபடியும்கெட்டு விட்டால் உன்னை இந்தமலையிலிருந்து பிடுங்கி உரலிலிட்டு உலக்கையா லிடித்துத் தூளாக்கி காற்றில் பறக்க விட்டிடுவோம். இம்மாதிரி செய்வதாக முன்னமே நினைத்திருந்தா

னும், முதல்தடவை யானதால் மன்னித்தோம்'' என்று அண்ணன் அம்மனைத்துதிசெய்தான். பிறகு தம்பி ஆரம்பித்தான். "ஹேசிருங்கமலையீஸ்வரி! உனக்குநாங்கள் பூசைபோட, நீசுலோசனருக்குஒத்தாசைசெய்தாயே? மகாதுரோகிநீ. இனிஉன் வயிற்றை வாடஅடிக்கிறோம். இன்னும் கொஞ்சநாளைக்கு இந்த மலையிலிருந்து வாழவேண்டுமென்னும் ஆசை உனக்கிருந்தால், எங்கள் காரியத்தை நிறைவேற்று. இல்லாவிட்டால் உன் கதியாதாகுமோ'' என்று தம்பி ஜகதாம்பிகையை ஸ்தோத்திரஞ்செய்துமுடித்தான். அதிக தாமசகுணத்தைப்பெற்று முறட்டுத்தனமுள்ள மூடர்களுடைய பக்தி இவ்வண்ணந்தானிருக்குமோ? தெய்வ பிரார்த்தனையென்பது அவர்களுக்கு ஓர் வியாபாரம்போலும். காரியம் முடிந்தால் புகழ்வோம். இல்லாவிடின் இகழ்வோம். கோரிக்கைநிறைவேறினால் பூசைகள்போடுவோம். தவறினால் தலையையுடைப்போம். வயிறாரவுண்டால் வாழ்த்திடுவோம். நொந்தால் வைதிடுவோம் என்று கூறுபவர்களே மூடபக்தர்கள். இத்தகைய பக்தர்கள் இக்காலத்திலும் சிலர் உளர்.

இருசகோதரர்களும அம்மனைத் துதித்து வெளியே வந்து வண்டியிலேறிக் கொண்டு தங்களிருப்பிடம் நோக்கிச் சென்றார்கள். அவர்கள் கோயிலுக்குள் புகுந்து அம்மனைத் துதித்ததை வெளியே மரத்தின் மீது உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்த ஜடைக் கிழவியும், அவர்கள் வண்டிசிறிது தூரம் சென்றபின், மரத்தை விட்டுக் கீழிறங்கிஅவ்வண்டியைப் பார்த்துக் கொண்டே விரைவாக வோடி கள்ளர் கோட்டையை நெருங்கி ஓர் மரத்தின் மீதேறி யுட்கார்ந்து கொண்டாள். கள்ளச் சகோதரர்களிருவரும் கோட்டைக்குள் புகுந்தார்கள். அவர்களுடன் சென்ற வேலைக்காரர்களெல்லாம் அவர்களிருப்பிடம்போய்த் தங்கியபின், வெளியில் காவலாக உலாவிக் கொண்டிருந்த வேலைக்காரர்கள் கையிலிருந்த கத்தியை

ஓரிடத்தில் பத்திரப்படுத்திவிட்டு கோட்டைக்கு வெளியேயிருந்த ஓர் வீட்டில் நுழைந்தார்கள். ஒருவருமில்லாமல் நிசப்தமாயிருந்த சமயத்தில் ஜடைக்கிழவி மரத்தினின்று கீழிறங்கி தன்னிடத்திருந்த ஓர் பையை பவிழ்த்து விபூதியையெடுத்து நாலுபக்கங்களிலும் தூவிக்கொண்டு கோட்டைக்குள் புகுந்தாள். அவ்விடத்திருந்த ஒவ்வொரு கட்டிடங்களையும் நோக்கி, அங்கே படுத்துறங்குபவர்கள் மீதெல்லாம் விபூதியைத் தூவிக்கொண்டு, அங்குள்ள அதிசயங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு அக்கிழவி போகையில், ஓரிடத்தில் கருங்கற்களால் கட்டப்பட்ட ஒரு சிறிய வீட்டில் விளக்கெறிந்துகொண்டிருந்ததைக் கண்டாள். இன்னும் சற்று உற்றுப்பார்க்கையில் அதனுள் ஒரு மனிதன் ஒரு சிறுவனை யேதோ தொந்திரவு செய்துகொண்டிருந்ததாக அவளுக்குத் தோன்றிற்று. உடனே அவள் கை நிறைய விபூதியை யள்ளி அவ்வீட்டிற்குள் போய் விழும்படியாக பலமாக ஊதிவிட, உள்ளேயிருந்த இருவர்மேரிலும் அவ்விபூதி பட்டவுடன் அவர்கள் தலைசுற்றிக் கீழேவிழுந்து புத்திமயங்கினார்கள். பிறகு கிழவி உள்ளேசென்று பார்க்கையில், அவர்களில் ஒருவன் சுமார் பதினைந்துவயதுள்ள சிறுவனாயும் மிகுந்த அழகுள்ளவனாயும் காலில் விலங்கிடப்பட்டிருந்தான். மற்றொருவன் வயது சென்ற கறுத்தவனாய் அச்சிறுவனைக் காக்கும் வேலைக்காரன்போலக் காணப்பட்டான. அவ்வழகிய சிறுவனைக் கண்டவுடன் கிழவி மிகவும் அதிசயித்து மூக்கின்மேல் கைவைத்து மரம்போல் அசையாது சிறிதுநேரம் நின்றபின், மறுபடியும் விபூதியை யெடுத்து மந்திரித்து அவன்மீது தூவினாள். உடனே அவன் தூங்கிவிழிப்பவன்போல் கண்ணைத் திறந்தான். இருவரும் ஏதோ பேசினார்கள். பிறகு ஜடைக்கிழவி அதிக துரிதமாக நடந்து கோட்டையை விட்டு வெளியே வந்து பொழுதுவிடியுமுன் ஆனந்தபுரியை யடைந்தாள்.

---

## 18. இராமதாசர் உபதேசம்.

ஆனந்தபுரி யரண்மனைக்கு வந்த இராமதாசர் சந்திரசூடன் சங்கதியையும், மனோகரன் நிலைமையையும், சந்திரசேகரர், இரதி, சுந்தரி ஆகிய இவர்களுடைய விசனத்தையும் நன்றாய் அறிந்து அவ்விடத்திலேயே சிலநாள் தங்கினார். மந்திரியும் சுலோசனரும் மனோகரனைக் குறித்துக் கூறுவது அவருக்குத் தெரியவந்தது. அவர் அடிக்கடி சந்திரசேகரரிடத்து இதமாகப்பேசி அவரது விசனத்தையாற்றுவது வழக்கம். ஒருநாள் சாயந்திரம் இராமபக்தர் பிரபுவினிடத்துத் தனியே யுட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கையில் பிரபுவானவர், "இராமதாசரே! என்னென்ன துன்பங்களெல்லாம் மனிதனுக்குண்டாகின்றன பாருங்கள். இத்துன்பங்களை யுண்டுபண்ணும் கருணாநிதியான பகவானுடைய கருத்து யாதோ?" என்று கேட்டார். அதற்கு இராமதாசர், "பிரபுவே! நன்றாய்ச் சொன்னீர்கள். நமக்குத் துன்பத்தை யுண்டுபண்ணத்தானா பகவானிருக்கிறார்? அதுதானா அவர் தொழில்? அதற்காகவா அவனைக் கருணாநிதியென்று சொன்னீர்கள்? நமக்குத் துன்பத்தை யுண்டுபண்ண பகவானானால், இன்பத்தைக் கொடுப்பவர் யார்?" என்று வினவினார்.

"இராமபக்தரே! அந்தப் பகவானே தான் இன்பத்தையுங் கொடுக்கிறார்."

"சரி. ஒரே பகவான் இன்பத்தையும் துன்பத்தையுங் கொடுக்கிறாரென்று கூறிய பிரபுவே! இன்பத்தை யாருக்குக் கொடுக்கிறார்? துன்பத்தை யாருக்குக் கொடுக்கிறார்?"

"சிலருக்கு இன்பத்தையும் சிலருக்குத் துன்பத்தையும் கொடுக்கிறார்."

"பிரபுவே! அவர் ஏதோ பட்சபாதமாயிருப்பதாகக் காண்கிறதே. ஏன் எல்லாருக்கும் இன்பத்தையாவது அல்லது துன்பத்தையாவது கொடுக்கக் கூடாது?"

"அவர் பிரியம்போல நடத்துகிறார் இராமதாசரே."

"இருக்கட்டும். அந்தப் பிரியமேன் எல்லாரிடத்திலும் ஒரே மாதிரியாகயில்லை?"

"எல்லா மனிதர்களும் ஒரேமாதிரியாக இல்லாமையினாலே யோ?"

"இப்போது சொன்னது சரி பிரபுவே. சனங்கள் ஒரே மாதிரியாக யில்லாமல் வெவ்வேறு மாதிரியாக இருப்பதால் இன்ப துன்பங்களைக் கொடுக்கவல்ல பகவானுடைய பிரியமும் ஒரே மாதிரியில்லாமல் வேறுபட்டிருக்கிறது. அதாவது மனிதர்களுடைய நடவடிக்கையைப் பார்த்து அவரவர்கள் யோக்கியதைக்குத் தக்கவாறு இன்பதுன்பங்களைப் பகவான் கொடுக்கிறாரென்று ஏற்படுகிறதல்லவா?"

"ஆமாம் மனிதர்களே காரணம் போலிருக்கே?"

"ஆட்சேபனையென்ன? இன்பதுன்பங்களையடைவதற்கு மனிதர்கள் நடவடிக்கை அல்லது யோக்கியதை காரணமாகவிருக்க, பகவான்மீது பழியைப் போடுவானேன்? அநியாயமா பிரபுவே?"

"நீங்கள் சொல்லுவது சரியே. பேசும்பொழுது இப்படித்தான் முடிகிறது. ஆனால் உலகத்தில் யோக்கியர்களுக்கெல்லாம் நன்மையும் அயோக்கியர்களுக்கெல்லாந் தீமையும் உண்டாகக்காணோமே பக்தரே? அநேக சாதுக்கள்படுந் துயரத்தைச் சொல்லி முடியாது. பலதுஷ்டர்கள் ஒருவித்துன்பமு மில்லாமல்சுகத்தை யனுபவிக்கிறார்கள். நான் பிரத்தியட்சமாகப் பார்த்திருக்கிறேன். நீங்களே பாருங்கள் இராமதாசரே! நானிதுவரையில்யாருக்கும் ஒரு கெடுதியும் செய்ததில்லை. எனக்கேன் துன்பம்நேரிட்டிருக்கிறது?"

"இதற்கு வேறு நியாயம் கண்டுபிடிக்கவேண்டும். நாமிப்போது பார்ப்பதைக் கொண்டு பகவான் தன்னிஷ்டப்பிரகாரம் செய்கிறாரென்றும், சாதுக்களுக்குத் துன்பத்தையும் துஷ்டர்களுக்கு இன்பத்தையும் கொடுக்கிறா ரென்றுங் கூறுவது குற்றம். பிரபுவே! முன்னே தீர்மானித்தவண்ணம் மனிதர்களுடைய நடவடிக்கைக்குத் தக்கபடியே இன்பதுன்பங்கள் நேரிடுகின்றன. நடவடிக்கையென்பது ஒருவர்செய்யுங்கர்மம். அவரவர் கர்மத்திற்குத் தக்கவாறு சுகதுக்கங்கள் சம்பவிக்கின்றன. நல்ல கர்மஞ்செய்தால் சுகமும்தீயகர்மஞ்செய்தால் துக்கமும் உண்டாகிறது. செய்யுங்கர்மம் எத்தன்மைத்தோ அத்தன்மைத்தே பலனும். நன்மையிலிருந்து தீமை விளையாது. தீமை நன்மையைக் கொடுக்காது. இதுஇன்

ணம். பூசணிவிதை நட்டால் பாவற்காய் காய்க்காது. இது அனுபவமான சங்கதி. மறுத்தற்கியலாது. சுகந்தரத் தருவனவெல்லாம் சற்கருமம். துக்கம் பயப்பனவெல்லாம் துஷ்கருமம். ஆகவேசற்கருமம் துஷ்கருமம் காரணங்கள். சுகதுக்கங்கள் முறையே காரியங்கள். காரணமில்லாமல் ஒரு காரியமுண்டாகாது. எது நேர்ந்தபோதிலும் அதற்கென்ன காரணமென்று நாம் கேட்பது வழக்கம். ஒரு காரியத்திற்குக் காரண மறிகிறவரையில் நமக்கு மனச்சமாதன முண்டாகிறதில்லை. காரணங் கண்டபின் இந்தக் காரியம் நடந்தது நியாயமென ஒத்துக் கொள்ளுகிறோம். என்? காரணத்திலுள்ளது காரியத்திலு மிருப்பதால்தான். அப்படியே காரியத்திலுள்ளதைக் காரணத்திலும் பார்க்கிறோம். மண்காரணம். குடம் காரியம். மண்குடம் என்றாலும் குடம் மண் என்றாலும் ஒன்றுதான். வித்தியாசமில்லை. அதுபோல பிரபுவே! ஒருவனை சுகியென்போமானால் அவனை சற்கருமஞ் செய்தவ னென்றும், இன்னொருவனை துக்கியென்போமானல் அவனை துஷ்கருமஞ்செய்தவனென்றும் நாம் அறியவேண்டாமோ? இதற்கு ஆட்சேபனை யில்லையே. ஆதலின் இதனால் பெறப்பட்ட தென்னை யெனின், மனிதர்கள் அனுபவிக்கும் சுகதுக்கங்களுக்கு அவரவர்கள்செய்த கருமங்களே காரணம். சரிதானே யிதுபிரபுவே? ”

“நீங்கள் கூறியது சரியே. ஆனாலும் ஒரு சந்தேகம். இப்போது சற்கருமங்களைச் செய்து சாதுக்களென்று பெயர் பெற்றவர்கள் துக்கத்தைப் பலனாக அனுபவிப்பதற்கு எப்போது துஷ்கருமங்களைச் செய்தார்கள்? அப்படியே தீவினையே புரிவதால் துஷ்டர்கள் என்று பட்டம்பெற்றவர்கள் சுகமாக வாழ்வதற்கு சற்கருமம் புரிந்தது எக்காலத்திலோ? ”

“சரியான கேள்வி பிரபுவே. இதற்கு மறுமொழி சொல்ல கஷ்டமில்லை. எப்போது செய்தார்க ளென்றால் அவர்களுடைய முன் சன்மங்களிலேதான். ”

“இராமதாசரே! இதுகாறும் தாங்கள் கூறியதை யறிந்தேன். முன்னும் பின்னும் சன்மங்கள் உண்டென்ப தெப்படி? ”

“இது நியாயமான கேள்வி. சன்மாந்தரங்கள் உண்டு வென்பதை நமக்கு அனுபவமாயுள்ள சில திருஷ்டாந்தங்களாலே நிரூபிக்கிறேன் கேளுங்கள். ஒரு பெருங்கருணைத் திருவருளால் சிறு

ஷ்டிக்கப்பட்ட ஐம்பூதச் சேர்க்கையால் உண்டான தேகத்தைப் பெற்ற மனிதர்க ளெல்லாரும் ஒருவிதமான ஸ்திதியி லில்லாமல், சிலர் சம்பத்துடையவர்களாயும், சிலர் தரித்திரராயும், சிலர் சர்வாதிகாரமுள்ள இராசாக்களாயும், சிலர் அடிமைகளாயும், சிலர் எல்லா அவயவங்களும் நன்றாய்ப் பொருந்தி தேகப்பொலிவுடையவர்களாகவும், சிலர் கையோ அல்லது காலோ இல்லாத முடவராயும், செவிடராயும், குருடராயும், ஊமையாயும், சிலர் புத்திமான்களாயும், சிலர் மூடராயும் இருக்கிறார்கள். ஏன் இவ்வளவு ஏற்றத்தாழ்வுள்ள வித்தியாசங்க ளிருக்கவேண்டும்? உதாரணமாக நொண்டியாயுள்ள ஒரு மனிதனைக் குறித்து விசாரிப்போம். அவன்கால் ஏன் நொண்டியாயிருக்கிறது? இந்த நொண்டி சரீரத்தை அவனே யெடுத்துக் கொண்டானா? அல்லது வேறு யாராவது அவன்காலை நொண்டி யாக்கினார்களா? அவனிஷ்டப்படி சரீரம் எடுத்துக் கொள்ளுவதா யிருந்தால் அவன் நல்ல சரீரத்தை யெடுத்துக் கொள்ளுவானே யல்லாமல் நொண்டி சரீரத்தை எடுத்துக் கொள்ளமாட்டான். அவன் சரீரம் மாதாவினுடைய கர்ப்பத்திலுண்டானபடியால், கர்ப்பத்தில் பிரவேசித்து அவன்காலை நொண்டியாக்க வேறொரு மனிதனு லாகமாட்டாது. அவன்கால் நொண்டியாவானேன்? அவன்செய்தகுற்றம் அல்லது பாவத்திற்கு அவனுக்குக் கர்ப்பத்திலேயே சிட்சைகொடுக்கப்பட்டதென்று ஏற்படுகிறதல்லவா? கர்ப்பத்திலேயே சிட்சைகொடுக்கப் பட்டதால், அக்கர்ப்பத்தில் அவன் பிரவேசிக்கு முன்னமேயே அவன்பாவஞ்செய்திருக்கவேண்டு மல்லவா? முன்னமேயே பாவஞ்செய்ய அவனுக்கொரு சன்மமிருக்க வேண்டுமே? அப்படி யில்லாவிட்டால் அவன் பாவஞ்செய்த தெப்போது? பாவமே செய்யாதிருந்தால் அவனுக்கு சிட்சையேது? அவன்கால் நொண்டியாக வேண்டிய நியாயமுமில்லை. ஆனால் அவனுக்கு முன் சன்மமுண்டென்று சுலபமாய் ஊகிக்கலாம். முன்னே சன்மமுண்டென்றால் இனி ஏன்சன்மமிருக்கக் கூடாது? இருக்கலாம்.

இன்னொரு திருஷ்டாந்தம் பாருங்கள் பிரபுவே. சற்றேறக்குறைய ஒரேவயதுள்ள மாணாக்கர்கள் ஒன்றாகக்கூடி ஒரு உபாத்தியாயரிடத்து வித்தை கற்கப்போகிறார்கள். அவர்களுக் கெல்லாம் ஒரு விஷயத்தைக் குறித்து ஒரேகாலத்தில் ஒரேவிதமாய் அவ்வுபாத்தியாயர் போதிக்கிறார். அப்பிள்ளைக ளெல்லாரும் அவ்விஷயத்தை ஒரேவிதமாய் அறிகிறதில்லை. ஒருவன்விஷயத்தைப் பூரணமாய்

அறிகிறான். மற்றொருவன் கொஞ்சங்குறைவா யறிகிறான். இன்னொருவன் சொன்ன விஷயத்தைவிட்டு வேறொருவிஷயஞ்சொன்னதாக நிச்சயிக்கிறான். இன்னுமொருவன் சொன்னவிஷயத்தை யறிய வகையிலாது மற்றொருவனைக் கெஞ்சிக் கேட்கிறான். இன்னும் சிலமாணாக்கர்கள் விஷயத்தையறிய ஆவலும் முயற்சியுமற்றுச் சும்மாயிருந்து, உபாத்தியாய ரிடத்துப் பாடம்படிக்கும் இச்சண்டாளத்தொழில் நம்மை எப்போது விட்டொழியு மென்று ஏக்கமுற்றிருக்கிறார்கள். எல்லாருக்கும் பொதுவாய் போதித்த விஷயத்தைக் குறித்து அவர்களைப் பரிட்சைசெய்யுங் காலத்தில் எல்லாரும் ஒருவிதமான சமாதானத்தைச் சொல்லவேண்டியது நியாயமாயிருக்க, ஒருவர் சொல்லுகிறமாதிரி மற்றொருவர் சொல்லாமல் ஏற்றக்குறைவாயும் சம்பந்த மில்லாததாயுமுள்ள சமாதானங்களை அவர்கள் கூறுகிறார்கள். இதற்கென்ன காரணம்? எல்லாரும் சமவயதுடையவர்கள். கேட்டவிஷய மொன்று. போதித்தவரும் ஒரே உபாத்தியாயர். என் பிள்ளைகள் பலவிதமான மறுமொழிகளைக் கூறவேண்டும்? இதற்குச் சமாதானம் அப்பிள்ளைகளினுடைய புத்திபரிபக்குவத்தில் வித்தியாச மிருக்கிறதென்று தான் சொல்லவேண்டும். புத்திபரிபக்குவ மடையத்தானே அவர்கள் உபாத்தியாய ரிடத்துச் சென்றார்கள், இதற்குமுன் அவர்கள் புத்திபரிபக்குவ மடைந்த தெப்போது என்று கேட்பின், அவரவர்களுடைய முன்சன்மங்களி லென்றுதான் கூறவேண்டும். அதெப்படித் தெரியுமெனின், முன்சன்ம மில்லாவிட்டால், உபாத்தியாயரிடத்துச் செல்லும்போது அவர்களுடைய புத்தியின்நிலைமை ஒரே மாதிரியா யிருக்கும். ஆதலால் விஷயத்தை ஒரே அளவாக எல்லாரும் கிரகித்து வித்தியாசமில்லாமல் ஒரே சமாதானத்தை அவர்க ளெல்லாருங் கூறுவார்கள். அப்படிக் கில்லாமையினால், அவர்கள் புத்திநிலைமை ஒரேமாதிரியாக இருக்கவில்லை யென்றும், அதற்குக் காரணம் அவர்கள் முன்சன்மங்களில் உழைத்த உழைப்பென்றும் பெறப்படுகிறது.

இன்னுமொரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன் கேளுங்கள். ஒருவாலிபன் பார்ப்பதற்கு அதிசுந்தரனும் நல் லாடையாபரணங்களை யணிந்து அதிக கம்பீரமாய் இரண்டு குதிரைகள் பூட்டிய நல்ல வண்டியி லுட்கார்ந்துகொண்டு சீமானாய், முன்னே இரண்டு வேலையாட்கள் ஓடவும், பின்னே இரண்டு ஆட்கள் வண்டியில் நின்று நாதமொலிக்கவும், பார்ப்போர் மனதைக் கவரும்படியா

கச் சவாரிசெய்து கொண்டுபோகப்பார்த்தவர்கள், 'யாரோ இவன்! மிக்க அழகுவாய்ந்தவன்! நல்ல சம்பத்துடையவன். வெகு உல்லாசமாய்ப் போகிறான். முன்சன்மத்தில் நல்ல புண்ணியஞ் செய்தானுக்கும். இவனும் மனிதனே. இவன் வண்டியின் முன்னே ஓடுகிறவர்களும் மனிதர்களே. ஒருகவளம் அன்னத்திற்கு காற்றிலகப்பட்ட பஞ்சுபோலப் பறக்கும் நாமும் மனிதர்களே. ஆகா! என்ன வித்தியாசம்! பதவிப்பூர்வ புண்ணியானும் என்று சொல்லுகிறபடி இவையெல்லாம் சன்மாந்திர புண்ணிய பாவத்திற்குத் தக்கபடியிருக்கின்றன' என்று சொல்லுகிறார்கள். இப்படிச் சொல்லுகிறவர்கள் யாராவது சன்மாந்திரத்தைக் குறித்து சாஸ்திரமூலமாயாவது அல்லது குருக்கள்மூலமாயாவது அல்லது தங்கள் சொந்த யுக்திகளாலாவது ஆராய்ந்து அறிந்தவர்களா? அல்ல. அப்படியிருந்தும் சன்மாந்திரம் உண்டென்னும் நம்பிக்கை அவர்களுக்கு ஒன்றையும் விசாரியாமலே ஏற்பட்டிருக்கலால் சன்மாந்திர அனுபவம்பெற்ற ஜீவன் உள்ளிருந்து உணர்த்த அவர்கள் சொல்லுகிறார்களென்று நாம் நிர்ணயிக்க வேண்டியதாயிருக்கிறது.

சன்மாந்திரத்தைக் குறித்துக் கடைசியாக ஒருசங்கதி சொல்லுகிறேன் கேளுங்கள். ஒருமனிதன் தேக அசௌக்கியமுற்றுமிகவுங்கஷ்டப்பட்டுத்தேறியபின், 'ஐயா? நான் அந்தக்கொடியவியாதியால் பீடிக்கப்பட்டு மிகவும் வருத்தமெய்தி மாறுவஸ்தைப் பட்டேன்' என்று சொல்லுகிறான். மாறுவஸ்தையை யதற்குமுன் அம்மனிதன் அனுபவித்திருந்தாலல்லாமல், அவ்வவஸ்தையின்னதென்று அவனுக் கெப்படித்தெரியும்? முன்சன்மமில்லாத பக்ஷத்தில் அவன் மரண மடைந்தது எப்போது? முன்னும் பின்னுமில்லாமல் ஒரே சன்மமுள்ளதானால் ஒருமரணந்தானேயுண்டு. அவ்வொரு மரணத்தை யடைந்தபின் அதனுடைய அவஸ்தானுபவத்தைச் சொல்ல மனிதன் எங்கே? அவ்வவஸ்தானுபவத்தைக் கூற மனிதன் இருப்பதுகொண்டு, முன்சன்மமிருந்திருக்க வேண்டுமென்றும், அச்சன்மத்தைவிட்டு நீங்குங்காலத்துண்டான மரணத்தில் அவஸ்தையை யனுபவித்தஜீவன் உள்ளிருந்து உணர்த்த மனிதன் மாறுவஸ்தைப்பட்டேனென்றுகூறுவதாகவெல்லோரும் ஆட்சேபணையில்லாமல் ஒத்துக்கொள்ளுகிறோம். இவ்வாறு யோசிக்கின் சன்மாந்தரமுண்டென்பதை ஸ்தாபிக்க அநேக அனுபவவிஷயங்களிருக்கின்றன. இவையெல்லாம் பக்ஷபாதமற்று நிதானித்து உற்று நோக்குவோர்க்குப்புலப்படும். பிரபுவே நான்கூறுவது சரிதானே?"

"தாங்களிப்போதுசொல்லியதால் சன்மாந்தர முண்டென்றும் அவைகளிற் செய்தபுண்ணிய பாவகர்மங்களுக்குத்தக்கவாறு சுகதுக்கங்களுண்டாகின்றன வென்றுமறிந்தேன். இப்போது ஒரு சந்தேக முண்டாகிறது. அதென்னையெனின், முன்சன்மங்களில் நாமெவ்வா றிருந்தோமென்று இப்போது என் அறிய முடியவில்லை?"

"பிரபுவே! அது ஓர் மறதியேயாம். அது எதுபோன்றதெனின், சொல்லுகிறேன்கேளுங்கள். இந்தசன்மத்தில்நம்முடைய தாய் தந்தையர்கள் சிலவருஷங்களுக்குமுன் இறந்து விட்டார்களென்பது நமக்கு நன்ருய்த் தெரிந்தவிஷயம். ஆனல் நம்முடைய சொப்பனத்தில் அவர்களைக்காணும்போது அவர்கள் முன்னமேயே இறந்துவிட்டசங்கதி நமக்கு ஞாபகத்திற்குவராமல், நாம்அவர்களுடன் கலந்து பேசி உண்டு களிக்கிறேமே அதென்ன? எந்த மனமானது சாக்கிரத்தில் நமது தாய்தந்தையர்களை யிறந்து விட்டார்களென்று அறிந்ததோ, அதேமனந்தானே சொப்பனத்திலுமுள்ளது. என் அறியவில்லை? ஓர்தேகத்தில் சாக்கிராவஸ்தாசகிதமாய் நின்று ஓர்விஷயத்தை யறிந்த மனமானது அத்தேகத்தின் கண்ணே மற்றோர் அவஸ்தையாகிய சொப்பனத்தை யடையும்போது முன்னவஸ்தையிலறிந்ததை மறந்து விடுமாயின், முன்சன்மத்தில் வேறுதேகத்தை யடைந்திருந்த போது நடந்தசங்கதிகளை எப்படிமறவாமல்அறியமுடியும்? முடியாது. ஆனல்மனதினுடைய சொரூபநிலையை நன்ருய் அறிந்து ஆத்மானுபவம் பெற்றதிரிகால ஞானிகள் சன்மாந்தரங்களில்நடந்ததையறிவார்கள். ஏனையோர் அறிவது கஷ்டம்."

"சுவாமிகளே! தாங்கள் கூறிய தொக்கும். நாமெடுக்கும் சன்மங்களுக்கும் அவைகளிலடையும் சுகதுக்கங்களுக்குங் காரணம் நம்முடைய கர்மமானல் பகவானல் நாமடையும் பலனென்ன? அவனைத் துதிப்பானேன்?"

"பிரபுவே! கேளுங்கள். உங்கள் கேள்விகளெல்லாம் மிகவும் ஒழுங்காயிருக்கின்றன. அநித்தியமானவைகளை நித்தியமெனமருண்டு துன்பத்தையே சுகமென மயங்கி யோடியலையும் மனதினுடைய சங்கற்ப ரூபமான ஆசையே கருமத்திற்கு ஆதிகாரணமாக நின்று நமக்குப் பிறவிகளைக் கொடுக்கின்றன. ஒவ்வொரு பிறவியிலும் நம்முடைய மனமானது புதிதான ஆசைகளைச் சேர்த்துக் கொண்டு கர்மத்தை விர்த்தியாக்குகிறது. இதனு லாசையுற்றதை

யனுபவிக்க மேன்மேலும் சன்மங்களுண்டாகின்றன. சன்மவிர்த்
திக்குக் காரணமான உலகவாஞ்சையில் மனம்பற்றியிருக்குமாகில்
சன்மங்கள் விர்த்தியாகா. ஆனால் அநாதிகாலமாய் நம்முடைய
மனதிற்கு ஏதையும் பற்றுவதே சுபாவமான தொழிலாய்விட்டபடி
யால், அது அத்தொழிலை விடுவது கஷ்டம். அது பற்றுந் தொழி
லைச் செய்யவும் வேண்டும், நமக்கு சன்மங்கள் விர்த்தியாகாமலிரு
க்கவும் வேண்டும், இதற்கென்ன யுக்தி? மனமானது எதை ஆசை
கொள்ளுகிறதோ அதையடையும் வலியுள்ளது. ஆதலால் அநித்திய
மாயும் அல்லல் நிறையப்பெற்றதாயுமுள்ள உலகத்தினின்று நாட்
டம் வைத்த மனதை மெள்ளத்திருப்பி நித்தியானந்த சொரூபியா
ன பகவானைப் பற்றும்படி செய்துவிட்டால் சன்மம் விர்த்தியாகா
மல் குறையும். ஏனெனில் மனம் எதைப்பற்றி யாசையுற்றதோ
அதைத்தானே யடையும். பகவானைப்பற்றி பக்திசெய்தால் பக
வானைத்தானே யடையவேண்டும். பகவானிடத்து ஆசை அதிக
தீவிரமாய்ப் பற்றப்பற்ற காலடைவில் சன்மமேயில்லாமல் துன்ப
ம்நீங்கி நித்திய பேரின்பத்தை யடையலாம். துக்கமயமான உல
கத்தில் பற்றுண்டானால் துக்கமே உண்டாகிறது. சனனமரணத்
தைக் காட்டிலும் பெருந்துக்கம் வேறுளதோ? இத்தகைய உலகத்
தில் நிராசையுற்று பகவானைப் பற்றினால் அவரிடத்துள்ள நித்திய
பேரின்பத்தை அவர் கொடுக்கிறார். இதுதான் அவரால் நாமடை
யும் பலன். அப்பலனையடைய அவரிடத்தில் சதா நம்முடைய
மனம் பற்றியிருக்குமாறு அவரது அனந்த கல்யாணகுண விசேஷ
ங்களை மனதால் தியானித்து வாயாரப்புகழ்ந்து நாம் துதிப்பது."

"தற்காலத்தில் எனக்கு நேரிட்டிருக்கும் துன்பத்தை நீக்கி
இன்பத்தைக் கொடுக்க வெழுந்தருளிய எனது குருநாதரே!
சதா சஞ்சலித்துக்கொண்டிருக்கும் மனதை பகவானிடத்து நிறு
த்துவதெப்படி?"

"சங்கற்பமே சொரூபமாயுடையதாயினும் மனதை பகவானிட
த்து நிறுத்துவது கஷ்டமாயினும் அப்பியாசத்தால் சாதிக்கமுடி
யும். மனதை யோரிடத்து நிலைத்து நிற்கச்செய்யும் அப்பியாசமே
யோகமாம். பகவானிடத்து மனதை யர்ப்பணஞ் செய்யும் யோ
கம் பக்தி யோகமெனப்படும். இந்த யோகத்தைச் செய்ய விரும்
புவோர் தனியே ஓர் அறையைத்திருப்பது நல்லது. அந்த அறை
யில் நித்திரைசெய்யக்கூடாது. அதை மிகச் சுத்தமாய் வைக்க
வேண்டும். ஸ்நானஞ் செய்யாமுன் அவ்வறைக்குள்போகக்கூடாது.

எப்போதும் நல்ல மணமுள்ள புஷ்பங்களை அவ்வறையில் வைத்து, காலை மாலையில் வாசனைத் திரவியங்களைக் கொளுத்துதல் மிகவும் நலம். இன்றும் அதில் பார்த்தவுடன் பகவானுடைய ஞாபகத்தை யுண்டுபண்ணவல்ல அழகான படங்களை வைப்பது சிலாக்கியம். அன்னியரொருவரும் அதில் போகாதிருப்பது உத்தமம். ஆனால் அதை வைத்திருக்கும் யோகியின் எண்ணத்தையும் மனோபாவத்தையு முடையவர்கள் மாத்திரம் போகுதல் நஷ்டமில்லை. அவ்வறையில் நுழைந்தவுடன் அசுத்தமான எண்ணங்களையும் பொருமைக் குணங்களையும் விட்டுவிடவேண்டும். பிறகு உட்கார்ந்து பகவானைத் துதிக்கவேண்டும். இப்படியேதினஞ் செய்யவேண்டும்.

இப்படி தினந்தோறும் அப்பியாசித்து பக்தியிற் பழகவேண்டும். இதைச்செய்யாமல் பிறர் மதிக்க வித்தைகற்று பலனென்ன? உயர்ந்தகுலத்திற் பிறந்தென்ன? எவ்வளவு அரிய பெரிய விஷயங்களை யறிந்தும் அனுபவமில்லாமல் பேசுவதில்பயனில்லை. வயதில்பெரியவராயும் நால்வேத பாராயணம்செய்தவராயுமிருத்தலே போதாதெனக் காட்டவோ, வேதாந்தசாஸ்திர உண்மையறிந்த அனுபவிபோல பார்த்தவையெல்லாம் பத்மநாபனே யென்று நம்பியபாலகனை பிரகலாதனுக்குப் பரந்தாமன் பரமபதந்தந்தருளினன். உயர்குலத்திற் பிறந்து வித்தையைப்படித்து விட்டதினாலேயே பயனில்லையெனத் தெரிவித்ததற்கோ, பஞ்சமகுலத்தில் திருநாளைப் போவாரென்றும் நந்தன்தோன்றினன். வாய்ப்பேச்சில் இலாபமில்லை, உலகப்பற்றறுத்ததை யனுபவத்தில் காண்பிப்பதே சிலாக்கியமென தெளிவித்தற்கோ, கானகமேதிரிந்து கடுங்கொலையே புரிந்துவாழ்ந்த கண்ணப்பனுக்கு முக்கண்ணன் முத்தியளித்தனன். பொறுமையுடன் தினந்தோறும் சிறிது நேரம் தனியேயுட்கார்ந்து, உலகம் எத்தன்மைத்து? நாம்யார்? பகவானது அருள் எப்படி விளங்கிறது? என்று துன்பம் நீங்கி இன்பம் பெறவேண்டுமென்னு மாசையுள்ளவர்கள் ஆராயப்புகுதல் வேண்டும். மதவிஷயமாய் நமக்கென்னதெரியப்போகிறது? குருவொருவருமில்லையேயென்று சந்தேகிக்க வேண்டாம். உலகவியாபாரத்தைச் சிறிதுநேரம் தள்ளிவைத்து உண்மையில் ஆசையுட னுட்கார்ந்துயோசிக்க வாரம்பித்தால், எள்ளிலெண்ணெய்போ லெங்கும் பரிபூரணமாய் நிறைந்தோங்கும் அருளே திருமேனியாயுடைய பெருங்கருணை வள்ளல் சும்மாயிருப்பாரோ? தத்துவம் அறியவே

ண்டி தினமும் தன்னந்தனியனா யுட்கார்ந்து பழகி அதுவே தவமாகி யொழுகின். அநேக பக்தர்களுக்கு உபதேசித்தருளிய மூக்காலமறிந்த முகுந்தன் குருமூர்த்தமாய் வாரானோ? பகவானது சொரூபத்தையும் விசித்திர மகிமையும் அறிவதே நமக்குத் தொழில். அதனாலடையும் ஞானமே நமக்குப் பொருள், அதுவே நமக்கு இன்பம், வேறெதையும் நாடிடோமென்று ஊக்கமுடனுட்கார்ந்துழைக்கும் பக்தனுக்குப் பரந்தாமன் உண்மை பகராது போவானோ?"

என்று இராமபக்தர் கூறியபோது சந்திரசேகரர்கண்களிலிருந்து ஆனந்த மேலீட்டலால் முத்தென நீர்சொரிந்தன. சுபாவத்தில் அவர் தெய்வபக்தியுள்ள பிரபு. இராமபக்தர் வாக்கியத்தால் அவருக்கு அம்மாதிரி உண்டாகியது. பிறகு பிரபு பக்தனைத் துதித்து தன்னுடன் இன்னும் சிலநாள் இருக்கும்படி அவனை வேண்டிக்கொண்டனர். இராமபக்தர் பேச்சினால் புத்திரனை யிழந்த பிரபுவினுடைய துக்கம் மாறிவிடாதோ? ஆதலால் வேண்டிக்கொண்டனர்.

## 19. சுலோசனரும் மனோகரனும்.

காவலிலிருக்கும் மனோகரன் பிறரிடத்து எவ்வளவு தைரியமாய்ப் பேசினபோதிலும் தனியேயிருக்கும்போது தன்னிலைமையைக் கருதி மனவருத்த மடைவான். இது மாந்தரியல்பு. "சுலோசனர் ஆனந்தபுரிக்கதிபதியாகி அதிகாரம் பெற்றவரா யிருப்பதால் யாவரும் அவர்சொற்படி கேட்பார்கள். அவர்காதலித்த சுந்தரி என்மீது நாட்டங்கொண்டவளாயிருக்கிறாளென்பதை அவர் அறிந்திருக்கலாம். ஆதலால் சமயம்நேர்ந்தபோது என்னைத் தொலைத்துவிட வழியேற்படுத்துகிறார். இக்காலத்தில் கொடியவர்களுடைய எண்ணமே யீடேறுகிறபடியால் அவர்தப்பு சாட்சிகளைத் தயார்செய்து என்மீதுகுற்றத்தை ஸ்தாபித்து விடலாம், பிறகு என்கதியென்னவாகும்? இப்போது நான் என்ன

செய்யலாம்? எங்கேயாவது தூரதேசம் ஓடிவிடலாமா?
சீச்சீ! இதென்னகாரியம்! பிறர் என்ன சொல்லுவார்கள்?
குற்றஞ் செய்தது உண்மையானதால் தப்பித்துக்கொள்ள
ஓடிவிட்டா னென்பார்களே. சுந்தரி என்னநினைப்பாள்?
என்மீதுசுமத்தப்பட்ட குற்றத்தை நியாயாதிபதிகள் விசா
ரிக்கும் வரையில் நானிங்கே தானிருக்கவேண்டும். என்னு
யிர்ச்சுந்தரியின் மனோநிலைமை எனக்குத் தெரியவில்லையே,
என்ன செய்வேன்? என்று மனோகரன் அதிகவிசனத்தை
யுட்கொண்டவனாய் யோசித்துக்கொண்டிருக்கையில், அவ
னிருந்த அறையின்கதவு திடீரென்று திறக்கப்பட்டது.
உடனே சுலோசனர் உள்ளே நுழைந்தார். மறுபடியும் கத
வு மூடப்பட்டது. அவரைக் கண்ட மனோகரன் எழுந்து
நிற்க, சுலோசனர் ஓர் ஆசனத்திலுட் கார்ந்து கொண்டு,
“மனோகரா! உன் சமாச்சாரத்தைக் கேள்விப்பட்டு மிகவும்
விசனமடைந்து நேரில்கண்டு பேசவேண்டுமென்னு மாவ
லுடன் வந்தேன். யானைக்கும் அடிசறுக்குமென்பதுபோல,
எவ்வளவு புத்திமான்களாயிருந்த போதிலும் மனிதர்கள்
சில சந்தர்ப்பங்களில் நியாயத்தை விட்டுத் தவறிப் போவ
துண்டு. தவறிப்போய்க் குற்றங்களைச் செய்துவிட்டா
லும் புத்திசாலிகள் தப்பித்துக் கொள்ள பிரயத்தனஞ்
செய்வார்களேயல்லாமல் சும்மாயிரார்கள். உனக்கு எவ்
விதமான உதவிகளையும் செய்ய நான் சித்தமாயிருக்கிறே
ன். உன் அபிப்பிராயமென்ன?” என்று கேட்டார். அத
ற்கு மனோகரன், “பிரபுவே! குற்றஞ் செய்தவன் தப்பித்
துக்கொள்ள வழிதேடவேண்டியது அவசியமே. ஒரு குற்
றமுஞ் செய்யாத யான் என்னசெய்யவேண்டும்? அதற்கு
நீங்கள் ஏதாவது உதவி செய்தால் போதுமானது. இக்கா
லத்தில் எனக்கு உதவிசெய்பவர் தங்களைக்காட்டிலும் வே
றுயாரிருக்கிறார்கள்?” என்றான். பிறகு சுலோசனர், “நீ
என்னிடத்து ஒளித்துப்பேசுவதில் பயனில்லை. மனோகரா!

உண்மையுரைப்பாயானால் உனக்கு உபகாரஞ் செய்வேன்.
குற்றம் என்னமோ அநேகமாய் ருசுவாயிருக்கிறது" என்
று சொல்ல, மநோகரன், "நான் ஒரு குற்றமுஞ் செய்யவி
ல்லை. இது சத்தியம்." என்று நடந்த விருத்தாந்தங்களை
யெல்லாம் விவரமாகக் கூறினான். "நான் எவ்வளவு சொன்
னாலும் நீ அறியவில்லை. ஒரு குற்றமுஞ் செய்யாமலிருந்
தால் உன்னையேன் காவலிலிட்டார்கள்?" என்று சுலோச
னர் கேட்க, மநோகரன், "அதுதான் எனக்குத் தெரியவி
ல்லை" என்றான். "கூடிய சீக்கிரத்தில் விசாரணை நடக்கும்.
அதில் குற்றம் நீ செய்ததாகவே நிச்சயமாய் ஏற்படும்.
பிறகு உன்கதி யாதாகுமோ அது உனக்கே தெரியும்."
என்றார் சுலோசனர். "பிரபுவே! ஒருவேளை பொய் மெய்
யாகி எனக்குத் தீங்குநேரிடுமாயின், அதைப்பகவான் தந்த
தென சம்மதத்துடன் நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்" எ
ன்று மநோகரன் சொன்னதைக் கேட்ட சுலோசனர் தா
னெண்ணியவண்ணம் அவன் ஒத்துவராமையினால் சிறிது
கோபங்கொண்டு, "மநோகரா! நீ மிகவும்பிடிவாதக்காரன்.
மகா கடினமனதையுடையவன். இல்லாவிட்டால் உன்னை
இதுகாறும் காப்பாற்றிய பிரபுவின் புத்திரனைக் கொல்லு
வாயா? உனக்கு நிச்சயமாய்க் கெடுதிநேரிடும். நான்சொல்
லும் வண்ணம் கேட்பையாயின் நீ அன்னியதேசம்போய்ச்
சுகமாய் வாழலாம். இல்லாவிட்டால் உனக்கு மரணம்
நிச்சயம்" என்று சொன்னார். அதற்கு மநோகரன், "மர
ணத்தைப்போல நிச்சயமான விஷயம் வேறொன்றுமில்லை
யே? எனக்குமாத்திரமா? சகலசீவ ராசிகளுக்குமுண்டல்
லவோ" என்றான். இதைக் கேட்ட சுலோசனர், "உனக்
கு உண்டாகப்போகிறது துர்மரணம்." என்று கோபித்து
ச்சொல்ல, மநோகரன், "எல்லாத் துன்பங்களிலும் மிகக்
கொடியது மரணம். அதில் துர்மரணமென்பதென்ன?"
என்று கேட்டான். "துஷ்டனுக்கு வாய் அதிகமாகும்.
துர்மரணமென்றால், பிறனால் குறிக்கப்பட்ட காலத்திற்

குருவின் இஷ்டத்திற்கு விரோதமாய்ப் பலர் அறியப் பிராணனை விடுவதுதான். இது தெரியாதா?'' என்றார் ஆனந்தபுரிக்கதிபதி. பிறகு மனோகரன், "பிரபுவே! தாங்கள் கூறியது எனக்குத் தெரியவில்லை. ஒருவனுக்குப் பிரமனால் குறிக்கப்பட்ட காலத்தை யாவர் முன்னதாக அறிவார்? மரணம் வந்தபோ தல்லவோ பிரமன் எழுதியநாள் இவ்வளவுதா னென்று உலகத்தார் கூறுவது வழக்கம். இஷ்டத்திற்கு விரோதமா யென்றீர்களே? இஷ்டத்துடன் இறந்தவர் யார்? அதிக வயதாகி தேகம்மெலிந்து தசேந்திரியங்களை யிழந்த கிழவர்களும் மரணத்திற்குப் பயந்து இன்னும் சிலவருஷங்கள் சீவித் திரோமாவென்று ஆசைப்படுகிறார்கள். ஆதலால் இஷ்டத்துடன் இறப்பவர்கள் இல்லவேயில்லை. இன்னும் பலர் அறியவென்று சொன்னீர்கள். இது வழக்கமல்லவோ? ஒருவனுக்கு மரணம் சமீபத்திருக்கிற தென்று அறிந்தபோது அவனுடைய பந்துக்களுக்கும் இஷ்டர்களுக்கும் சங்கதியைத் தெரியப்படுத்துகிறார்கள். அவன் இறந்தபின் இன்னும் அநேகருக்குச் சமாச்சாரம் அனுப்புகிறார்கள். அவன் பிணத்தைக் காட்டிற்குக் கொண்டுபோகும்போது எல்லாரும் அறியும் வண்ணம் அதிக சத்தஞ்செய்யுந் தமுக்கென்னும் ஓர் பறையை முன்னே அடித்துக் கொண்டு போகிறார்கள். இரகசியமாய் ஒருவரும் இறப்பதைக் காணோமே. நீங்கள் சொல்லிய துர்மரணத்தில் விசேஷமொன்று மில்லையே'' என்று மனோகரன் பரிகாசமாய்ப் பேச, சுலோசனர், "நீ அடையப்போகிற மரணம் ஒரு பெருங் குற்றத்திற்காக. அது மிகவும் இழிவானது'' என்று புதிய சமாதானங்கூற "எல்லாரும் ஏதோகுற்றம் அல்லது பாவஞ்செய்ததற்காகத்தான் பூமியில்பிறந்து இறக்கிறார்கள். பாவிகளுக்குத்தான் பிறப்புண்டு. பிறந்தவர்களுக்கே இறப்புண்டு. ஆகையால் எல்லாருடைய மரணமும் இழிவானதேயாம்'' என்று பாவத்தொழில்களை யஞ்சாதுசெய்யு மியல்பினராகிய

கமலாசனர் தன்னிடத்து நியாயம்பேச ஆரம்பித்ததை நினைத்தபோ துண்டான கோபத்தை யடக்கி, மஹேந்திரன் அதிக சாந்தகுணத்தை வகித்துப் பேசினன்.

ஒரு சிறுவன் காவலி லிருக்கும்போது இவ்வளவு தைரியமாயும் பரிகாசமாயும் பேசியதைக் கேட்டு மனம் தாளாமல் கமலாசனர், "சிறுபயலே! பிரபுவின் குமாரனை நீ கொன்றிருக்கிறாய். எப்படியாவது உன் உயிரை மாய்த்துவிட்டு மறுவேலை பார்க்கிறேன். நான் யார் தெரியுமா? அநேக ஊர்களுக்கு அதிபதி. நீயார் தெரியுமா? ஓர் அநாதை" என்றார். மஹேந்திரன் புன்னகை செய்துகொண்டு, "பிரபுவே தங்களால் முடியாமலான காரியத்தைச்செய்ய பிரதிக்ஞை செய்துகொள்வது நலம். ஒருவன் உயிரைமாய்ப்பது முடியாத காரியமாயிற்றே. தங்களுக்கும் எனக்கும் மற்றுமுள்ள ஜீவராசிகளுக்கும் இத்தேகங்களைக் கொடுத்த பிரமன் இச்சித்தாலும் உயிரைமாய்த்தல் ஆகாதகாரியமாயிற்றே. எல்லாருக்கும் உயிராயுள்ளது ஆத்மா. அது அழிவற்றது, நித்தியமெனத் தாங்கள் எத்தனையோதரங் கேட்டிருப்பீர்களே? தற்காலம் அநேக ஊர்களுக்குத் தாங்கள் அதிபதியாயிருப்பது உண்மையே. சிலகாலத்திற்கு முன்பு தங்களுடைய முன்னோர்கள் அதிபதிகளாயிருந்தார்கள். தங்களுக்குப் பிற்காலம் யார் அதிபதியாவார்களோ? எக்காலமும் மாறுதலில்லாமல் அழியாத நித்தியமாய் அண்டபகிரண்டங்களுக்கெல்லாம் அதிபதியாயிருக்கும் பகவான் என்னை ஆதரவுடன் காப்பாற்றிவர, நான் அநாதையாவேனா? இது உங்களுக்குத் தெரியாத விஷயமல்லவே" என்றான். ஏதோ ஒரு காரணத்தால் ஒருவர் கோபித்துக்கொண்டு பேசுங்காலத்தில், மற்றொருவர் சிரித்துக்கொண்டு சாந்தமாய் உண்மையை யுரைப்பினும், சில வேளைகளில் அக்கோபக்காரருக்கு இன்னும் கோபமதிகரிக்குமே யல்லாது தணியாவாம். ஆகவே மஹேந்திரன் கூறியது ஒருவாறு உண்

மையாயினும் அதைக் கேட்டவுடன் சுலோசனர் முகஞ் சிவந்தது; மீசை துடிதுடித்தது; பேச வாயெழவில்லை. என்ன செய்வார்? திடீரென்று எழுந்திருந்து கதவைத் திறந்துகொண்டு வெளியிலே சென்றார். மஹேந்திரனுடைய சாந்தம் அவருடைய கோபத்தை வென்றது.

---

## 20. சுலோசனர் சூது.

சுலோசனர் வெளியே சென்றவுடன், அங்கு காவல் காத்துக்கொண்டிருந்த சேவகர்களில் ஒருவனைத் தன் அறைக்குள் அழைத்துக்கொண்டுபோய் அவனிடம் சிறிதுநேரம் இரகசியம் பேசியிருந்து பிறகு அரண்மனை மேன்மாடியிலிருந்த சந்திரசேகரரிடத்துச் சென்றார். தப்புசாட்சிகளைத் தயார்செய்து மஹேந்திரன்மீது குற்றத்தை ஸ்தாபிப்பது ஒருவேளை கஷ்டமாய் முடிந்தாலும் முடியும். அதனால் தனக்கு ஏதாவது அவமானம் நேரிடுமென்று பயந்து, விசாரணை ஆரம்பிக்கு முன்னமே மஹேந்திரனை வேறுதேசத்திற்கு ஓடிவிடும்படி செய்துவிட்டால் பிறகு தன்காரியம் சுலபமாய் முடிந்துவிடுமென்று எண்ணிச் சுலோசனர் மஹேந்திரனிடத்துப் பேசச் சென்றார். அவன் அவருக்கு இணங்கி வரவில்லை. அவர் மனம் தீயவழிகளிற் சஞ்சரித்துக்கொண்டிருந்ததால் மஹேந்திரன் கூறிய வசனங்களின் உண்மையையுணர சக்தியற்றவராகி அவர் கோபத்தையடைந்தனர். மஹேந்திரன் அவரது வழியை யனுசரித்து வாராமல் தனக்கு என்னகெடுதி நேரிட்டாலும் அனுபவிப்பதற்குச் சித்தமாயிருக்கிறானென்பதை அவர் அறிந்தார். இனி என்னசெய்வார்? குற்றத்தை எப்படியாவது அவன்மீது ஸ்தாபிப்பதே சரியெனத் துணிந்தார். அவருக்குக் கெட்டயோசனைகள் வெகு சீக்கிரத்தில் உண்டாகிவிடும். யோசித்தவண்ணஞ் செய்துமுடிக்க முன்னதாகவே தகுந்த அஸ்திவாரங்களை வெகு சீக்கிரம் அமைத்திடுவார். அவர் சந்திரசேகரரிடத்துச் சென்றவுடன், "நான் மஹேந்திரனைக்க

ட்டுவிட்டானும். தேகாக்கப்பாளிட்டால் அவன் கொல்லப்படவில்லை, எங்கேயோ ஓடிவிட்டானென்று பிறர் நினைக்கக்கூடுமென்று கருதி அந்தப் பாவி அவ்வாறு செய்தான். அதனால் தாங்கள் என்னவோ கெட்டதனமாய்க் கோர செய்கைகளைச் செய்கிறார் அவர்கள் அகப்பட்டுக்கொள்ளுகிறதற்குப் பல காரியங்களை அவர்மேலே செய்வது போல, சந்திரசூடனுடைய உடுப்புகளை மறைத்துவைக்க அந்தத் துரோகி பிரயத்தனித்தான்" என்று சொன்னார், "அவனை எப்படிக்கொன்றான். அவன் உடுப்புகளெல்லாம் சுத்தமாயிருக்கின்றனவே, ஆனால் இரத்தக்கறைப் படவில்லையே?" என்று பிரபு சொல்ல, சுலோசனர், "இரத்தமேனி யாகாமல் அவனைக் கொல்லமுடியாதாவென்ன? இருவருக்கும் நேர்ந்த சண்டையிற் பிறந்த கோபத்தால் துஷ்ட மனோகரன் உமது புத்திரனைப் பூமியில் தள்ளி அவன் மார்பின்மேல் நின்றுகொண்டு ஒருகாலை அவனுடைய கழுத்தின்மேல் வைத்து நன்றாய் அழுத்திவிட்டான். முடிந்தது சண்டை." என்று சொன்னபோது சந்திரசேகரர் தேக முழுவதும் நடுக்கமுற்றது. மறுபடியும் அவருடைய கண்களிலிருந்து தாரைதாரையாக நீர் பெருகியது. பிறகு ஒருவாறு தைரியங்கொண்டு "இவ்வாறு நடந்திருப்பின் இந்தப்பாவியின் வஸ்திரங்களில் படிந்த இரத்தமேது?" என்று சந்திரசேகரர் கேட்டார். அதற்கு சுலோசனர், "தங்கள் குமாரனைத் தாக்கவந்த காட்டுமிருகத்தைக் கொன்றபோது தெரித்த இரத்தமென்று அவன் முன்னே கூறியது பொய். சந்திரசூடனைக் கொன்றபின் அவன் பிணத்தைக் காட்டு மிருகங்களுக்கு இரையாகப்போடச் சென்றபோது இப்பாவியை ஓர் மிருகம் எதிர்த்துவந்ததாம். அதைக் கொன்றபோது அவன் வஸ்திரங்களில் இரத்தம் தெறித்ததென்று என்னுடன் சொன்னான். இவ்விவரங்களையெல்லாங்கூறி, தான் செய்தது குற்றமென்று ஒப்புக்கொண்டு; இருகண்களிலும் நீர் ததும்ப, இருகரங்களாலும் என் பா

தகுந்த தண்டனை அடைந்துவிட்டேன். போதுமானது.” என்று சத்தியபுரி பிரபு கூறினர். அச்சமயத்தில் இராஜாங்கத்திலிருந்து கடிதம் வந்ததென்று மந்திரிவந்து சொல்லி, கடிதத்தைப் பிரித்துப்படித்தார். அதைக் கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்த சுலோசனர், “இனி நாம் சும்மாயிருக்கக்கூடாது. சாட்சிகளைத் தயார்செய்து அவர்கள் வருவதற்குமுன் நாம் சித்தமாயிருக்கவேண்டும்” என்றார். அதற்கு சந்திரசேகரர், “அப்படியே செய்யுங்கள். சுதந்திரமந்திரியுடன் கலந்து யோசியுங்கள். நியாயாதிபதியும் மற்றுமுள்ள உத்தியோகஸ்தர்களும் இவ்விடம் வந்தால் சௌக்கியமாயிருக்கத் தகுந்த இடம் ஏற்பாடு செய்யவேண்டும். எல்லாம் நீங்கள்தான் செய்யவேண்டியிருக்கிறது. உங்களுக்கு என்னால் எவ்வளவு கஷ்டமுண்டாகிறது சுலோசனரே!” என்றார். “எனக்கு ஒரு கஷ்டமுமில்லை. இப்போது உதவி செய்யாமல் வேறு எப்போது நான் செய்கிறது?” என்று சுலோசனர் சொல்லிப்போயினர்.

## 21. சுந்தரியின் யோசனை.

சுலோசனர் கூறியவையெல்லாம் சந்திரசேகரர் அடுத்தநாள் தன் மனைவிக்குத் தெரிவிக்க, இரதி மிகவும் மனம் நொந்து மனோகரனை சிந்தித்தாள். பிறகு இதையறிந்த சுந்தரி திகிலடைந்தாள். தன் அண்ணனை மனோகரன் கொன்றிருப்பானென்று அவள் நம்பவில்லை. தனியே தன்னறையில் உட்கார்ந்து யோசிக்கலானாள். “மனோகரரா சந்திரசூடனைக் கொன்றிருப்பார்? ஒருநாளுமில்லை. ஆனால் என்னண்ணா எங்கேபோயிருப்பார்? இதில் ஏதோ சூதிருக்கிறது. சுலோசனக் கிழவன் ஏதாவது யுக்தி செய்திருப்பானோ? மனோகரர்மீது குற்றத்தை ஏற்படுத்தி அவரைத் தொலைத்துவிட்டால், பிறகு என்னை விவாகஞ் செய்துகொள்வது சுலபமாயிருக்குமென்றெண்ணி அக்கிழவன் தானே

வான காரியங்களைச் செய்ய வாரம்பித்துவிட்டானே? இச்சமயம் எப்படியாவது சந்திரசூடன்வந்து சேரானோ? என்னன்பான மனோகரர் குற்றத்தினின்று தப்பிவிடாரோ? ஆகா தெய்வமே! நீயும் வேடிக்கை பார்க்கிறாயோ? சுலோசனர் செய்வதெல்லாம் சரியோ? எப்படியாவது இக்கிழச் சூதனையேமாற்றி என் மனோரதத்தை ஈடேற்றுவையோ சுந்தரியம்மனே?" என்று சத்தியபுரியில் அவர்கள் குலதெய்வமாகப் பூசித்துவந்த சுந்தரியம்மனை பிரபுவின் புத்திரி நினைத்துக்கொண்டாள் "ஹே! ஜகதாம்பிகே! சந்திரசூடன் கதி என்னவாயிற்று என்பது உனக்குத் தெரியாதா? அதை என் தாய் தந்தைகளுக்குத் தெரியப்படுத்தக் கூடாதா திரிபுரசுந்தரியே!" என்றுசுந்தரி வேண்டிக்கொண்டாள். மறுபடியும், "ஆபத்து வேளையில் காப்பாற்ற உன்னைவிட்டால் எங்களுக்கு வேறுதுணையேது மனோகரீ!" என்று வாய்விட்டுக் கூறினாள். "அனைவருக்குந் தாயாகி இரட்சிக்கும் ஹே! ஜகன்மாதாவே! எங்களைக் காப்பது உனக்கருமையோ? முக்காலமறிந்த முக்கண்ணன் மகிழும் உமையே! இனிவருவதை நீ அறியாயோ? பற்றின்றிப் பலமாயங்கள் செய்யும் மதுசூதனன் தங்கையே! நீ சுலோசனர் செய்யும் மாயத்தையறிந்து எங்களுக்கு உரைபாயோ? எல்லாம்வல்ல ஆதி சக்தி நீ! எல்லாமறிந்த பராசக்தி நீ! அகிலாண்டகோடியீன்ற அன்னையே! நின்பெண் படுந்துயரத்தையறிந்தும் சும்மாயிருப்பாயோ? இதென்ன நான் முன்செய்த வினையோ?" என்று ஜகதீஸ்வரியைச் சுந்தரி துதித்துப் பக்தியிற் பரவசமாகி யிருக்கையில், சுபாங்கனை கதவைத் திறந்துகொண்டு உள்ளேவந்தாள் சுந்தரி தன் சகிக்குச் சங்கதியைச் சொல்ல வாரம்பித்தாள். "சுபாங்கனை! சுலோசனர் வந்தவுடன் என்னென்ன ஏற்பாடுகள் செய்துவிட்டார் தெரியுமா? இராசாங்கத்திற்குச் சங்கதியைத் தெரியப்படுத்தினார். மனோகரரைக் கடுங்காவலிலிட்டது உனக்குத் தெரியும் இன்னும் சூதான யுக்திகளெல்லாம்

அவர் செய்துகொண்டிருக்கிறார். மனோகரரை யெப்படியாவது கொன்றுவிடவல்லவோ வழிதேடுகிறார். எனக்கு மிகவும் பயமாயிருக்கிறதேடி. நான் இன்னும் சும்மாயிருந்தால் மனோகரர் என்னநினைப்பார்? அவருடைய மனோநிலைமையை நான் எப்படி அறிவேன்? அவருக்குத் தைரியஞ் சொல்ல யாரிருக்கிறார்கள்? ஐயோ! பாவம்! இந்த அரண்மனையில் இறைமாய்ச் சாப்பிட்டுக்கொண்டிருப்பது மனஞ் சகியாமல் எங்கேயாவது ஓடிவிடலாமென்று அவர் எண்ணியபோது நான் எவ்வளவு தைரியஞ் சொல்லி அவரை இவ்விடத்தில் நிறுத்தி வைத்தேன். இந்தப்பாவி சுலோசனர் வந்து செய்யாதகாரியம் செய்கிறாரேடி சுபாங்கனை. என்மனம் பொறுக்கவில்லையே. மனோகரரா காவலி லிருப்பது? என்னைக் காவலில் வைத்து அவரை விட்டு விடுவது நியாயமாயிற்றே. என் அண்ணனை அவரா கொன்றிருப்பார்? ஒருநாளுமில்லை. இதென்னமோ மாயமாயிருக்கிறது! இனி விசாரணை நடக்குங்காலத்தில் இந்தக் கள்ளச் சுலோசனர் என்ன பொய்சாட்சி சொல்லிக் கெடுப்பாரோ தெரியவில்லையே சுபாங்கனை. ஒருவேளை மனோகரரைத் தூக்கிலிடுவார்களோ? அதை எப்படி நான் பார்த்துச் சகிப்பேன்? என் உயிருமல்லவோ கூடவே போய்விடும். இதையார் அறிவார்?" என்று வாய் தழுதழுத்துக்கூறி கண்ணீர் சொரிந்தாள் சுந்தரி. அதை நோக்கிய சுபாங்கனையும் ஸ்திரீசுபாவததிற்கேற்க கண்ணீர் விட்டாள். பிறகு சுபாங்கனை சுந்தரியைப்பார்த்து; "உன்மனதை யறிந்தேன் சுந்தரி! நீ நல்ல உத்தமி. உன்னுடைய எண்ணத்திற்கு விரோதமாய் ஒன்றும் நடக்காது. அது எனக்குத் தெரியும். மனோகரருக்கு ஒரு கெடுதியுமுண்டாகாது. அவர்மகா உத்தமகுணசீலர். அவர் ஒருநாளும் சந்திரசூடரைக் கொலைசெய்திருக்கமாட்டார். ஆனால் உடுப்புகளையெல்லாம் கழற்றியெறிந்துவிட்டு உன்னுடைய அண்ணன் எங்கேபோயிருப்பார்? இது வெகு ஆச்சரியமாயிருக்கிறது. சந்தேகமென்னமோ உன்

மா?" என்றுகேட்க, அதற்கு நான் அரண்மனையில் இருவ ரைக்கண்டு நடந்த விசேஷங்களையெல்லாங்கூறி, கடைசியாக நீங்கள் என்னைக்குறித்துத் தப்பபிப்பிராயப்பட்டு அனுப்பினீர்களோ அதைச் சொன்னேன். இவையெல்லாம் சாவதானமாய்க் கேட்டுக்கொண்டிருந்த கிழவி திடீரென்று பயங்கரமான ஒரு கூச்சலிட்டாள். அப்போது நான் நடுங்கிவிட்டேன். என் பயத்தைக் கிழவியறிந்தாள். அவள் கோணவாயையும் கோணப்பற்களையும் பிளந்துகொண்டாள் என்னுடம்பு வேர்க்கிறது அப்பணி. பிறகு அவள் மகேசனுக்கும் சுந் தரிக்கும் ஒரு கெடுதியுமுண்டாகாது கெடுவான் கேடுநி னைப்பான் போ என்றாள். அது எனக்குச் சமாதானப்பட வில்லை. மறுபடியும் விவரமாகக் கூறும்படி அதிக வணக்க மாய் கிழவியைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டேன். அப்போ து அவள் சாந்தமுகத்தைத் தரித்து, கண்குளிர என்னைப் பார்த்து, 'மகேசனுக்குக் கொடிய துன்பங்கள் நேரி டும்போலத் தோன்றுமேயல்லாது ஒரு அற்பக் கெடுதியு முண்டாகாது. ஆனால் அவனுக்கு மகிமையுஞ் செல்வமுமதிகமுண் டாகும். அது என்னை யீன்ற அன்னையாகிய அம்பிகையின் திருக்கூத்து. அதை ஒருவராலும் மாற்ற முடியாது. இ து சத்தியம். இவ்வூர் அரண்மனையில் கமலமென்று ஒரு வேலைக்காரி வெகுகாலத்துக்குமுன் இருந்தாள். அவள் இப் போது அகப்பட்டால் மகேசனுக்கு மிகவும் உத்தாசை செய்வாள். அவள் எங்கே போயிருக்கிறளென்று இலட்சுமி மூலமாகச் சந்திரனை விசாரிக்கச்சொல்லு,' என்று கிழவி சொல்லிப் பேசுவதை நிறுத்தினள். பிறகு சந்திரனுடன் சங்கதியென்ன? உயிருடன் இருக்கிறனா இல்லையா? என்று கேட்டேன். உடனே கிழவி அதிககோபங்கொண்டு, 'அப் பிசே!' யென்று ஊர் அதிரும்படி உரத்தச் சத்தமிட்டுக் கூவினள். மறுபடியும் நான் அச்சமுற்று அசையாதிருக்க, கிழவி, 'சந்திரனுடன் சங்கதி பிறகு சொல்லுகிறேன்' என் று சொல்லிவிட்டு மாயமாய்ப் பறந்து ஓடிவிட்டாள். இவ்வள

டுதான் கிழவிசங்கதி. அம்மணி! மனோகரர் மிகவும் மனவருத்தமடைந்து எங்கேயாவது ஓடிவிடலாமென்று தீர்மானித்திருக்கிறார். சங்கதியை உங்களுக்குத் தெரிவிக்கச்சொன்னார்," என்று சொல்லி முடித்தான். இவையெல்லாங் கேட்ட சுந்தரி, "சம்பாதி! உனக்குக் கிழவிகூறியவற்றையெல்லாம் மனோகரருக்குச் சொல்லு. நான் கூடியசீக்கிரத்தில் அவருக்கு ஒரு கடிதமெழுதுகிறேன். அதுவரைக்கும் தயவுசெய்து ஒரு தீர்மானமுஞ் செய்யவேண்டாமென்று அவரை வேண்டிக்கொள்." என்று அவனுக்கு உத்தரவு கொடுத்தனுப்பிவிட்டாள். அவன் வெளியேபோகும்போது உள்ளே வருவதற்கு வாசற்படியில் காத்துக்கொண்டிருந்த இலட்சுமி சுந்தரியினிடத்துச் சென்றாள். அவள் பின்னால் சுநந்தையென்னும் தோழிப்பெண்ணும் உள்ளேபோனாள்.

இலட்சுமியைக் கண்டவுடன் கிழவி சொல்லியபிரகாரம் கமலத்தைக் குறித்துக் கேட்கவேண்டுமென்னும் ஆவலுடன் சுந்தரி அவளிடத்துச் சிலநாழிகை வேறு சங்கதிகளைப்பேசிவிட்டு, திடீரென்று "இலட்சுமி! இவ்வரண்மனையில் வெகுநாளைக்கு முன்னமே கமலம் என்று ஒரு வேலைக்காரி யிருந்தாளாமே, அவள் உனக்குத் தெரியுமா? அவளிப்போது எங்கே யிருக்கிறாள்? என்று கேட்டாள், "கமலம்" என்று சொன்னவுடனே இலட்சுமியின் முகம் மாறுதலையடைந்தது. ஆகா! இவர்களுக்கு எப்படித் தெரிந்துவிட்டதென்று நினைத்து அவள் பெருமூச்செறிந்து, "அம்மணி! கமலம் என்பவள் மிகவும் நல்லவள். அவள் இங்கே வேலைக்காரியா யிருந்த போது எனக்கு மிகவும் ஒத்தாசையா யிருந்தாள். என்னகாரணத்தினாலோ அவள் ஒருவரிடத்தும் சொல்லாமலே இவ்வரண்மனையை விட்டுப் போய்விட்டாள். நாங்கள் மிகவும் சினேகமா யிருந்தோம். அவளை நினைத்துக் கொண்டால் எனக்கு விசனமுண்டாவது வழக்கம். அவள் இப்போது எங்கே யிருக்கிறாளோ எனக்குத்

தெரியாது அம்மணி" என்றாள். மறுபடியும் சுந்தரி, "கமலம் போய் எத்தனைவருஷ மாகிறது?" என்றுகேட்க, அதற்கு இலட்சுமி, "இத்தனைவருஷம் என்று எனக்குச் சொல்லமுடியவில்லை. ஆனால் வெகுநாளாயிற்று." என்றாள். "அவளுடைய பந்துக்க ளொருவரு மிங்கில்லையா?" என்று சுந்தரிவினவ, "அவளுக்குப் பந்துக்களே கிடையாதென்று அவளே சொல்லி யிருக்கிறாள். நானும் ஒருவரையும் பார்த்ததில்லை" யென்றாள் இலட்சுமி. பிறகுசுந்தரி, "அவளுக்குப் புருஷனில்லையோ? குழந்தை ஒன்றுங் கிடையாதா?" என, "அவள் புருஷனை யிழந்தவள் அம்மணி. அவளுக்கு ஒருபிள்ளையுண்டு." என்று இலட்சுமி கூறிவிட்டு கமலத்தைக் குறித்து இன்னும் பேச இஷ்ட மில்லாதவளாய் ஏதோ சாக்குச் சொல்லிவிட்டு சுந்தரியின் அறையை விட்டு வெளியே சென்றாள்.

இலட்சுமியி னிடத்துக் கமலத்தைக் குறித்துப் பேசியபின்பு சுந்தரியின் மனம் சலிக்கத்தொடங்கிற்று. பிறகு ஜடைக்கிழவி கூறியதாக சம்பாதி சொல்லியவற்றை நினைத்துக் கொண்டாள். தன்பக்கத்தி லுட்கார்ந்திருந்த சகிகளைப் பார்த்து, "கிழவி மனோகரரைக் குறித்துப் புதிதாக ஒன்றுஞ் சொல்லவில்லை. ஆனாலும் இந்த சமயத்தில் அவருக்கு ஒரு கெடுதியு முண்டாகாதென்று கூறியது சந்தோஷமே. சந்திரசூடனைக் குறித்து அவளுக்கு ஏதோ தெரிந்திருக்க வேண்டும். அதனால்தான் பிறகு சொல்லுகிறேனென்றாள். மறுபடியும் சம்பாதியை யனுப்புகிறேன். இதிருக்கட்டும், அந்தக் கிழவி கமலத்தைக் குறித்து ஏன்விசாரிக்கச் சொன்னாள்? கமலம் இப்போதிருந்தால் மனோகரருக்கு ஒத்தாசை செய்வா ளென்றும் கூறியிருக்கிறாள். அதென்ன? இதில் ஏதோ விசேஷமிருக்கிறது. யோசிப்போம். கமலம் என்பவள் ஒரு வேலைக்காரியென்று தெரிகிறது. அவள் வெகுநாளைக்கு முன்னமே ஓடிவிட்டாள்.

அவள் மனோஹரருக்கு ஒத்தாசை செய்வாளென்று கூறிய தால் அவள் இவரை நன்றாய் அறிந்திருக்க வேண்டும். இவர் ஒருவயதுமுதல் நமது சத்தியபுரி யரண்மனையில் வளர்ந்து வந்தார். ஆகையால் இவர் நமது அரண்மனைக்குவருமுன்னமே அவள் இவரை அறிந்திருக்கவேண்டு மல்லவா? கமலமோ இவ்வரண்மனை வேலைக்காரி. ஆகையால் மனோஹரர் இளம்வயதில் இவ்வூரிலேதா னிருந்திருக்கவேண்டும். அவர் பிறந்ததும் இவ்வூராகவே யிருக்கலாம். என்னதிசயமே! யோசிக்க யோசிக்க என்ன புதுவிஷயங்கள் ஏற்படுகின்றன பாருங்கள். இன்னவூரானென்று இதுவரைக்குந் தெரியாதிருந்த மனோஹரருக்கு இவ்வானந்தபுரியே பிறந்தவூரென்று தைரியமாய்ச் சொல்லிவிடலாம். இனியோசிப்போம். கமலம் இவருக்கேன் ஒத்தாசை செய்யவேண்டும்? கமலத்திற்கும் இவருக்கும் ஏதோ சம்பந்த மிருக்கவேண்டுமென்று தோன்றுகிறதே! அதென்ன சம்பந்தம்? மனோஹரர் ஒருவயது குழந்தையா யிருக்கும்போதுதானே கமலம் இவரை அறிவாளென்று தீர்மானித்தோம். ஒருவேளையிவர் கமலத்தின் பந்துக்களுடைய குழந்தையா யிருக்கலாமோ? என்று சொல்லும்போது, சபாங்கனை, "கமலத்திற்கு பந்துக்களே யில்லையென்று இலட்சுமி சொன்னாளே" என, "ஆமாம். பிறகு மனோஹரர் யாருடைய குழந்தை? கமலத்தினுடைய குழந்தைதானோ?" என்றுசுந்தரியென்ன சொல்லும்போது, கங்கை "கமலத்திற்கு ஒரு பிள்ளையுண்டென்று இலட்சுமிகூட கூறினளே" யென்றாள். பிறகு சுந்தரி ஒன்றும்பேசாது சிறிதுநேரம் யோசித்திருந்து, "சபாங்கனை உனக்கென்ன தோன்றுகிறது? கங்கை நீ என்னநினைக்கிறாய்?" என்று கேட்டாள். அதற்கு இருசகிகளும், "மனோஹரரைப் பார்த்தால் ஒரு வேலைக்காரியின் பிள்ளையைப்போலவா யிருக்கிறார்? அப்படிச்சொல்லுவது சரியாயில்லை" என்றுசொல்ல, சுந்தரி, "இன்னொரு சங்கதி பாருங்கள். இப்போது மனோஹரருக்குச் சுமார் இருபது

யைதிருக்கலாம். ஒருவப்து குழந்தையா யிருந்தபோது இவரையாரோ நமது அரண்மனையில்விட்டுப் போனார்களாம். அவரை இளம்பிராயத்தில் அறிந்தவள் கமலம். அவள் ஓடிப்போயும் அநேக வருஷங்களாகின்றன. இதனால் மனோகரரை கமலந்தான் நமது அரண்மனையில் கொண்டுவந்துவிட்டுப் போனளென்று ஏன் நினைக்கக்கூடாது? மனோகரர் ஆனந்தபுரியைச் சேர்ந்தவ ரென்றும் அவரை கமலமென்பவள் நமது அரண்மனையில் வளரவிட்டாளென்றும் நன்றாய்த் தெரிகிறது. பிறகு அவர் யார்குழந்தையென்று இன்னும் தெரியவில்லை, அவர் க்ஷத்திரிய பிரபுவினுடைய குழந்தையா யிருந்தால் கமலத்திற்கு அவர் எப்படிகிடைத்திருப்பார்? கமலத்தினுடைய சொந்த குழந்தையாயிருந்தால் அவள் அதைவிட்டுப் பிரிவாளா? கமலம் இவ்வரண்மனையைவிட்டுச்சொல்லாமலே ஓடிவிட்டாளாம். ஏன்? ஏதாவதுகுற்றஞ்செய்திருக்கலாம். குற்றத்தினின்று தப்பித்துக்கொள்ள ஓடியபோது தன்குழந்தையைவிட்டுப் பிரியலாம். அவள் தற்கொலைசெய்துகொண்டு மிருக்கலாம். அதனால்தான் இதுவரைக்கும் மனோகரரை யின்னாரென்று ஒருவரும் அறியமுடியவில்லை" யென்று சுந்தரிகூறினாள். அதற்குச் சுபாங்கனை, "நான் அவரைக்கமலைத்தின் குழந்தையென்று ஒருக்ஷணமும் நினைக்கமாட்டேன்" என்றாள். பிறகுசுந்தரி, "என்னமோ அம்மா! அவர்சாதியின்னதென்றறிவது வெருகஷ்டமாய்த்தா னிருக்கிறது. இவ்வளவுசொல்லியும் என்மனம் மனோகரரிடத்தே போகின்றது. இம்மனமே எல்லாச்சந்தேகங்களையும் உண்டாக்கியது. இப்பாழானமனம் அவரைக்கமலத்தின் பிள்ளையோவென வெண்ணிற்று. இம்மனமே அவரைநேசிக்கிறது. இதற்கு ஓர் வரம்பில்லைபோலும். இப்போதுநான் என்னசெய்வேன்? ஆசைப்பட்டுக் காதலித்தது பிசகென்று தோன்றுகிறது. அவரை விட்டு வேறொரு புருஷனைக் காதலிப்பேனோ? ஒரு

காருமில்லை. சாதி யின்னதென்று தெரியுமுன் அவரை மணம்புரியலாமா? அதுவுங் கூடாது. அதாவது அவர் க்ஷத்திரியர்தானென்று தெரிகிறவரையில் எனக்கு விவாகம் கிடையாது. ஒருவேளை அவர் க்ஷத்திரிய ரல்லவென்று தெரிந்துவிட்டால், இச்சுலோசன ரல்ல, இம்மகததேசத்தை யாளும் மகாராஜாவே என்னை விரும்பினாலும் நான் விவாகஞ்செய்துகொள்ளமாட்டேன்." என்று சுந்தரிசொன்னாள். "அவ்வாறு தீர்மானஞ் செய்யவேண்டாம் சுந்தரி, சுலோசனரைப் பழிப்பது நியாயம். மகத வரசனையும் தள்ளிவிடுவாயேனல்?" என்று சுபாங்கனை கேட்க, சுந்தரி, "ஒரு ஸ்திரீயானவள் விவாகமாவதற்கு முன் ஒரு புருஷன்மீதும் காதல்கொள்ளக்கூடாது. ஏதோ ஒரு காரணத்தால் முன்னதாக ஒரு புருஷன்மீது காதல்கொண்டால், பிறகு அந்த ஸ்திரீயின் மனம் வேறுபுருஷனிடத்துச் செல்லலாமோ? அப்படிச் சென்றால் அவள் பதிவிரதை யாவாளோ? பலர் அறிய சாஸ்திர விதிப்படி ஒரு புருஷனை விவாகஞ்செய்துகொண்டு அவனுடன் வாழ்ந்துவருவது மாத்திரமா பதிவிரதைக் கடையாளம்? தேகம் ஒரு புருஷன் வயப்பட்டவளாம் மனமும் அவனிடத்திலேயே பதியவேண்டாமோ? அதுதானே பதிவிரதைகளுடைய தர்மம். என் மனம் மனோகரரிடத்துப் பதிந்துவிட்டது. வேறொருபுருஷனைக் கவனியாது." என்று சொல்லும்போது அவள் தாய் இரதி உள்ளே வந்தாள்.

---

## 22. அரண்மனையில் கள்ளர்புகுந்தது.

ஜடைக்கிழவியைக்கண்டு பேசியதையும், கடிதமெழுதியனுப்பும் வரையிலும் ஒருதீர்மானமுஞ் செய்ய வேண்டாமென்று சுந்தரி கூறியதையும் சம்பாதி மனோகரனுக்குத் தெரிவித்தான். அடுத்தநாள் சுலோசனர் இலட்சுமியையும் சாந்தனையும் தன்னறைக்குள் வரவழைத்து வெகுநே

ரம் வரைக்கும் மனோகரனைக் குறித்துப் பேசியிருந்து அவ
ர்களுக்கு இரகசியமாகச் சில விஷயங்களைச் சொல்லித்
தன்னிஷ்டப் பிரகாரம் நடக்க வேண்டுமென்று திட்டஞ்
செய்து பயமுறுத்தினார். அவருடைய ஏவுதலினால் இலட்
சுமி மனோகரனிடஞ்சென்று, "ஐயா! சுந்தரி யம்மணி என்
னைத் தங்களிட மனுப்பினாள். தங்களுக்குக் கடிதமெழுது
வதாக சம்பாதியி னிடத்துச் சொல்லியனுப்பினார்களாம்.
பிறகு யோசனை செய்தபோது இச்சமயம் தங்களுக்குக்க
டிதம் எழுதுவது நியாயமாகத் தோற்ற வில்லையாம். ஆகை
யால் அதிக நம்பிக்கையுள்ள என்னிடம் இரகசியமாகத்தங்
களுக்குச் சமாச்சாரம் அனுப்பி யிருக்கிறாள். தன்பிதாவி
ன் கருத்தையும் வஞ்சக யோசனருடைய ஆதார காரி
யங்களையும் அவ்வம்மணி அறிந்து தாங்கள் இன்றிரவே
வேறுதேசம் போய் விடுவது உத்தமமென்று மிகுந்த விச
னத்துடன் சொல்லியனுப்பி யிருக்கிறாள். எங்கேயாவது
தாங்கள் உயிருடன் சீவித் திருந்தால் போதுமாம். தங்க
ளைத்தவிர்த்து வேறொரு புருஷனை விவாகஞ் செய்து கொ
ள்வதில்லை யெனத் தீர்மானித் திருக்கிறாள். தாங்களின்றிர
வு புறப்பட்டுப் போகும்போது தங்கள் செலவுக்காக இரண்
டாயிரம் பொன் கொடுத் தனுப்புகிறாளாம். இந்தஏற்பாடு
இரதியம்மணி செய்தது. தாங்கள் வேறுதேசம் போய்ச்
சேருகிற வரைக்கும் தங்களுக்குத் துணையாக இரண்டு
ஆட்கள் வருவார்களாம். இங்கே நீங்கள் இனியிருந்தால்
தங்கள் பிராணனுக்கே அபாயம்நேரிடுமென்று தாயும் பெ
ண்ணும் பயப்படுகிறார்கள். பிள்ளையை யிழந்த விசனத்து
டன் தங்களை நினைத்துக் கொள்ளும் போதெல்லாம் இர
தியம்மணி கண்ணீர் விடுகிறாள். இவ்வரண்மனையிலுள்ள பு
ருஷர்க ளெல்லாம் தங்கள்மீது கொலைக்குற்ற மேற்படுத்தி
யிருக்க, சுந்தரியும் அவள் தாயும் தங்களிடத்து ஒருவிதச
ந்தேகமு மின்றி அன்பு பாராட்டுவதைக் காணும் போது
எனக்கு மிகுந்த ஆச்சரிய முண்டாகிறது. இந்த சமயம்

தாங்கள் இவ்விடத்தை விட்டுப் போய்ச் சிலநாள் மறைந்திருந்தால் பிறகு என்ன நடக்கிறதோ அதற்குத்தகுந்தாப் போல நடந்து கொள்ளலாமாம். இது இரதி சொன்னது. தங்கள் அபிப்பிராய மென்ன? நான் உடனேபோய் அவர்களுக்குச் சொல்ல வேண்டும். இந்தசங்கதி யாரும் அறியப்படாது. சுலோசனருக்குத் தெரிந்து விட்டால் என்னையபுறமனுப்பிவிட்டு மறுவேலை பார்ப்பார்" என்று சுலோசனர் சொல்லிக் கொடுத்த பாடத்தை ஒப்பித்தாள். இலட்சுமிகூறியவை யெல்லாங் கேட்ட மனோகரன், "அவர்களிஷ்டப்பிரகாரஞ்செய்ய எனக்கு யாதொருதடையுமில்லை. நான் இதை முன்னமேயே செய்ய வெண்ணின போதிலும் அவர்கள் மனதை யறியாமல் செய்யக் கூடாதென்று நின்றுவிட்டேன். இனிநான் புறப்படுவேன்" என்முன். உடனே இலட்சுமி வெளியேசென்று சுலோசனரிடத்துப் போய்ச் சங்கதியைச் சொன்னாள். அதைக்கேட்ட சுலோசனர் மிகவும் சந்தோஷப்பட்டு, "சுலபமாய் முடிந்தது வேலை. எங்கேயாவது போய் பிழைத்துப் போகட்டும்" என்று கூறினர். அவருடைய முடிவான கருத்தை இலட்சுமி அறிந்திலள். இரத்தினபுரியி லிருந்து வந்திருக்கிற இரண்டு போர் வீரர்களைத் துணையாக அனுப்புவதாய் மாத்திரம் அவர்சொன்னாரே யல்லாமல், மனோகரனை வெகுதூரம் அழைத்துப் போன பின்பு இரவில் அவனைத் தந்திரமாய்க்கொன்றுவிடும்படி அப்போர் வீரர்களுக்கு அவர் கட்டளையிட்டிருக்கிறதை இலட்சுமிக்குச் சொல்லவில்லை. அதையும் தெரிவித்திருந்தால் இலட்சுமி ஒருவேளை மனோகர னிடத்து வேறு விதமாய்ப்பேசி அன்றிரவு அரண்மனையை விட்டுப் போகாவண்ணங் காப்பாற்றி யிருப்பாள். அது தெரியாதவளானபடியால், இப்போது காவலி லிருந்து கொடிய சுலோசனர் வலையில் சிக்கிக்கொண் டிருப்பதைக் காட்டிலும் வேறு தேசம் போய் விடுவது நலமென்று கருதி அவள் சுலோசனர் கூறியபடி மனோகரனுக்குச் சொன்னாள்.

அன்றையதினம் இரவு பத்துமணி யாகிவிட்டது. எல்லாரும்போசனஞ்செய்து படுக்க சமயம்வந்தபோது சுலோசனர் முன்னமே தயார்செய்திருந்த இரண்டு ஆட்களை வரவழைத்து, அவர்கள் கையில் இரண்டு பணமுடிப்புகளைக் கொடுத்து, சுந்தரி கொடுத்தனுப்பியதாக வழியிற்போகும்போது மனோகரனுக்குச் சொல்லும்படி கட்டளையிட்டு, வெகுதூரஞ் சென்றபின் மனோகரனைத் தந்திரமாய்க் கத்தியால் கொன்றுவிடும்படி திட்டஞ்செய்தார். பிறகு மனோகரனைக் காக்கும் போர்வீரர்களை வரவழைத்து, இன்றிரவு மனோகரன் தனியே வெளியேபோவான். நீங்கள் அவனைத் தடுக்காமல் விட்டுவிடுங்கள். பொழுதுவிடிந்தபின் மனோகரன் ஓடிவிட்டானென்று கூச்சலிடுங்கள்'' என்று அவர்களுக்குச்சொல்லி யனுப்பிவிட்டார். பிறகு அரண்மனைக்கு வெளியே காவல்காக்கும் சந்திரசேகரர்போர் வீரர்களைக் கூப்பிட்டு, இன்றிரவு வெகுநாழிகை கழித்து என்னுடைய இரண்டு போர்வீரர்கள் அரண்மனைக்குள் வருவார்கள். அவர்களைத் தடைசெய்யாமல் உள்ளே விட்டுவிடவேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிட் டனுப்பினர். மறுபடியும் இலட்சுமியைக் கூப்பிட்டு மனோகரனைப் புறப்படச் சொல்ல ஏவினர். எல்லாம் சித்தமாய்விட்டன. சுலோசனர் தன்னறையில் உட்கார்ந்து கொண்டார். சுமார் பதினொருமணியாகிவிட்டது. மனோகரன் நல்ல உடுப்புகளையணிந்து பகவானைத் தியானித்து பிறகு சுந்தரியை நினைத்துக் கொண்டு புறப்பட்டான். அரண்மனைக்குவெளியில் காத்துக்கொண்டிருந்த இரண்டு காவலாளர்களுடன் சேர்ந்துகொண்டு விரைவாக நடக்க வாரம்பித்தான். அப்போது அக்காவலாளர்கள், சுந்தரி உங்களுக்காக பணம்அனுப்பியிருக்கிறார்களென்று மனோகரனுக்குச் சொன்னார்கள். வெகுதூரம் நடந்தார்கள். ஆனந்தபுரியைக்கடந்து போகையில் இரண்டு காவலாளர்களையும் முன்னேபோகவிட்டு மனோகரன் அவர்கள்பின்னே நடந்தான். அச்சமயத்தில் கையில் கத்

தியும் தடியுமாக ஆறு ஆசாமிகள் அவர்கள் எதிரே வருவ தைக்கண்டு, மனோகரனிடத்துப் பணமுடிப்புகளைக் கொடுத்துவிட்டு, இடுப்பில் கட்டித் தொங்கிய கத்தியை கையிலெடுத்துக்கொண்டு சுலோசனர் போர்வீரர்கள் நடக்க வாரம்பித்தார்கள். இவர்களை நோக்கிவந்த ஆறுமனிதர்களில் குதிரைமீதுவந்த இரண்டு பேர்வழிகள், மனோகரனுடைய காவலாளிகள்போல் நடித்துவந்த கொலையாளிக ளிருவரையும் நோக்கி ஏதோ சிலகேள்விகள் கேட்க, பிறகு இருதிரத்தாருக்கும் வாக்குவாத முண்டாயிற்று. அச்சமயத்தில் பணத்தைக் கையில் வைத்துக்கொண்டு தூரமாய் ஓர் மரத்தின்கீழ் நின்ற மனோகரனை வந்த ஆறுமனிதர்களில் ஒருவராவது கவனிக்கவில்லை. மனோகரன் அவர்கள் என்னசெய்கிறார்கள் பார்ப்போமென்று இருந்தான். பிறகு அவர்களுக்கு வாக்குவாதம் முற்றிச் சண்டையுண்டாகி சுலோசனருடைய ஆட்களை அவ்விடம்வந்தவர்கள் கொன்றுவிட்டார்கள். பிறகு குதிரைகள்மீது உட்கார்ந்தவர்களில் ஒருவன் ஓ! சிருங்கமலையம்மனே! உனக்கு இப்போது இரண்டுநரபலிகள் கொடுத்துவிட்டுப் போகிறோம், இந்தத்தடவையாவது எங்கள்வேலையை முடித்துவை" என்று சொல்ல, பிறகு எல்லாரும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார்கள். இவையெல்லாம் நன்றாய்க் கவனித்த மனோகரன் மிகுந்த அதிசயங்கொண்டு, தனக்குத் துணையாகவந்தவர்கள் பிணமாய் விழுந்திருக்கு மிடத்திற்குச்சென்று பார்த்து, அங்கேவிழுந்திருந்த இரண்டு கத்திகளி லொன்றையெடுத்துக்கொண்டு சற்று முன்னே அவ்விடம் விட்டுப்போன ஆறு நபர்களையும் பின்தொடர்ந்து சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் அவர்கள் ஆனந்தபுரியை நோக்கிப் போகிறார்களென்று மனோகரன் அறிந்தான். நள்ளிரவில் அவர்கள் போகும் மாதிரியையும் பேசியதையுங் கவனித்தமனோகரன் அவர்களைத் திருடர்களென்று நிச்சயித்து விட்டான். அவர்கள் எங்கேபோய் என்னசெய்கிறார்கள் பார்ப்போமென்

றெண்ணி மனோகரன் அவர்களை விடாது பின்தொடர்ந்தான். ஆனந்தபுரிக்குப் போனவுடன் குதிரைமீது சென்ற இரண்டு மனிதர்கள் கீழேயிறங்கி அரண்மனைநோக்கி நடக்க வாரம்பித்தார்கள். அவர்களுடன் நடந்து சென்ற மற்ற நால்வரும் பின்தங்கி விட்டார்கள். அதுகண்டு மனோகரன் வேறுவழியாய் அரண்மனைவீதிக்குப்போகவேண்டுமென்று நினைத்துப் புறப்பட்டான். முன்னேசென்ற இரண்டுநபர்களும் அரண்மனைக்குள் புகுந்தபோது, அங்கிருந்த காவலாளி, சுலோசனர் ஆட்கள் அப்போதுதான் திரும்பிவருகிறார்களென்று நினைத்து, அவர்களைநோக்கி, இரத்தினபுரி யாட்களோ வென்று கேட்க, அவர்கள் ஆமாமென்று சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தார்கள். பிறகு அக்காவலாளி படுத்துவிட்டான். அதன்பின்பு மனோகரன் அரண்மனை வீதியில்வந்து ஓர் வீட்டுத்திண்ணையில் வீதிபக்கம் தலைவைத்து அரண்மனை வாசற்படியைப் பார்த்துக்கொண்டே படுத்திருந்தான். சற்றுநேரத்திற்கெல்லாம் இரண்டு மனிதர்கள் ஏதோ பளுவான சாமானைத் தூக்கிக்கொண்டு அரண்மனையினின்று வெளியேபோனதை மனோகரன்கண்டு, கையிலிருந்த பணமுடிப்புகளை அவ்வீட்டுத் திண்ணைமூலையில் வைத்துவிட்டு கத்தியை வீசிக்கொண்டு ஓடினான். அச்சமயத்தில் திருடர்களைச்சேர்ந்த நால்வர் மனோகரனைச் சூழ்ந்துகொள்ள வந்தும், அவன் கத்திக்குப் பயந்து தூரமாய் நின்றுவிட்டார்கள். பிறகு மனோகரன் முன்னே ஏதோ தூக்கிக்கொண்டு போனவர்களைப் பின்தொடர்ந்து ஓடி வழிமறித்து அவர்களைத் தடுத்து ஓர் பெரிய சத்தமிட்டான். அதைக்கேட்டு, தூங்கிக்கொண்டிருந்த அரண்மனை வேலைக்காரர்கள் விழித்துக்கொண்டு விளக்குகளை யெடுத்துக்கொண்டு வருவதைக் கண்ட கள்ளர்கள் பயந்து ஓடிவிட்டார்கள். அவ்விடத்தில் வாயில்துணியடைக்கப்பட்டு, கையுங்காலும் கயிற்றால்கட்டப்பட்டு சுந்தரி கீழே விழுந்திருப்பதைக்கண்டு வேலைக்காரர்கள் திகைத்து நிற்கையில், சுலோ

சனரும் சந்திரசேகரரும் ஓடிவந்தார்கள். சுந்தரியின் கட்டுகளை யவிழ்த்துக்கொண்டிருந்த மனோகரனைக்கண்டு கயிலாசனர் அதிசயித்து ஒன்றும் பேசாது நிற்க, கட்டவிழ்க்கப்பட்டவுடன் சுந்தரி எழுந்திருந்து தன் பிதாவைக்கட்டிக்கொண்டு அழுது நடந்தசங்கதியைச்சொன்னாள். எல்லாருமிக வாச்சரியத்துடன் அரண்மனைக்குள் சென்று சுந்தரி படுத்திருந்த அறையைப்போய்ப்பார்த்தார்கள். அவ்விடத்தில் லைக்காரனுங் கட்டப்பட்டு வாயில் துணியடைக்கப்பட்டுப் பேசமுடியாமல் இலட்சுமி உறங்கிக்கொண்டிருந்தாள். மற்றொருபக்கத்தில் சுந்தரியின் சமைகனும் அவ்வாறே கட்டப்பட்டுக் கீழே படுத்திருந்தார்கள். சற்றுநேரத்திற்கெல்லாம் மனோகரன் பணமுடிப்புகளையெடுத்துக்கொண்டு தன் அறையில் வைத்துவிட்டு சுந்தரியிருந்த வறைக்கு வந்தான். இதற்குள்ளாக இரதி அவ்விடம்வந்தபோது சுந்தரி அவளைக் கட்டிக்கொண்டு "அம்மா நான்பிழைத்தேன்" என்றழுதாள். பிறகு சந்திரசேகரர் மனோகரனை விபரமாகச் சங்கதியைச் சொல்லும்படிகேட்க, அவன் அன்றிராத்திரி அரண்மனையை விட்டு வெளியேபோனதைச் சொல்லாமல், தன்னறையில் உட்கார்ந்திருக்கும்போது யாரோ இரண்டு மனிதர்கள் அரண்மனையிலிருந்து பளுவான சாமானைத் தூக்கிக்கொண்டு போனதாகக் கண்டதாயும், அச்சமயத்தில் அவர்களை யொருவருந் தடுக்காமலிருந்ததால் வேலைக்காரர்களெல்லாம் நித்திரைசெய்துவிட்டார்களென்று நினைத்துப் பிரபுவினுடைய உத்தரவைக்கடந்து தன்னறையை விட்டு வெளியேபோய்க் கள்ளர்களை வழிமறித்துச் சுந்தரியைக் காப்பாற்றினதாயும் சொன்னான். பிறகு சந்திரசேகரப்பிரபுவும் அவர் மனைவியும் மனோகரன் ஒருவனில்லாவிட்டால் சுந்தரியையும் இழந்துவிட் டிருப்போமென்று எண்ணி, பிள்ளையை யிழந்துவிட்டதை மறந்து சுந்தரி பிழைத்ததற்கு சந்தோஷமடைந்தார்கள். அதன்பிறகு சந்திரசேகரர் கயிலாசனரைப்பார்த்து "கூடிய சீக்கிரத்தில் ஆனந்தபுரியைவிட்டு நான் வேறு ஊருக்குப் போய்விடவேண்டும்" என்றார். கயிலாசனர் மௌனமாயிருந்தார்.

## 23. கொலைக்குற்றம் விசாரணை.

அடுத்தநாள் காலை இலட்சுமி மனோகரனைக் கண்டு பேசி சுலோசனரிடத்து வந்து சமாச்சாரத்தைச் சொன்னாள். நாமொன்று நினைக்க வேறொன்று நடந்ததேயென்று சொல்லி, அநியாயமாய்க் கள்ளர்களால் கொல்லப்பட்ட தன்னிரு போர்வீரர்களைக் குறித்துச் சுலோசனர் மனம் வருந்தினார். பிறகு பணம்போனவழி யென்னவென்று அவர் இலட்சுமியைக் கேட்க, அவள் மனோகரன்தான் வைத்துக்கொண்டிருக்கிறானென, அதை சுந்தரி கேட்கிறாளென்று எப்படியாவது வாங்கிக்கொண்டு வந்துவிடென்று சுலோசனர் கட்டளையிட்டார். அப்படியே யாகட்டுமென்றுசொல்லி இலட்சுமிபோயினாள். அப்போது சம்பாதி மனோகரனிடத்துச் சென்று சுந்தரி அனுப்பினாளென்று ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அதை மனோகரன் பிரித்துப்பார்க்கையில், "என்னன்புள்ள மனோகரனே! நேற்றிராத்திரி தாங்கள் எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தீர்கள். அதை நானும் என்தாயாரும் ஒருநாளும் மறக்கமாட்டோம். இவ்வரண்மனையில் நான் தவிர மற்றெல்லோரும் தாங்களே என் அண்ணனைக் கொன்றதாக நிச்சயித்திருக்கிறார்கள். என்னகாரணத்தினாலோ நான் அவ்வாறு நிச்சயிக்க முடியவில்லை. எல்லாமறிந்த சத்தியபுரி நகரி துணையிருந்து தங்களைக் காப்பாற்றுவாளென்று நான் நம்பியிருக்கிறேன். ஆதலால் விசாரணை நடக்கும்வரையினும் தாங்கள் இவ்வரண்மனையை விட்டுப் போகவேண்டாம். தங்களுக்கு ஏதாவது கெடுதி நேரிடுமாயின், அந்தக் கெடுதியை நானுமடைவேன். இது நிச்சயம். ஜடைக்கிழவி கூறிய வாக்கியத்தில் எனக்கு நம்பிக்கையிருக்கிறது. தாங்கள் அவசரப்பட வேண்டாம். தங்களன்புள்ள காதலி சுந்தரி" என்று எழுதியிருந்தது. இதைப் படித்தவுடன் சுலோசனர் செய்த தந்திரத்தை மனோகரன் அறிந்து இலட்சுமியை நிந்தித்து,

சமாச்சாரம் முழுவதையும் சம்பாதிக்குத் தெரிவித்து, சுந்தரியி னிஷ்டப்பிரகாரம் தான் நடந்துகொள்வதாகச் சொல்லி யனுப்பினான். பிறகு மநோகரன், "பணத்தைக் காட்டி என்னைக் கொன்றுவரும்படி கலோசனர் இரண்டு ஆட்களை அனுப்பினாரோ? என்னிடத்து ஜகதீசன் கருணை யிருந்தவாறென்னே! எனக்கு கலோசனர் கெடுதி நினைத்தார். அவருக்கு இரண்டு போர்வீரர்களும் இரண்டாயிரம் பொன்னும் நஷ்டம். கெடுவான் கேடுநினைப்பான் என்று ஜடைக்கிழவி கூறியது சரியே. இப்பணத்தை நான் வைத்திருக்கக் கூடாது. மறுபடியும் கலோசனருக்குங் கொடுக்கமாட்டேன். இதைச் சுந்தரி எனக்குக் கொடுத்ததாக அவர்கள் எனக்குச் சொன்னார்கள். ஆதலால் இதை சுந்தரியினிடத்துக் கொடுத்தனுப்புவேன்" என்று யோசித்துக்கொண் டிருக்கையில், இலட்சுமி உள்ளே வந்தாள். மநோகரன் ஒன்றும் பேசவில்லை. அவளைப் பார்க்கவுமில்லை. இலட்சுமி தன்னைச் சுந்தரி யனுப்பினளென்று பேசத் தொடங்கியபோது, மநோகரன், "என் இலட்சுமி மாற்றிச் சொல்லுகிறாய்? கலோசனர் அனுப்பினரென்று உண்மையைச் சொல்லுவதற்கென்ன?" என்றான். இதைக் கேட்டவுடன் இலட்சுமி திடுக்கிட்டுச் சிறிதுநேரம் நின்று, பிறகு சங்கதியறிந்து பேசத் தொடங்குகையில், மநோகரன், "இலட்சுமி! உன்னை நன்றாயறிந்தேன். இனி நீ என்னிடம் வரவேண்டாம்" என்றான். அதற்கு இலட்சுமி, ஐயா! நான் ஒரு ஏழை. இந்தப்பாவி கலோசனருடைய வேலைக்காரியாயமர்ந்து அவர் அன்னத்தைப் புசித்துவருகிறபடியால் அவரிட்ட வேலையைச் செய்யவேண்டியதாயிருக்கிறது. தாங்கள் என்னை மன்னிக்கவேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். "ஆகையினால்தான் உன்னை சும்மாவிடுத்தேன்? இனி இங்கே வரவேண்டாமென்றேன். பணம் அகப்படுமென்று வந்தாயோ? அது சுந்தரி கொடுத்தபடியால் அவளுக்கே திருப்பிக் கொடுத்து

விடுவேன். இனி பிரயோசனமில்லை? போ" என்று மனோகரன் அவள்வந்த வேலையுமறிந்து பேசினான். உடனே இலட்சுமி வெளியே போய்விட்டாள். சுலோசன ரிடத்துப் போய் என்ன சொல்லுவாள்? ஒன்றுஞ் சொல்லத் தெரியாமல் விழித்தாள். அவர்சங்கதியை யறிந்தார்.

அன்றையதினம் பகல் மகதவரசன் கட்டளைப் பிரகாரம் கொலைக் குற்றத்தை விசாரிக்க நியாயாதிபதியொருவர் தனக்கு ஒத்தாசையாக நாலு உத்தியோகஸ்தர்களுடன் ஆனந்தபுரிக்கு வந்தார். அவர்களை அதிக மரியாதையுடன் சுலோசனர் வரவழைத்து சௌக்கியமாக இருப்பதற்கு நல்ல இடங்கொடுத்து உபசரித்து, அன்றையதினம் முழுவதும் அவர்களுடன் கலந்து பேசிக்கொண்டிருந்தார். வந்த நியாயாதிபதி சுலோசனர்மூலமாக கொலையைப் பற்றிச் சங்கதி முழுவதையு மறிந்து, அடுத்தநாள் விசாரணை நடத்தப்படு மென்றார் பிறகு சுலோசனர் அதைச் சந்திரசேகரருக்குத்தெரிவித்துவேண்டியஏற்பாடுகள்செய்தார். மனோகரன்செய்த கொலைக்குற்றம் அடுத்தநாள் விசாரிக்கப்படுமென்ற சங்கதி ஆனந்தபுரி முழுவதும் பரவியது. அரண்மனைக் கடுத்தாப்போல வெகுநாளாக மூடப்பட்டிருந்தது ஓர் கட்டிடம். சுலோசனர் தமையனார் நரேந்திரனிருந்தகாலத்தில் அக்கட்டிடத்தில் ஊர் விசாரணை நடத்துவது வழக்கம். அவரிறந்தது முதல் மூடப்பட்டிருந்து மனோகரனை விசாரணை செய்யுங்காலத்து தான் அக்கட்டிடம் திறக்கப்பட்டது. அதில் நரேந்திரருடைய அழகான படமும் அதறகடுத்தாப்போல அவர் மனைவியினுடைய படமும் ஆக இரண்டு படங்கள் சுவற்றில் மாட்டித் தொங்கவிட்டிருந்தன. மறுநாள் அவ்விசாரணை மண்டபத்தில்நியாயாதிபதி உட்கார்ந்துகொண்டார். அவருக்கடுத்தாப்போல் அவருடன்வந்த நாலுஉத்தியோகஸ்தர்களும் உட்கார்ந்தார்கள். அவர்களுக்குச் சமீபமாக சுலோசனர், சந்

திரசேகரர், சுதந்திரர் ஆகியமூவர்களும் ஒன்றுசேர்ந்திருக்க, அவர்களுக்கெல்லாம் எதிராக அவ்வூர்ச்சனங்கள் நிறைந்திருந்தனர். காலை சுமார் பத்துமணிக்கு மனோகரனை இரண்டு சேவகர்கள் அழைத்துக்கொண்டுபோய் சபையோர்கள் மத்தியில் நிறுத்தினார்கள். சுதந்திர மந்திரி குற்றப்பத்திரிக்கையை நியாயாதிபதிக்குப் பக்கத்திலுட்கார்ந்திருந்த உத்தியோகஸ்தர்களி லொருவரிடத்துக்கொடுக்க. அவர் எழுந்து நின்று அதை வாசித்தார். உடனே குற்றத்தை ருசுப்படுத்தசுலோசனர் கண்டுபிடித்திருந்தசாட்சிக்காரர்களெல்லாம் ஒருவர்பின் னொருவராகவந்து சுலோசனர் சொல்லிக்கொடுத்த பாடத்தைமறவாது ஒப்பித்தார்கள். ஒருவன்மனோகரன் சந்திரசூடனைக்காட்டில்கொன்றபோது நான் பார்த்தேன் என்றான். மற்றொருவன் சந்திரசூடன் பிணத்தையிழுத்துப்போய் காட்டுமிருகங்களுக்கிரையாக மனோகரன் போடும்போது நான்பார்த்துப் பயந்தோடி விட்டேனென்றான். இன்னுமொருவன் கொலைசெய்ததை நான் பார்த்தேன், ஒருவருக்கும் சங்கதியை சொல்லவேண்டாமென்று மனோகரன் எனக்கிந்தப் பணத்தையும் பட்டுத்துப்பட்டாவையும் கொடுத்து வேண்டிக்கொண்டானென்றுசொல்லி, ஒரு மோகராவையும் ஒருபட்டு வஸ்திரத்தையும் சபையோர்முன் வைத்தான். அவ்வஸ்திரத்தைப் பார்த்தபோது சந்திரசேகரர் கண்களில் நீர் தளும்பியது. ஏன்? அது சந்திரசூடனுடைய பட்டுத்துப்பட்டா இதை யறிந்தார் நியாயாதிபதி. அவ்வஸ்திரம் அந்த மனிதனிடத்து எவ்வாறு வந்ததோ அதை சுலோசனரே யறிவார். இப்படியாக அநேக மனிதர்கள் வெகு சாமர்த்தியமாய் எல்லாரும் நம்பும்படி பொய்ச்சாட்சிக் கூறியபின், சுலோசனர் எழுந்திருந்து தன்னிடத்துமனோகரன் கூறியதாகமுன்னே சந்திரசேகரருக்குத்தெரிவித்ததையெல்லாஞ்சொல்லி, அதற்குச்சாட்சியாக மனோகரனைக் காவல் காத்துக்கொண்டிருந்தபோர்வீரனிடத்திலிருந்து வாக்குமூலம்வாங்கச்செய்தார்.

பிறகு சுதந்திர மந்திரி இரண்டு துணிமூட்டைகளையும் இரண்டு கைத்தடிகளையும் நியாயாதிபதி முன்வைத்து, அரண்மனையில் மனோகரன் வந்த நாள் முதல் கடைசியாக அவன் சுந்தரியைக் காதலித்ததைக் கண்டு சந்திரசூடன் சில நூதன ஏற்பாடுகள் செய்துவைத்த பின் இருவர்களும் காட்டில் சண்டையிட்டது வரைக்கும் கூறி, பிறகு மனோகரனுடைய இரத்தம் படிந்திருந்த உடுப்புகளையும், உள்ளே கத்தியை யுடைத்தான தடியையும் சபையோர்களுக்குக் காண்பித்து, காட்டில் கண்டெடுத்த சந்திரசூடனுடைய உடுப்புகளையுங் காட்டினார். அதன்பின்பு சந்திரசேகரர் சுதந்திரர் கூறியவையெல்லாம் சரிதானென்று ஒத்துக்கொண்டார். வாதிகள் பக்கம் விசாரணைமுடிந்தது. அவ்விடத்திருந்த ஊர்ச்சனங்களெல்லாம் மெள்ளப் பேச வாரம்பித்து மனோகரனை நிந்திக்கத் தொடங்கினார்கள். பிறகு சத்தமடங்கியவுடன் அங்கு குற்றவாளியாக நின்ற பிரதிவாதியை விசாரிக்கத் தொடங்கினார்கள். மனோகரன் என்ன சொல்லுவான்? ஜடைக்கிழவியை நினைத்துக்கொண்டான். பகவானைத் துதித்தான். சுலோசனர் செய்த சூதுகளை நன்றாயறிந்து கோபங்கொண்டான். சாட்சிக்காரர் கூறியவையெல்லாம் நினைத்துப் பார்த்தான். அவனுக்குச் சாட்சிகூற ஒருமனிதனுமில்லை. சும்மாயிருந்தான். அப்போது நியாயாதிபதி மனோகரனை நோக்கி, “என்ன மௌனஞ் சாதிக்கிறாய்? குற்றத்தை எப்படி ஒத்துக்கொள்வது என்றுயோசிக்கிறாயோ?” என்று கேட்டார். அதற்கு மனோகரன், “ஆமாம், செய்யாத குற்றத்தை எப்படி ஒத்துக்கொள்வதென்றுதான் யோசிக்கிறேன்” என்று ஆரம்பித்து, சுந்தரியைத்தான் நேசிக்க நேர்ந்தமாதிரியையும், அதைக்கண்டு சந்திரசூடன் தன்னிடத்து விரோதங் கொண்டதையும், கடைசியாகச் சிங்காரத் தோட்டத்தில் காட்டிற்குச் சமீபமாக ஓரிடத்தில் சுந்தரியின் முன்பாக தனக்கும் சந்திரசூடனுக்கும் நடந்த வாக்குவாதத்தையும், பிறகு சுந்தரி

அரண்மனைக்குத் திரும்பியபின் சந்திரருடனைக் காட்டுப்
பன்றி யெதிர்த்தபோது அதைத்தான் கொன்றதையும்,
அதனால் தன் உடுப்புகளிலும் கத்தியிலும் இரத்தம் பட்
டதையும், அதன்பின்பு சந்திரருடன் தன்னுடன் பேச
மனமில்லாமல் தனியேபோய் விட்டதையும், விவரமாகக்
கூறி, "இவ்வளவுதான் நடந்த விஷயம். இது சத்தியம்.
சந்திரருடன் திரும்பி அரண்மனைக்கு வராததற்குக் கார
ணம் எனக்குத் தெரியாது." என்று சொல்லி முடித்தான்.
"உனக்குச் சாட்சிகூற யாராவதுண்டா? அவர்கள் இங்கே
வந்திருக்கிறார்களா?" என்று நியாயாதிபதி கேட்டார். அ
தற்கு மனோகரன், "எனக்குச் சாட்சிகூற ஒருவருண்டு.
அவர் எனே இன்னும் சும்மாயிருக்கிறார்" என்றான். நியா
யாதிபதி, "அவரைக் கூப்பிடு" என்று சொல்ல, மனோகர
ன், "நான் அவரைக் கூப்பிடவேண்டியதில்லை, சமயத்தில்
வந்து சாட்சி சொல்லுவார். அவருக்கெல்லாந் தெரியும்"
என, நியாயாதிபதி, "அவர் யார்? எங்கேயிருக்கிறார்?" என்
று கேட்க, மனோகரன், "கண்ணில்லாமலே பார்த்து, காதி
ல்லாமலே கேட்டு, பேச வாயில்லாமலே மௌனஞ் சாதித்
து, காலில்லாமலே எங்கும் வியாபித்து, எல்லாவற்றையும்
அறிந்து, துஷ்டர்களைச் சிட்சிக்கவும் சிஷ்டர்களைக் காப்
பாற்றவும் இப்பூமியின்கண் அடிக்கடி எழுந்தருளும்
கருணாநிதிதான் என்னுடைய சாட்சி. இனி அவர் சாட்சிக்
கூறினாலல்லாமல் நான் தப்பவழியில்லை. இவ்வூர்க் கதிபதி
யாகிய மகா கருணைபொருந்திய கமலாசனப் பிரபு எனக்கு
விரோதமாய்க் கூறிய வாக்கியங்களின் உண்மையை அவ
ரேயறிவார். அதற்குமாறாக ஏழையாகிய யான் என்னகூ
றமுடியும்? எனக்குவிரோதமாய்ச் சத்தியஞ்செய்து சாட்
சிகூறினவர்களில், கமலாசனப் பிரபுவைத் தவிர மற்றவர்க
ளைநான் இதற்குமுன் கண்டதேயில்லை." என்று கூறினான்.
பிறகு நியாயாதிபதி அவன்பேச்சின் உண்மையையுணரா
மல்கமலாசனர் கூறியதைநம்பி, மற்றுமுள்ள சாட்சிக்காரர்க

ளெல்லாருஞ் சொல்லியது சரியெனத் தீர்மானித்து, மனோகரன் உண்மையைச் சொல்ல நாணினவனைப் வெகு சத்தியவான்போல நடிக்கிறானென்று நிச்சயித்து, பிறகு தன்னுடன்வந்த உத்தியோகஸ்தர்களுடன் கலந்து யோசித்து, எழுந்துநின்று சபையோர்களைப் பார்த்து, ஒவ்வொரு சாட்சி கூறியதையும் ஒழுங்கு படுத்தி தொடர்ச்சியாகச் சொல்லி, கடைசியாக மனோகரன்தான் சந்திரசூடனைக்கொன்றானென்று நிச்சயிக்கப் பட்டது என்றார். அப்போது சபையோர்களெல்லாம் அது சரிதானென்று சம்மதித்தார்கள். பிறகு நியாயாதிபதி மனோகரனைப் பார்த்து, "உன்மீது ஏற்படுத்தப்பட்ட குற்றம் ருசுவாய்விட்டது. நீ செய்த கொடிய குற்றத்திற்காக இராசாதி ராசனாகிய மகதவரசனுடைய சட்டப்பிரகாரம் உனக்கு மிகவும் கொடிய தண்டனையாகிய கொலையை விதிக்கப்பட்டது. இன்றைக்கு மூன்றுவதுநாள் நீ அத்தண்டனைக் குட்படவேண்டும்" என்று சொல்லிஉட்கார்ந்தார். உடனே அவருக்குப்பின்னையிருந்த நரேந்திரருடையபடம் அறுந்து பொத்தென்றுகீழேவிழுந்தது. அதைக்கண்டு எல்லாரும்திகைத்துநிற்கையில், சுலோசனர்எழுந்திருந்து வெகுநாளைக்குமுன் கட்டப்பட்ட படமானதால் கயிறுநைந்துபோய் அறுந்துவிட்டதென்றுசமாதானங்கூறினார். ஆனாலும் சற்றுமுன் மனோகரன் கூறியதை நினைத்துச் சிலர் அவ்விசாரணை சரியாக நடத்தப்படவில்லையென்றும், அது கடவுளுக்குச் சம்மதமில்லைபோலு மென்று நினைத்தார்கள். பிறகு மனோகரன் மனஞ்சலியாமல் அப்படம் அறுந்துவிழுந்ததையே பகவான் தன்னைக் காப்பாற்றக் காட்டிய ஓர் குறியென்று நினைத்து இருசேவகர்களுடன் போய்ச் சிறைச்சாலை யடைந்தான்.

## 24. சுலோசனர் நிலைமை.

விசாரணை முடிந்து மனோகரனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டதென்னும் சமாச்சாரத்தைக் கேட்ட வுட

ன் சுந்தரியிருந்த அக்கத்தை யடைந்தான். இனிச் சந்திரருடன் திரும்பிவந்தா லல்லாமல் தன்காதலன் உயிர்பிழைக்கும்வழி யில்லையென்று சுந்தரி அறிந்து, சம்பர்த்தியை ஜடைக்கிழவியி னிடத்து அனுப்ப, அவன் அக்கிழவியை அனந்தபுரி முழுவதும் தேடியுங் காணாமல் திரும்பி வந்துவிட்டான். நல்ல சமயத்தில் ஜடைக்கிழவி மறைந்து விட்டாளே யென்று சுந்தரி மனவருத்தமடைந்து, இனியென்ன செய்வதென்று தெரியாமல் தன் சகிகளுடன் யோசிக்கலானாள். மனோகரன் விசாரணை முடிந்தவுடன் இராமதாசர் சந்திரசேகர ரிடத்துச் சொல்லாமலே அரண்மனையை விட்டுப்போய்விட்டார். தன் பிள்ளையைக் கொன்றதற்காக மனோகரனுக்குக் கொடிய தண்டனை விதிக்கப்பட்டதென்று சந்திரசேகரர் அறிந்தும் ஏதோமனக்கவலையுற்று ஒருவருடனும் பேசாமல் மௌனத்தை வகித்தார். இராமதாசர் தன்னிடஞ் சொல்லாமல் போய்விட்டதற்குக் காரணந் தெரியாமல் பெரிது சிந்திக்கலானார். அவர் மனைவி இரதியும் மனோகரனுக்கு மனமிரங்கினாள். கமலாசனர் ஒருவரே தாமெண்ணியபடி காரியம் முடிந்ததென்று மனக்களித்தவர், மனோகரனைத் தூக்கிலிட இன்னும் இரண்டுநாள் எப்படிக் கழியுமென்று அவர் சிந்தையுற்றிருக்கையில், விசாரணை நடந்ததற்கு அடுத்த நாள் காலை இலட்சுமி அவரிடத்து ஒரு கடிதம் கொண்டுவந்து கொடுத்தாள். அதை யவர்பிரித்துப்பார்க்க, "அனந்தபுரிக் கதிபதியே! மனச்சாட்சிக்கு விரோதமாய்ப் பொய்சாட்சிசொல்லி மனோகரனைத் தூக்கிலிடும்படி ஏற்பாடு செய்துவிட்டீர். சந்திரன் உயிருடன் எங்கள் வசத்திலிருக்கிறான். இப்போது நீர் என்ன சொல்லுகிறீர்? யோசியும். மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள வழிதேடும். எந்த சுந்தரியை யடைவதற்காக இந்தத் துஷ்டவேலையைச் செய்தீரோ, அந்தச் சுந்தரியை எங்களுக்குக் கொடுப்பீரானால் எங்கள் வசமிருக்கும் சந்திரனை இனிவெளிப்படாமல் கொன்றுவிடுவோம். அப்படி

செய்ய உமக் கிஷ்டமில்லாத பட்சத்தில் சந்திரகுடனே நாளையதினம் அரண்மனைக்கு அனுப்புவோம். நாங்கள் சுந்தரியை எடுத்துக்கொண்டுபோக இரண்டுதரம் முயன்றோம். முதல்தடவை இலட்சுமி ஒத்தாசை செய்ய, நாங்கள் சுந்தரியைச் சுலபமாய்க் கொண்டுபோனோம். நடுவழியில் நீர் காட்டில் வந்து கெடுத்தீர். இரண்டாவதுதடவை அரண்மனைக்குள் புகுந்து காரியத்தை முடிக்கப்பார்த்தோம். அதை மனோகரன் கெடுத்துவிட்டான். இப்போது மூன்றாந்தடவை உம்மைக்கேட்கிறோம். எங்களிடத்தில் நீர் நன்றாய் அகப்பட்டுக்கொண்டீர். பதில் சமாச்சாரத்தை உடனே இக்கடிதம் கொண்டுவரும் மனிதனிடத்து அனுப்பவேண்டியது. அப்படிச் செய்யாமல் அம்மனிதனை நீர் பிடித்துவைத்து, உம்முடைய அதிகாரத்தைச் செலுத்தப் பார்த்தீரானால், நீர் உம்முடைய மானத்தை யிழப்பதுடன் பிராணனையும் இழந்துவிடுவீர். ஜாக்கிரதை.'' என்று எழுதியிருந்தது. கையெழுத்தில்லை. சுலோசனர் கடிதத்தைக் கீழேயெறிந்தார். தொப்பென்று சோபாவின்மீது உட்கார்ந்து சாய்ந்தார். அதைப் பார்த்த இலட்சுமி மிகவும் பயந்து இன்னது கேட்பதென்று தெரியாமல் விழித்தாள். சுலோசனர் ஒன்றும் பேசவில்லை. பிறகு இலட்சுமி தைரியங்கொண்டு, "என்னவிசேஷம் சுவாமி?'' என்று கேட்க, அதற்கு சுலோசனர், "இந்தக் கடிதம் கொண்டுவந்த மனிதனைக் கூப்பிடு'' என்றார். உடனே இலட்சுமி வெளியேசென்று அம்மனிதனை உள்ளே யழைத்துவந்து சுலோசனர் முன்புவிட்டு, மறுபடியும் வெளியே சென்றாள். பிறகு சுலோசனர் அம்மனிதனை நோக்கி, "நீ எங்கிருந்துவந்தாய்?'' என்று கேட்க, அவன், "நான் ஒரு வேலைக்காரன். நீங்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் ஒன்றுஞ் சொல்லக்கூடாதென்று என் எஜமானன் கட்டளையிட்டிருக்கிறார்.'' என்றான். சுலோசனர் யோசித்தார். கடிதமெழுத்

லாமா? அல்லது சமாச்சாரம் சொல்லியனுப்பலாமா? எது சரியென்று வெகுநேரம் வரைக்கும் யோசித்திருந்து கடைசியாகக் கடிதமெழுதத் துணிந்தார். "நீங்கள் யாரோ தெரியவில்லை. உங்களிஷ்டப்பிரகாரம் நான் தடையில்லாமல் செய்கிறேன். உங்களை நேரில் கண்டு பேச ஆசைப்படுகிறேன். இக்கடிதங் கண்டவுடன் சந்திரசூடனைக் கொன்றுவிடுங்கள். உங்களுக்குச் சுந்தரியைக் கொடுப்பதுடன் அதிகப்பணமும் கொடுக்கிறேன். என்னை இந்தச் சமயம் காப்பாற்றவேண்டும்." என்று சுலோசனர் கையெழுத்தில்லாமலே ஓர் கடிதம் வரைந்து அம்மனிதனிடத்துக் கொடுத்தனுப்பிவிட்டார். பிறகு இலட்சுமி உள்ளே வர, சுலோசனர், "இலட்சுமி! இவ்வரண்மனையில் சுந்தரி விஷயமாய் ஏதோ சூது நடந்திருக்கிறது. அது உனக்கு நன்றாய்த் தெரியும். உண்மையைச் சொல்லுகிறாயா? அல்லது என் கத்திக்கிரையாகிறாயா?" என்று அவ்வறையில் வைத்திருந்த கத்தியைக் கையிலெடுத்துக்கொண்டார். என்னசெய்வாள் இலட்சுமி? கள்ளரைச்சேர்ந்த காலசெட்டி அவளை முதலில் கண்டதுமுதல் கடைசியாக வசிகரனைக்கொண்டு கள்ளத்தலைவர்களை யேமாற்றி யதுவரையிலும் விவரமாக இலட்சுமி கூறி, இதை முன்னமேயே சுலோசனருக்குத் தெரிவிக்காததற்குத் தன்னை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டாள். அதைக் கேட்டவுடன் சுலோசனர் தான் ஆனந்தபுரிக்கு வந்தபோது காட்டில் சந்தித்த சுந்தரி யின்னாரென்று அறிந்து, வசிகரனை யழைத்துவரக் கட்டளையிட்டார். இலட்சுமி வெளியே செல்ல, சுலோசனர் தனியே யுட்கார்ந்து தனக்குவந்த கடிதத்தை மறுபடியும் படித்து யோசிக்கிறார். என்ன ஆச்சரியமான சங்கதி! எனக்குக் கெட்டகாலம் வந்துவிட்டாப்போலிருக்கு. சுந்தரியை அவர்களுக்கெப்படி கொடுப்பது? அவளைக் கொடாத பட்சத்தில் சந்திரசூடன் வெளியேவந்து விடுவானே. பிறகு நம்முடைய கதி என்னவாகும்? இப்போது என்னசெய்யலாம். எங்

கேயாவது ஓடிவிடலாமா? அல்லது தற்கொலை செய்துகொள்ளலாமா? தெய்வம் மனோகரன்பக்க மிருக்கிறதே. நமக்குப் பணமிருந்து என்னபிரயோசனம்? ஊர்களிருந்து பயனென்ன? நேற்று விசாரணை முடிந்தவுடன் அப்படம் அறுந்துவிழுவானேன். மனோகரன் சொல்லிய பிரகாரம் கடவுளே அவனுக்குச் சாட்சிகூறினார்போலும். நான் அப்போதே சந்தேகித்தேன். நான் செய்ததெல்லாம் பிசகு. சங்கதி வெளிவந்தால் சந்திரசேகரர் என்னநினைப்பார்? நியாயாதிபதி என்னசொல்லுவாரோ? உண்மை வெளிவந்தால் நான் உயிருடனிருக்கலாமா? என்னகாலம் வந்துவிட்டது! எப்படித் தப்பிப்பிழைப்பேன். தெய்வம் எனக்கு ஒத்தாசை செய்யுமா? கொடிய பாவிக்கு யார்தான் ஒத்தாசைசெய்வார்கள்? ஏனோ இந்தச்சன்ம மெடுத்தேன்." என்று இவ்விதமாய் சுலோசனர் தன்னை வெறுத்துக்கொண்டு அவஸ்தைப்படுகையில், வசிகரன் வந்தான். அவனிடத்துப் பேசியபின்பு இலட்சுமி கூறியவையெல்லாம் உண்மையென உணர்ந்து, சுலோசனர் வசிகரனை யனுப்பிவிட்டார். பிறகு இலட்சுமி வசிகரனுக்குக் கொடுத்ததுபோக மிகுந்த பணத்தையும் முத்துமாலையையும் சுலோசனர் முன்புவைத்து, இவைகள் இரத்தின வியாபாரிகள் கொடுத்தவையென்றாள். அப்ப சுலோசனர் அவைகளைவாங்கிப் பத்திரமாய் வைத்துக்கொண்டார். கள்ளர்களாலடைந்த இலாபத்தையிழக்க நேரிடுமென்று பயந்து சுலோசனரிடத்து இலட்சுமி சங்கதியைச் சொல்லாமலிருந்தாள். கள்ளர்கள் சுலோசனருக்குச் சங்கதியைத் தெரிவிப்பார்களென்று இலட்சுமி நினைக்கவில்லை. அநியாயவழியில் சம்பாதித்தபணம் நிற்குமா? கள்ளர்கள்தான் கடிதமெழுதினார்களென்று இலட்சுமி அறிந்தபோதிலும், என்ன எழுதினார்களென்பது அவளுக்குத் தெரியாது. சந்திரருடன் உயிருடனிருக்கிறானென்று சுலோசனர் யாருக்காவது சொல்லுவாரா? பிறகு இலட்சுமி வெளியே போக, சுலோசனர் தன்னறையில் படுத்துவிட்டார். அவருக்குத் தேகசௌக்கியமில்லையென்று அரண்மனையில் பேசத் தொடங்கினார்கள்.

## 25. சந்திரசூடன் வெளியாகுதல்.

விசாரணை முடிந்த இரண்டாவது நாள் சாயந்திரம் மனோகரனைத் தூக்கிலிட ஓரிடம் குறித்து அதற்கு வேண்டிய சாமான்களை அவ்விட மனுப்பி தகுந்த ஏற்பாடு செய்தார் சுலோசனர். முன்னதாக மனோகரனைத் தொலைத்து விடுவோம், பிறகு பார்த்துக்கொள்வோமென்று அவர் எண்ணி சுறுசுறுப்பாய் வேலை செய்ய வாரம்பித்தார். அன்றைய தினம் அவ்வூரெங்கும் மனோகரனுடைய பேச்சாகவேயிருந்தது. அநேகர் இன்றோடே அவனுடைய வாழ்நாள் முடிந்ததென்றார்கள். அரண்மனையில் சுந்தரியின் மனோநிலைமையை யாரே அறிவார். இரண்டுநாளாக ஊண் உறக்கமின்றி அவளுடைய தேகம் வாட்டமடைந்தது. இன்னும் சந்திரசூடன் வரவில்லையே, ஜடைக்கிழவியைக்காணோமேயென்று அவள் திகிலடைந்து, சம்பாதியை அடிக்கடி கிழவியைப் பார்த்து வரும்படி அனுப்பினாள். பிரயோசனமில்லை. அவள் மிகவும் வருத்தமடைந்திருக்கையில் சம்பாதி இரண்டுபண முடிப்புகளைக் கொண்டுவந்து சுந்தரியினிடத்துக் கொடுத்து மனோகரர் அனுப்பினாரென்றான். அப்பணத்தினுடைய விவரம் சுந்தரிக்கு முன்னதாகவே தெரியுமாதலால், ஒன்றும் பேசாமலே கண்களில் நீர்ததும்பி மறைப்பதைத் துடைத்து, அம்முடிப்புகளை வாங்கிக் கொண்டாள். அப்போது இரதி அவ்விடம் வர, சுந்தரியானவள் சுலோசனர் இலட்சுமி மூலமாக மனோகரரை அவ்வூரைவிட்டு ஓட்டிவிட செய்த சூதையும், அப்பண முடிப்புகள் தனக்குக் கிடைத்த மாதிரியையும் இரதிக்குத் தெரிவித்தாள். அதைக்கேட்ட இரதி சுலோசனரைத் தூஷித்து, அந்தப்பாவிதான் எதாவது சூதுசெய்து சந்திரசூடனைக் கொன்றுவிட்டு மனோகரன்மீது பழியைப் போட்டிருப்பானோ வென்று சொன்னாள். "அதற்கென்ன தடையம்மா! நமது குடும்பத்தை யழிக்கவல்லவோ அக்கிழவன் ஏற்பட்டிருக்கிறான்." என்று சுந்தரி கூற, இருவருமாகச்

சந்திரசேகரரிடத்துச் சென்றார்கள். சுலோசனர் செய்த தந்திரத்தைத் தெரிவித்து இரண்டு பணமுடிப்புகளையும் பிதாவினிடத்துக் கொடுத்தாள் சுந்தரி. விசாரணை நடந்ததினமே பிரபுவுக்கு சுலோசனரிடத்துச் சந்தேகம் உண்டாகிவிட்டது. அதற்கப்புறம் அவர் சுலோசனரைப் பார்க்கவில்லை. தன் மனைவியும் புத்திரியுங் கூறியதைக் கேட்டபோது, விசாரணை நடந்தகாலத்தில் மனோகரன் சொல்லிய வசனங்களையும், தன் புத்திரி சுந்தரியை அவன் கள்ளர்களிடத்திலிருந்து மீட்டதையும் நினைத்துக்கொண்டு சந்திரசேகரர் விசனத்தை யடைந்தார். "இனி நாமென்னசெய்யலாம். நியாயாதிபதியின் தீர்மானத்தை ஒருவரும் மாற்றமுடியாது. அத்தண்டனையினின்று மனோகரன் தப்பவேண்டுமானால், இறந்துபோன சந்திரசூடன் உயிர்பெற்றுவரவேண்டும்" என்றார் பிரபு. இதுநிற்க, அன்றிரவு சுமார் பன்னிரண்டு மணிக்கு சிருங்கமலைக் கோட்டைக்கு வெளியேயிருந்த ஓர் புதருக்குள்ளிருந்துபுறப்பட்டு, ஜடைக்கிழவி அதிவேகமாய் நடந்து, சுற்றிலும் விபூதியைத் தூவிக்கொண்டு கோட்டைக்குள் சென்று, முன்னொருநாளிராத்திரி போயிருந்த வீட்டிற்குள் நுழைந்தாள். அவ்விடத்தில் காவற்காரனுடன் ஓர் சிறுவன் தூங்கிக்கொண்டிருந்தான். அப்போது கிழவி காவற்காரன்மீது விபூதியைப் போட்டு மந்திரித்துவிட்டு, தூங்கிக்கொண்டிருந்த சிறுவனையெழுப்பி, அவன் காலில் பூட்டப்பட்டிருந்த விலங்கை தந்திரமாய்க் கழற்றியெறிந்துவிட்டு, அவனை யழைத்துக்கொண்டு, முன்போலவே மறுபடியும் விபூதியைத் தூவிக்கொண்டே கோட்டையை விட்டு வெளியே வந்து, அதிகவேகமாய் நடந்து, மலைகளையும் காடுகளையுங் கடந்து, பொழுதுவிடியுமுன்னமே ஆனந்தபுரி சிங்காரத் தோட்டத்திலிருந்த ஓர் மடத்தில் புகுந்து கதவை மூடிக்கொண்டாள்.

பொழுதுவிடிந்தது, இரண்டுநாழிகையாயிற்று. மனோகரனைத் தூக்கிலிடக் குறிக்கப்பட்ட விடத்தில் ஊர்சனங்

களெல்லாம் கூட்டமாய் வந்து சேர்ந்தார்கள். பிறகு நியா யாதிபதி உத்தியோகஸ்தர்களுடன் அதிக கம்பீரமாக வந்துசேர்ந்தார். உடனே கலோசனர் சில வேலைக்காரர்களுடன் வந்தார். சற்று நாழிகைபொறுத்து அதிக விசனத்தை யுட்கொண்டவராய் சந்திரசேகரர் சம்பாதியுடன் வந்தவுடன், மனோகரனை நாலு சேவகர்கள் அதிக சாக்கிரதையாக அவ்விட மழைத்துவந்தார்கள். அப்போது மனோகரன் இருகண்களையு மூடிக்கொண்டு பகவானைத் துதித்துக்கொண்டு வந்ததைக் கண்ட ஜனங்கள் அவன்செய்த குற்றத்தை மறந்தவர்களாய் விசனத்தை யடைந்தார்கள். ஒருவர் மற்றொருவருடன் பேசவில்லை. கணக்கிலா ஜனங்கள் சேர்ந்திருந்தும் அவ்விடத்தில் சத்தமே யில்லாதிருந்தது. எல்லோரும் மனோகரனையே பார்த்திருந்தார்கள். அவன் கண்களைவிழித்து, சந்திரசேகரர் எங்கிருக்கிறாரென்று பார்த்து, அவரிடஞ்சென்று, அவரை நமஸ்கரித்துநின்று, "என் தந்தையே! உத்தரவு கொடுக்கவேண்டும். இது தங்களால் வளர்க்கப்பட்ட தேகமாதலால் தங்களுடைய சொத்து. இதை யழிக்கத் தாங்கள்தான் உத்தரவுகொடுக்க அருகராயிருக்கிறீர்கள். இனி நான் நியாயம் பேசுவதில் பயனில்லை." என்று சொன்னான். அதைக்கேட்ட சந்திரசேகரர் கண்களிலிருந்து தாரைதாரையாக நீர் பெருகியது. அவர் பேசமுடியாது முடியவில்லை. கண்களைத் துடைத்துக்கொள்பவர்போல அவர் வஸ்திரத்தால் தன் முகத்தையே மூடிக்கொண்டார். பிறகு சேவகர்கள் மனோகரனைத் தூக்குமேடைக்குச் சமீபமாக அழைத்துக்கொண்டு போகையில், அவன் கிழக்குமுகமாய்த் திரும்பி, உலகில் பிரத்தியட்சப் பகவானெனக்கொண்டாடப்படும் சூரியனைப்பார்த்து நமஸ்கரித்து கைகூப்பி நின்றுகொண்டு, "என் செயலாவதி யாதொன்றுமில்லை யினித்தெய்வமே, யுன்செயல்லவென் றுணரப்பெற்றேனிந்த வுடனெடுத்த, பின்செய்த தீவினை யாதொன்றுமில்லைப் பிறப்பதற்கு; முன்செய்த தீவி

ணையே விங்ஙனேவந்து மூண்டதுவே.'' என்று மர்த்தமுள்ள வார்த்தைகளை உரத்திச்சொன்னான். அதைக் கேட்ட சனங்களெல்லாம்கண்ணீர்விடத்தலைப்பட்டார்கள். அதன் பின்புமனோகரன் தூக்குமேடையின்மீதுஏறிநின்றான். உலகப்பற்றை விட்டான். தேகபந்தத்தை அறுத்தான். மனதைப் பகவானிடத்து நிறுத்தினான். அச்சமயத்தில் சந்திரசேகரர் அவ்விடமிருக்க முடியாமல் எழுந்துபோக எத்தனித்தார். அப்போது சிறிதுதூரத்தில் ஓ! ஓ! வென்று ஒரு பெருஞ் சத்தங்கேட்டது. எல்லாரும் சத்தம்வந்த திக்கை நோக்க, யாரோ இருவர் கூச்சலிட்டுக்கொண்டு அதிவேகமாயோடிவருவதைக் கண்டார்கள்.

சற்றுநேரத்திற் கெல்லாம் ஒரு கிழவியும் ஒரு சிறுவனும் வருவதாகத் தெரிந்தது. நேற்றிய தினம் கடிதமெழுதினவர்கள் தான் வருகிறார்களோ வென்று பயந்து சுலோசனர் எழுந்து அத்திக்கை நோக்கினார். அவர் கண்ணுக்கு ஜடைக்கிழவி தோன்றினாள். இந்தப் பயித்தியக்காரிதானா வென்று சொல்லி யுட்கார்ந்து விட்டார். அக்கிழவியுடன் வந்து கொண்டிருந்த சிறுவனை அவர் கவனிக்கவில்லை. சமீப மாகவந்து விட்டாள் கிழவி. மேடையின் மீது நின்ற மனோகரன் கண்ணை விழித்து, நியாயாபதியைப் பார்த்து, "எனக்கு சாட்சி சொல்ல நல்ல சமயத்தில் பகவான் இதோ வந்து விட்டார்" என்று சொல்லிக் கீழே குதித்து விட்டான். உடனே சந்திரசேகரர் பக்கத்தில் நின்ற சம்பாதி அதிக ஆச்சரியமும் அடங்கா மகிழ்ச்சியுங் கொண்டு, சந்திரசூடன் வந்து விட்டான் என்று கூச்சலிட்டு அரண்மனைக் கோடினான். அப்போது உண்மைதானா வென்று சந்திர சேகரர் எழுந்து நிற்கையில், சாதாரண துணியை யுடுத்திக் கொண்டு தேகம் மிகவும் மெலிந்து கறுத்து ஒளியிழந்து வந்த சந்திர சூடன் தன் பிதாவை அதிக சந்தோஷத்தால் கட்டிக் கொண்டான். ஜனங்க ளெல்லாம் மூக்கின்

மேல் கைவைத்து அதிசயித்து மனோகரனை வாழ்த்தினார்கள். ஜடைக் கிழவியைப் போற்றினார்கள். தூக்கு மரத்தைத்தூள் தூளாக உடைத்துப் பொடியாக்கினார்கள். ஜடைக் கிழவி தூக்கு மேடையின் மீதேறி நின்று கொண்டாள். நியாயாதிபதி சுலோசனரை நோக்கினார். சுலோசனர் தலை குனிந்தார். அரண்மனையி லிருந்து சுந்தரியும் இரதியும்அவ்விடம் வந்தார்கள். சந்திர சூடனைக் கண்டபோது அவர்களுக்குண்டான சந்தோஷத்தின் அளவைச் சொல்லி முடியுமோ? சந்திரசூடன் தன் தாய் தந்தைகளையும் சுந்தரியையுங் கண்டு பேசிய பின்பு, மனோகரன் அவனை மார்புடனணைத்துக் கொண்டு, சற்று முன்னே உன்னால் இறக்கவிருந்தேன், இப்போது உன்னால்பிழைத்தேன்.'' என்றுசொல்ல, சந்திரசூடன், மேடைமீதுநின்ற கிழவியைக் காட்டி, "அவளால் நீ பிழைத்தாய்'' என்றான். இவையெல்லாங் கவனித்த சுலோசனர் உட்கார்ந்திருக்கவும் முடியாமல் எழுந்து போகவும் தைரியமில்லாமல் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கையில் ஜடைக்கிழவி, ஜனங்களை நோக்கி, தயவுசெய்து எல்லாரும் சற்றுநேரம் இவ்விடமிருக்க வேண்டுமென்றாள். அப்போது சம்பாதி நல்லவுடுப்புகளைக் கொண்டுவந்து கொடுக்க, சந்திரசூடன் அவைகளையணிந்து கிழவிபக்கத்தில் போய் நின்றுகொண்டு "பிரபுக்களே! ஆனந்தபுரி நேயர்களே! சிலநாளைக்கு முன் வியாபாரி வேஷம் பூண்டு ஓர் கள்ளன் இவ்வூர் அரண்மனைக்கு வந்தான். சரியான வியாபாரி யல்லவென்று சந்தேகித்து நான் அவனைத் தூஷித்துப் பேசினேன். பிறகு ஒருநாள் சாயந்திரம் நான் தனியே காட்டில் வரும்போது நாலு மனிதர்கள் என்னைச் சூழ்ந்துகொண்டு வாயில் துணி யடைத்து என் உடுப்புகளை யெல்லாம் கழற்றி யெறிந்து, என்னைத் தூக்கிக்கொண்டு நெருங்கிய காட்டிற்குள் புகுந்து; சிருங்கமலை யடைந்து; ஓர் இரகசியமான வழியில் நுழைந்து, பிறகு மலைகள் மத்தியில் வெகுதூரம் நடந்து ஓர் பெரிய கோட்டைக்குள்

போய் என் காலுக்கு விலங்கிட்டு ஓர் வீட்டி லென்னையடை
த்துக் காவலிட்டார்கள். அவ்விடத்தில் இவ்வரண்மனைக்
கு முத்துவியாபாரஞ் செய்ய வந்த மனிதனைக் கண்டேன்.
அங்கே அநேக ஆட்களிருக்கிறார்கள். எல்லாரும் கள்ள
ர்சாதியைச் சேர்ந்தவர்கள் என்று அறிந்தேன். நான் கா
வலிலிருந்தபடியால் அதிகமாய் அவர்களைக்குறித்து அறி
யமுடியவில்லை. இப்படியிருக்கையில் ஒருநாளிரவு என்பி
ராணனைக் காப்பாற்றிய இக்கிழவி அவ்விடம் வந்து என்
னைக் கண்டு பேசி தைரியஞ் சொல்லிவந்தாள். மறுபடியும்
நேற்றிராத்திரி வந்து என்னை இவ்விடம் அழைத்துவந்
தாள். மகாசூரர்களாயும் அதிக தந்திரசாலிகளாயு மிருக்
கும் அக்கள்ளர்கள் எவ்வளவோ சாக்கிரதையாக என்னை
க்காப்பாற்றியும் இக்கிழவி தன்னிடமிருக்கும் ஓர் விபூதி
யின் மகிமையால் அங்கிருந்தவர்களையெல்லாம் மயக்கச்
செய்து ஒருவரும் அறியாமலே என்னை வெளியே யழைத்
துக்கொண்டுவந்து உங்கள்முன் விட்டாள். இதுதான்
எனக்குத் தெரியும்." என்று சொல்லி முடித்தான். பிறகு
ஜடைக்கிழவி தான் சிருங்கமலைக் கோட்டைக்குப்போக
நேர்ந்ததையும் அங்கே சந்திரசூடனைக் கண்டதையும்சொ
ல்லி தன் துணிமூட்டைகளை யவிழ்த்து, அநேக கடிதங்க
ளையெடுத்துக் கீழேவைத்தாள். அவளைப் பயித்தியக்கா
ரியென் றிருந்தவர்களெல்லாம் ஆச்சரியமடைந்தார்கள்.
கிழிந்த துணிமூட்டையில் கடிதங்க ளிருக்குமென்று யாரு
ம் நினைத்ததேயில்லை. இதற்குமுன் அக்கிழவி ஒருவரிடத்
தும் அவ்வளவு நிதானமாய்ப் பேசினது கிடையாது. சந்
திரசூடன் அவளைக்குறித்துப் பேசியபின்பு எல்லாருக்கும்
அவளிடத்துப் பயம் உண்டாயிற்று. சந்திரசேகரருக்கு
ண்டான சந்தோஷத்தைச் சொல்லி முடியாது. சத்தியபுரி
யிலிருக்கும் சுந்தரேசுவரியே ஜடைக்கிழவி உருவமாக வந்
திருக்கிறாளென்று சுந்தரி நினைத்தாள். இரதி தன் பின்

னையுடன் தனியே பேசவேண்டுமென்றும் ஆவலுடன் இருந்தான். கயிலாசனார் ஒருவர் முகத்தையும் பாராமலே தலைகுனிந்து உட்கார்ந்துகொண்டு அடிக்கடி அக்கிழவியைமாத்திரம் திருப்பிப்பார்ப்பார். அவர் அதற்குமுன் அக்கிழவியை. அநேகதரம் கண்டிருந்தும் அவள் முகத்தை அப்போது தான் உற்றுநோக்கினர். தேகம் மிகவும் மெலிந்து கிழவியாகி ஜடையை வளர்த்துக்கொண்டிருந்தபோதினும் அவளை உற்றுப்பார்க்கும்போது கயிலாசனாருக்குச் சந்தேகமுண்டாகி அரண்மனையில் வெகுநாளைக்குமுன் வேலைக்காரியாயிருந்த கமலத்தின் ஞாபகம் வந்தது. இன்னும் அநேக சமாச்சாரங்களை அவர் நினைத்துக்கொண்டு மிகவும் பயந்து பக்கத்திலிருப்பவர் கவனிக்கும் வண்ணம் பெருமூச்செறிந்தார். எல்லோரும் கிழவி என்னசொல்லப்போகிறளென்று அவளையே பார்த்திருந்தார்கள். அப்போது கிழவி பேச வாரம்பித்தாள். "பிரபுக்களே! ஆர்த்தபரிபாலகரே! சற்றே தயவுடன் நான் சொல்லுவதைக் கேளுங்கள். நான் இந்த ஊரில் பிறந்து வளர்ந்தவள். இவ்வூர்க் கதிபதியாகிய சுரேந்திரரிருந்த காலத்தில் அரண்மனையில் வேலைக்காரியாயிருந்தவள். என்பெயர் கமலம். ஒருநாள் சாயந்திரம் வேடிக்கையாக வண்டியி லேறிக்கொண்டு சுரேந்திரர் தன் மனைவியுடன் அரண்மனையைவிட்டு வெளியிலே சென்றார். அப்போது அவருக்கிருந்த ஒருவயது குழந்தையை என் குழந்தையுடன் வைத்துக்கொண்டு நான் அரண்மனையிலிருந்தேன். அன்றையதினம் வெளியே சென்ற பிரபுவும் அவர்மனைவியும் அரண்மனைக்குத்திரும்பிவரவில்லை. அடுத்தநாளும்வரவில்லை. இரண்டு மூன்றுநாளாயிற்று. சமாச்சாரம் ஒன்றுந் தெரியவில்லை. அரண்மனையிலிருந்த அவர் தம்பி கயிலாசனாரைக் கேட்டேன். அவர் சரியான பதில் கூறவில்லை. சுரேந்திரப்பிரபுவுடன் சென்ற என் புருஷனும் திரும்பிவரக்காணோம். வேலைக்காரர்களை விசாரித்தேன். அவர்களும் ஒன்றும் தெரி

பாமல் விழித்தார்கள். பிறகு சுலோசனர் என்னை தனியே யழைத்து ஓர் விசையமாக நிர்ப்பந்தஞ் செய்தார். அதற்கு நான் உடன்படவில்லை யாதலால் அவருக்குக் கோபம் உண்டாகியது. அன்று முதல் அவர் என்னை அரண்மனையினின்று தொலைத்துவிட முயன்றார். சிலநாள் கழித்து காட்டில் நரேந்திரரும் அவர் மனைவியும் செத்துவிழுந்துகிடந்ததைப் பார்த்து சிலர் வந்து சொன்னார்கள். அப்போது தம்பி செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் சுலோசனர் செய்துமுடித்தார். யாரோ கொலைபாதகர்கள் அநியாயமாய் நரேந்திரரையும் அவர் மனைவியையும் கொன்றுவிட்டார்களென்று ஊரெங்கும் வதந்தி உண்டாயிற்று. சுலோசனர் அதற்காகஒருபிரயத்தனமுஞ் செய்யவில்லை. என்புருஷன் போனவழி தெரியாமல் நான் துக்கித்துக்கொண்டிருக்கையில், சுலோசனர் ஒருநாள் என்னைமறுபடியும் தனியே யழைத்து என்கையில் அதிகபணங்கொடுத்து சிலசங்கதிகளைச்சொன்னார். அப்போது என்வயிறு பற்றியெரிந்ததை என்னவென்று சொல்லுவேன். நரேந்திரர் தன்மனைவியுடன் இறந்ததற்குக் காரணமறிந்தேன். என்புருஷன் வேறுதேசம்போய்விட்டதாகக் கேள்விப்பட்டேன். ஏழைகையிலதிக பணத்தைக் கொடுத்தால் சொன்னவண்ணங் கேட்பாளென்று எண்ணிய சுலோசனர் என்வசமிருந்த அவர்அண்ணன் குழந்தையைக்கொன்றுவிடும்படி என்னை வேண்டிக் கொண்டார். நான் அப்படியேயாகட்டுமென்று ஒத்துக்கொண்டு காலதாமதஞ் செய்துவந்தேன். அவர் சொன்னபடிசெய்ய எனக் கிஷ்டமில்லை. அதை யறிந்த சுலோசனர் ஓர் தந்திரஞ் செய்தார். ஒருநாளிரவு என் குழந்தையையும் நரேந்திரர் குழந்தையையும் அரண்மனையில் ஓர் அறையில்விட்டுப் பக்கத்தில் நான்படுத்து உறங்குகையில், என்குழந்தை அழக்கேட்டு விழித்துக்கொண்டு பார்க்கையில், சுலோசனர் அவ்வறையைவிட்டு அவசரமாயோடினார். என்குழந்தை வாயிலிருந்து பால் வழிந்தோட மார்

பின்மீது பெருகியிருந்தது. அதற்கடுத்தாப்போல ஓர் பாத்திரத்தில் பால் வைக்கப்பட்டிருந்தது. மிகுந்த சந்தேகத்துடன் உட்கார்ந்துகொண்டு நான்யோசித்திருக்கையில், என் குழந்தை இறந்துவிட்டது. சுலோசனர் விஷத்தைப்பாலில் கலந்துகொண்டுவந்து, அவசரத்தில் என்குழந்தையை தன் அண்ணன் குழந்தையென நினைத்து அதற்கு அப்பாலைக் கொடுத்து விட்டுப்போனரென்று அறிந்தேன். என்னசெய்வேன்? அவர் அரண்மனைக் கதிபதியாகிவிட்டார். அவர் செய்ததைப் பகிரங்கப்படுத்தினல் என் உயிரே போய்விடுமென்றுஅறிந்து, உடனே நரேந்திரர் குழந்தையையெடுத்துக்கொண்டு எங்கேயாவது ஓடிவிடலாமென்று நினைத்து அரண்மனையைவிட்டுநீங்கினேன். வெகுதூரஞ்சென்றபின் நரேந்திரர் குழந்தையை காப்பாற்றுவது கஷ்டமென நினைத்து அதைஎங்கேயாவது உயிருடன்விட்டுவிடவேண்டுமென்று ஓர்ஊருக்குள் பிரவேசித்தேன். அதுசத்தியபுரி. அப்போது அவ்வூர்பிரபுவுக்கு அரண்மனையில் விவாகம்நடந்துகொண்டிருந்தசமயம். அவ்வரண்மனையில் புகுந்து சமயற்கட்டில்குழந்தையைபடுக்கவிட்டுநான்ஓடிவிட்டேன். பிறகு நான் அநேக ஊர்கள் சஞ்சாரஞ் செய்து, சிலநாள் ஓர்மலையில் ஓர் சன்னியாசிக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தேன். அந்த சன்னியாசி திரிகாலமறிந்த ஞானி. அவர் ஒருநாள் என் விருத்தாந்தத்தையெல்லாம் விசாரித்தறிந்து, நரேந்திரப்பிரபு அவர் மனைவியுடன் கொல்லப்பட்டதற்குக் காரணஞ் சொல்லி, அவர்களைக் கொன்ற மனிதர்கள் பெயர் ஊரெல்லாங் கூறினர். சுமார் பத்துவருஷம் அவருக்கு வேலைசெய்தபின் எனக்கு அவர் சில உபதேசங்கள் செய்து மறுபடியும் ஆனந்தபுரிக்குப் போகும்படி உத்தரவுகொடுத்தனுப்பிவிட்டார். நான் ஆனந்தபுரிக்குவந்தபின் இக்கடிதங்களையெல்லாம் சம்பாதித்தேன்" என்று அவைகளைச் சந்திரசேகரனிடத்தில் கொடுத்து, "அவைகளைப் படித்தீர்களானல் சுலோசனர் பொறாமையால் தன்னண்ண

னையும் அவர் மனைவியையும் சில ஆட்களைக்கொண்டு கொன்றுவிட்டாரென்றும், இதுகாறும் மனோகரன் எனப்பெயர் வகித்து தங்கள் கருணையால் வளர்ந்துவந்தவன் நரேந்திரனுடைய குமாரன் என்றும் நன்றாய் ஏற்படும்'' என்று ஜடைக்கிழவி சொல்லி முடித்தாள். அதுவரைக்கும் மிக்க அதிசயத்துடன் கவனித்துக்கொண்டிருந்த சனங்களெல்லாம், "சுலோசனர் எங்கே?'' என்று கூச்சலிட்டார்கள். ஜடைக்கிழவி தன்பெயர் கமலம் என்று சொன்னவுடனே சுலோசனர் அங்கிருக்கமுடியாமல் வெகு தந்திரமாக அக்கூட்டத்தைவிட்டு மெள்ள நழுவிவிட்டார். எல்லாரும் கிழவியைப் பார்த்தவண்ணமே யிருந்தபடியால் சுலோசனர் போனதை யொருவருங் கவனிக்கவில்லை, "சுலோசனர் எங்கே?'' என்று கூச்சலிட்ட ஜனங்கள் அவரை யங்கு காணாமல் வெகு கோபங்கொண்டார்கள். பிறகு அவர்கள் எல்லோரும் இனி ஆனந்தபுரிக்கு மனோகரன்தான் அதிபதியென்று அதிக சந்தோஷத்துடன் ஒருமிக்க கூச்சலிட்டார்கள். மனோகரனை நரேந்திரப் பிரபுவின் குமாரனென்று அறிந்த சுந்தரி தன் எண்ணம் ஈடேறிவிட்டதென்று தன்குலதெய்வத்தை நினைத்து அகமகிழ்ந்தாள். மனோகரனை தனக்கும் மேம்பட்ட பிரபுவென்று அறிந்த சந்திரசேகரர் அவனருகிற்போய் தான் தெரியாமற் செய்த சிறு பிழைகளைப் பொறுத்துத் தன்னை மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இரண்டு வண்டிகளை நன்றாய் அலங்கரித்துக் கொண்டுவரும்படி மனோகரன் சம்பாதிக்கு உத்தரவிட்டான். இன்ன ஊர் இன்ன ஜாதியென்று தெரியாமல் எங்கே யோடிடுவோ மென்றிருந்த மனோகரன்தான் க்ஷத்திரியப்பிரபுவின் மைந்தன் என்று அறிந்தபோதுண்டான சந்தோஷத்தை இவ்வளவென்று எழுதி முடியாது. பிறகு சந்திரசேகரர், சந்திரசூடன், மனோகரன் ஆகிய மூவர்களும் ஒருவண்டியி லேறிக்கொள்ள, இரதியும் சுந்தரியும் ஜடைக்கிழவியுடன் மற்றோர்வண்டியி லுட்கார, எல்லாருமாக அரண்மனைக்குப் போனார்கள்.

---

## 26. மனோகரன் வெற்றி.

அரண்மனையடைந்தவுடன் சந்திரசேகரர் முதலானவர்களெல்லாம் ஒன்றாகூடி வெகுநேரம்வரைக்கும் பேசியிருந்து, மனோகரனையும் சந்திரசூடனையுங்காப்பாற்றியஜடைக்கிழவியை எல்லாரும்புகழ்ந்தார்கள். அரண்மனையில் எல்லாருக்கும் சந்தோஷமுண்டாகி முகத்தில் களையுண்டாயிற்று. பிறகுமனோகரன், ஜடைக்கிழவி சந்திரசேகரரிடத்துக்கொடுத்த கடிதங்களையெல்லாம் வாங்கிப்படித்துப்பார்த்து, தன்சிறியதகப்பனாராகிய சுலோசனர்செய்த கொடியபாவச்செயல்களையெல்லா மறிந்தான். அதன்பின்பு அவன் சுலோசனர் அறையிற்புகுந்து எல்லாப்பெட்டிகளையுந் திறந்துபார்க்கையில் அவைகளிலிருந்த சிலகடிதங்களையெடுத்துத் தனியேவைத்துக்கொண்டு, மற்றுமுள்ள சாமான்களையெல்லாங்கணக்கிட்டான். எல்லாக்கடிதங்களையும் ஆதாரமாகவைத்து சுலோசனர்செய்த காரியங்களையெல்லாம் விவரமாகக்கூறி ஓர் பெரியகடிதம் எழுதி மகதவரசனுக்கனுப்பிவிட்டான். அதுமுடிந்தபின் சுலோசனருடைய போர்வீரர்களைவரவழைத்து அவர்களுக்குப் புதிய ஏற்பாடுகள் செய்தான். ஆனந்தபுரியிலும் சுலோசனர் ஆளுகைக்குட்பட்ட மற்றவூர்களிலுமுள்ள முக்கியவுத்தியோகஸ்தர்களை அழைத்துவரும்படியாட்களையனுப்பினான். ஒருநாளில்மனோகரன் தன்பிதாவினுடைய அதிகாரத்தைப் பெறுவதற்குண்டான வேலைகளையெல்லாம் செய்துமுடித்தான். ஆனந்தபுரியில் நெடுநாளாய்கள்ளர்களுடைய உபத்திரவமிருப்பதையறிந்த மனோகரன், சத்தியபுரியிலிருந்தும், இன்னுந்தனக்குச்சொந்தமாகப்போகிற வூர்களிலிருந்தும் சுமார் ஐந்நூறுபோர்வீரர்களைவரவழைத்து, சிருங்கபலைக் கள்ளர்களைக்குறித்து ஜடைக்கிழவியும் சந்திரசூடனுஞ்சொல்லிய அடையாளங்களைநன்றாய் அறிந்து, கள்ளர்களை எதிர்த்துப்போய் எல்லோரையும்பிடித்து சிறையிலடைத்துவிடத்தீர்மானித்தான். ஆனால் மகதவரசனிடத்திலிருந்து என்னவுத்தரவு வருகிற

தென்று எதிர்ப்பார்த்தவரைப் மனோகரன் அரண்மனையில்
சும்மாவிருக்கும்போது, ஒருநாள் சந்திரசேகரர் அவனிடத்
துவிவாகவிஷயத்தைக்குறித்துப்பேசினார். அதற்குமனோகர
ன், "என்னுடையபிதாவின்வார்த்தைகளெல்லாம் எனக்குக்கிடை
த்தாலும் ஒருபிரபுவானபின், விவாகத்தைக்குறித்துயோ
சிக்கலாம்" என்றுசொல்லிவிட்டான். அதைக்கேட்ட சந்
திரசேகரர் மிகவும் சந்தோஷப்பட்டு எப்படியாவது மனோ
கரன் தன்பெண்ணை விவாகஞ்செய்துகொண்டால் போதுமா
னதென்றுநினைத்தார். ஏன்? சீக்கிரத்தில் மனோகரன்
அநேக ஊர்களுக்கு அதிபதியாகிவிடுவான், மகா அழகு
பொருந்திய யௌவன புருஷன், விசேஷதனத்தை யடை
யப்போகிறான். அதைக் கண்டு எந்தப் பணக்காரப் பிர
புக்களாவது மேல் விழுந்து அவனுக்குப் பெண்ணைக்கொ
டுக்க வந்துவிடுவார்களென்று சத்தியபுரி பிரபுவுக்குத்
தோன்றியதால் அவ்வாறு நினைத்தார். பிறகு அவர் தன்
மனைவியைக் கூப்பிட்டு சுந்தரியை யடிக்கடி மனோகரனி
டத்துப்போய் பழய அன்பு மாறுதிருக்கும் வண்ணம்
பேசும்படி அனுப்பு என்று சொன்னார். அப்போது இ
ரதி, "என் பிராணநாதா! முன்னொரு சமயம் அவன்
சுந்தரியைக் காதலித்து அவளுடன் பேசியதற்கு அவ
னை நாம் தண்டித்தோம். இப்போது சுந்தரியை நாமே
அவனுடன் பேச ஏவுகிறோம், இது வெகு ஆச்சரியம்."
என்றாள். அதற்குப் பிரபு, "ஆமாம், அந்தச்சமயம்
அப்படியிருந்தது. இப்போது அவன் கிடைத்தால் போ
துமெனத் தோன்றுகிறது. இந்தச் சமயம் பழய ஏற்பா
ட்டை நினைத்து சுந்தரி சும்மாவிருந்துவிட்டாள், மனோ
கரன் அவளுக்குக் கணவனாக நேருவது கஷ்டமாய்முடி
யும். இவர்கள் நம்முடைய சாதிக்கேற்றிருக்கும் காந்த
ர்வ விவாகஞ் செய்துகொண்டால்கூட எனக்கிஷ்டந்தான்.
பிறகுநாம் கலியாணத்தை விமரிசையாகச் செய்துகொ
ள்ளலாம்" என்றார். அதற்குமேல் இரதி ஒன்றும்பேசா

மல் அதிக சந்தோஷத்துடன் சுந்தரியின் அறைக்குப்போய் அவளுக்குச் சங்கதியைச்சொல்ல, "அம்மா! பணத்தையும் அதிகாரத்தையும் பார்த்து காதல் கொள்வது காதல் அல்ல; அது ஓர் வியாபாரம். மனோகரருக்கும் எனக்கும் உண்மையான காதல் முன்னமேயே உண்டாயிருக்கிறபடியால், என்ன பெரிய அதிகாரத்தை அடைந்தபோதிலும் அவர் மனம் மாறாது. அவர் என்ன தாழ்ந்த ஸ்திதியையடைந்தாலும் அவரிடத்துள்ள என் காதல் மாறாது. இப்போது அவருக்கு வரப்போகிற அதிகாரத்தையும் செல்வத்தையுங் கருதி அவரிடத்து நெருங்கிப் பேசியபின்பு, ஏதோ ஒருகாரணத்தால் மகதவரசன் அவருக்கு ஒன்றுங் கொடாமல் பழயபடி அனாதையாய் விட்டுவிட்டால், அப்போது அவரிடத்துப் பேசாமல் தூரநின்றுவிடுகிறதோ? பிறகு வேறு புருஷனை நேசிக்கிறதோ? இது நம்முடைய சாதியைச்சேர்ந்த பதிவிரதைகளுக் கடுக்கதில்லையம்மா" என்று சுந்தரி கூறியதைக் கேட்ட இரதி சுந்தரியின் விவேகத்திற்கு வியந்து சென்றாள்.

சுலோசனரைக் குறித்து ஒரு சமாச்சாரமுந் தெரியவில்லை. இன்னவிடம் போனாரென ஒருவருக்குந் தெரியாது. அவரை யெல்லாரும் தூஷித்தார்கள். அவ்வூராரெல்லாம் மனோகரனையே தங்கள் சிற்றரசனென மதித்து மரியாதை செய்தார்கள். இப்படி சில நாள் சென்றபின், இராசாங்கத்திலிருந்து உத்தரவு வந்தது. அதன்பிரகாரம் மனோகரன் தன் பிதாவின் ஊர்களுக்கெல்லாம் அதிபதியானான். சுலோசனர் அகப்பட்டவுடன் அவர்மீது குற்றமேற்படுத்தி விசாரணை செய்யப்படுமென்று அதில் கண்டிருந்தது. அதேதினத்தில் சந்திரசேகரருக்கும் அரசனிடத்திலிருந்து ஓர் கடிதம் வந்தது. அதில், சில இராஜாங்க ஏற்பாடுகளுக்காகச் சந்திரசேகரரை அயலூரிற்போய் வசிக்கும்படியாக கட்டளை யனுப்பப்பட்டது. அதை யோர் இழிவாக நினைக்கக்கூடாது. மறுபடியும் சத்தியபுரி போய்

விசிக்கலாமென்று எழுதியிருந்தது. அதைப்படித்தறிந்த சத்தியபுரி பிரபு மிகவும் சந்தோஷித்துப் பகவானை துதித்தார். அன்றையதினம் இராமதாசர் அவ்விடம் வந்து சந்திரசேகரப் பிரபுவையும் மனோகரப் பிரபுவையும் கண்டு பேசி அவர்களை ஆசிர்வதித்துச் சென்றார். பிறகு மனோகரன் தான் முன்னமே சேர்த்திருந்த போர்வீரர்களுடன் சிருங்கமலையை நோக்கிச் சென்று கள்ளர்களையெதிர்த்து அநேகரைக் கொன்று மிருந்த கள்ளத்தலைவர்களையும் இன்னும் சில கள்ளர்களையும் பிடித்துக்கொண்டுவந்து ஆனந்தபுரியைச் சேர்ந்தான். அன்றோடே கள்ளர் பயம் நீங்கிய அநேக ஊர்ச்சனங்கள் மனோகரனை வாயாரப் புகழ்ந்தார்கள். அரசனது உத்தரவு பிரகாரம் அக்கள்ளர்களுக்கு விலங்குபூட்டி அவர்களை மனோகரன் மகதபட்டணம் அனுப்பிவிட்டான். அநேகவருஷங்களாக எவ்வளவு பிரயத்தனங்கள் செய்தும் அக்கள்ளர்களைக் கண்டு பிடிக்க முடியவில்லையேயென்று மனம் வருந்திய அரசன் சந்தோஷித்து மனோகரனைப் புகழ்ந்து பேசினான்.

---

## 27. கேடுவான் கேடுநினைப்பான்.

தங்கள் நிலைமை யறியாது ஓர் பிரபுவின் புத்திரியின் மீது ஆசைகொண்ட சிருங்கமலைக் கள்ளர்கள் மகதபட்டணத்தில் சிறைச்சாலையைத் தங்கள் வாசஸ்தலமாக அடைந்தார்கள். மண்ணாசையால் தன்னண்ணனையும் அவன் மனைவியையுங்கொன்று, பிறகு பெண்ணாசையால் தன் தமையன் மகனைக் கொல்ல யெத்தனித்த சுலோசனர் சந்திரகுடன் வெளிவந்ததினமே தன்னிலைமையைக் கருதிப்பயந்து பிரபுவுக்குரிய வுடுப்புகளை நீக்கி, ஓர் ஏழையைப்போல் மாறுவேஷம்பூண்டு யாவருக்குந் தெரியாமல் ஆனந்தபுரியை விட்டு ஜயபுரிக்குப்போய், வெகுநாளைக்குமுன் தான்போ

ந்தவராயிருந்த ஓர் தாசிவீட்டிலேபோய் ஒளித்துக்கொண்டார். அந்த தாசி வயதுசென்ற கிழவியாகி தன்பெண்ணின் ஒத்தாசையால் ஜீவித்துவந்தாள். அப்போது கொடியகுற்றங்களைச் செய்த கபிலாசனனைக் கண்டுபிடித்து அரசன் முன்பு கொண்டுவிடுவோருக்கு வெகுமானங் கொடுப்பதாக எல்லா ஊர்களிலும் பறையடிக்கப்பட்டிருந்தது. அதையறிந்த கபிலாசனர் சரியான ஊண் உறக்கமின்றி எப்போதும் சிந்தையிலாழ்ந்து தேகம் மெலிந்துமிருந்த அவஸ்தையுடன் தாசிவீட்டில் மறைந்துகொண்டு வாழ்நாளைக் கழித்துவந்தார்.

ஆனந்தபுரியில் சந்திரசேகரர் தன் பெண்விவாகம் நடக்கும் வரையிலும் அவ்வூரிலேயே யிருக்கவெண்ணினார். மனோகரன் தன்னூருக்குட்பட்ட ஊர்களையெல்லாம் பார்த்து வரவேண்டுமென்று புறப்பட்டான். எப்படியாவது கபிலாசனரைக்கண்டுபிடிக்கவேண்டுமென்னும் எண்ணம் அவன் மனதில் எப்போதும் குடிகொண்டிருந்தது. அவர் அன்னியதேசமாவது ஓடிவிட்டிருக்கவேண்டும், அல்லது தனக்கு மிகவும் இஷ்டமுள்ளவர்கள் வீட்டில் ஒளித்துக்கொண்டிருக்க வேண்டுமென்று மனோகரன் நிர்மானித்து, அரண்மனை வேலைக்காரனாகிய சாத்தனை யழைத்து, கபிலாசனருக்கு மிகவும் பிரியமுள்ளவர் யார் என்று கேட்கையில், அவன் ஜயபுரி தாசி சித்திராங்கியைச் சொன்னான். எல்லாவூர்களையும் பார்த்துக்கொண்டு கடைசியாக ஜயபுரிக்கு வரும்போது, மனோகரன் பிரபுவுக்குண்டான ஆடம்பரங்களையெல்லாம் விடுத்து, சாமான்னிய மனிதனைப்போல ஆடையுடுத்து, தனது பரிவாரங்களையெல்லாம் அவ்வூர்க்கு வெளியேவிடுத்து, ஜயபுரிக்கு வந்து ஓர் வீட்டில் தங்கியிருந்து, மூன்றாவது நாள் சாயந்திரம் ஓர் விடபுருஷனைப்போல அலங்கரித்துக்கொண்டு, சித்திராங்கியென்னும் தாசியிருக்கும் வீதியில் போய்க்கொண்டிருந்தான்.

அத்தகைய மனிதர்களைக் கருதியே வயிறுப்பிழைக்கத் தவ
ஞ்செய்துகொண்டிருக்குஞ் சித்திராங்கியின் பெண்ணை ம
னோகரன் கண்டான். அவளும் இவனே பணக்காரனெ
னமகிழ்ந்து மனோகரனைப் பார்த்தாள். இருவர் கண்களும்
அவரவர் எண்ணங்களைத் தெரிவிக்க, மனோகரன் அன்றிர
வு வருவதாகச் சாடைகாட்டிச் சென்றான். அப்பெண்
ணின் அழகைக் கண்டவர் யாவராயினும் புத்திமயங்குவா
ர்கள். பொன்னாசை கொண்டெழும் சித்தவிர்த்தியை
மனோகரன் சுந்தரிக்கு அர்ப்பணஞ்செய்துவிட்ட சிறுனை
படியினுல் அவன் புத்தி மயங்கவில்லை. சுலோசனகாக்கன்
பிடிக்கவேண்டு மென்பதல்லவோ அவன் கருத்து? அன்
றிரவு போசனஞ் செய்தபின்பு மனோகரன் தாசிவீட்டுக்
குப் புறப்பட்டு தன்னுடன் வந்த இரண்டு போர்வீரர்களை
அவ்வீட்டுக்கருகாமையில் வெளியே நிறுத்திவிட்டு, சித்தி
ராங்கியின் கிரகத்தில் நுழைந்தான். அவன் வரவை மதி
ஆவலுடன் எதிர்பார்த்திருந்த சித்திராங்கியின் பெண்
அதிக மரியாதையுடன் மனோகரனை நன்றாய் அலங்கரிக்கப்
பட்ட ஓர் அறைக்குள் அழைத்துச்சென்றாள். இருவருமா
க வெகுநேரம் பேசியிருந்தபின்பு, மனோகரன் தனக்கு தே
கசௌக்கியமில்லை யாதலால், அன்றையதினம் அவளிடத்
துப் பேசியதே தனக்குப் போதுமானதென்று சொல்லிப்
படுத்துவிட்டான். மற்றோர் மஞ்சத்தின்மீது அத்தாசிப்
பெண்ணும் படுத்து உறங்கிவிட்டாள். சிறிதுநேரஞ்சென்
றபின், கண்களை மூடிக்கொண்டு தூங்காமலே படுத்திருந்த
மனோகரன் அவ்வீட்டில் அத்தாசிப் பெண்ணும் அவள்
தாயும் நன்றாய் நித்திரைசெய்வதை யறிந்து, சத்தஞ்செய்
யாமல் எழுந்து ஓர் விளக்கை யெடுத்துக்கொண்டு அவ்வீ
ட்டினுள்ள ஒவ்வொரு அறையும் பார்த்துவருகையில், ஓர்
அறையில் ஒரு புருஷன் துப்பட்டியால் உடம்பு முழுவ
தும் போர்த்துக்கொண்டு நித்திரைபோவதைக் கண்டான்.
பிறகு மெள்ள துப்பட்டியை நீக்கி அப்புருஷன் முகத்தை

ப் பார்த்து மனோகரன் அதிசயித்து நிற்கையில், அப்புருஷன் நித்திரை நீங்கி கண்ணை விழித்துப் பார்த்து மிகவும் பயந்து எழுந்து நின்று, "என் குமாரனே! பகவான் அருளைப் பூரணமாகப் பெற்ற பாக்கியவானே! கொடும்பாவியாகிய நான் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்து என்னை நீதான் காப்பாற்றவேண்டும்." என்று அதிக வணக்கத்துடன் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். பார்த்தான் மனோகரன். தன் சிறிய தகப்பனாரின் நிலைமையை யறிந்து மனமிரங்கினான். அவரைப் பிடித்து மகதவரசனிடத்து அனுப்பவேண்டு மென்னுங் கருத்தை யொழித்தான். மகா தயாளுவாகையால் மனோகரன், தனக்குச் செய்த தீங்குகளை நினையாமல், சுலோசனரைக் காப்பாற்றவேண்டுமென்று எண்ணி, அவரை எப்போதும் வெளிவராமல் அந்த தாசி வீட்டிலேயிருக்கும்படி கேட்டுக்கொண்டு, அவரைத்தான் காப்பாற்றுவதாகச் சொல்லி அவ்வீட்டைவிட்டு வெளியே போனான். மகாதனிகராய் அநேக ஊர்களுக் கதிபதியாயிருந்தவர், அதிகாரத்தையும் தனத்தையுமிழந்து தாசிவீட்டில் சிறைப்பட்டதுபோல இருக்க நேர்ந்ததே அவருக்குப் போதுமான தண்டனையென்று மனோகரன் நினைத்தான். இத்துடன் ஒருகாலத்தில் நாம் அனாதையா யிருந்தோம், இப்போது சுலோசனர் அனாதையாய்விட்டார், இந்த உலகத்தில் எந்தஸ்திதி எவர்க்குச் சாசுவதமா யிருக்கிறதென்று அவன் எண்ணினான்போலும்.

---

## 28. சுந்தரி கலியாணம்.

அடுத்த நாள் ஜயபுரியைவிட்டு ஆனந்தபுரிக்கு வந்துவிட்டான் மனோகரன். சுலோசனரைக் கண்டதை அவன் ஒருவரிடத்தும் சொல்லவில்லை. அவன் வரவை அதிக ஆவலுடன் எதிர்ப்பார்த்திருந்த சுந்தரி அவன் தனியேயிருக்கும்போது அவன் அறைக்குட் சென்றாள். அப்போது

மனோகரன் சுந்தரி என்னசெல்லுகிறாள் பார்ப்போமென்று சும்மாயிருந்தான். அதை யொருவாறு அறிந்த சுந்தரி, "என் மனோகரமே! நீங்களும் அநேக் ஊர்களுக் கதிபதியாகி அரசனாகிவிட்டீர்கள். நானும் அவ்வூர்களுக்கு இராணியாகிவிட்டேன்" என்றாள். அதைக்கேட்ட மனோகரன், "நான் அநேக ஊர்களுக்கு அரசனாகிவிட்டது உண்மைதான். இதை எல்லாரும் அறிவார்கள். நீ இராணியாய்விட்டதெப்படி?" என்று கேட்க, அதற்குச்சுந்தரி, "நான் இராணியாய்விட்டதும் உண்மைதான். ஆனால் இதை எல்லாரும் அறியார்கள். எல்லாரும் அறியும்படி நீங்கள்தான் செய்துவைக்கவேண்டும்." என்று கூறிய சுந்தரியின் கருத்தையறிந்து மனோகரன் நெடுநேரம் வரைக்கும் அவளுடன் பேசியிருந்து, திடீரலென்று, "சுந்தரி! சந்திரசூடன் வந்துவிடப்போகிறான். பேசியது போதும் நீபோ" என்று சொன்னான். "என்பிதாவின் இஷ்டத்தையும் சந்திரசூடன் மனதையும் அறிந்தபின், நீங்கள் இவ்வாறு வேடிக்கைசெய்யவேண்டியது அவசியந்தான். என்பிதாவும் என் அண்ணனும் என்னைத் தங்களிடத்துப் போய்ப் பேசும்படி எத்தனைதரஞ் சொன்னார்கள் தெரியுமா? என்பிதாவே என்னை உங்களுக்குக் கொடுக்க சம்மதித்தபின்பு நான் உங்களை மணம்புரிவேனென்று சிங்காரத் தோட்டத்தில் சொன்னேனே ஞாபகமிருக்கிறதா? என்று சுந்தரி கேட்டாள். அதற்கு மனோகரன், "அதை நான் மறப்பேனா?" என்று சொல்ல, சுந்தரி, "பிறகு என்னதாமதம்?" என்றாள். அதற்கு மனோகரன், "ஏன்பயப்படுகிறாய் சுந்தரி? இனி தாமதமாய் நடந்தாலென்ன? சீக்கிரமாய் நடந்தாலென்ன?" என்னும்போது, சுந்தரி, "நன்றாய்ச் சொன்னீர்கள். நான் சொல்லிய விஷயம் எப்போது வேண்டுமானாலும் நடக்கட்டுமென்ற ஓர் அற்பசங்கதியாய் விட்டதோ? அநேக ஊர்களுக்குப் போய்வந்தீர்களே உங்கள் மனம் மாறிவிட்டதோ?" என்று சுந்தரி அதிக சந்தேகங்கொண்டவளாய் மிகவும்

பயந்து கேட்டதை மனோகரன் அறிந்து, அவள் சந்தேகமும் பயமும் நீங்கும் வண்ணம் பேசி தன்னன்பை வெளிப்படையாக அவள் சந்தோஷிக்கும் வண்ணம் காட்டினான். பிறகு சுந்தரி தன்னிருப்பிடஞ் சென்றாள்.

சுந்தரி மனோகரனிடத்துப் பேசிவந்தாளென்ற சங்கதியையறிந்த இரதி அவள் அறைக்கு வந்து, மனோகரன் கூறியவையெல்லாங் கேட்டு சந்தோஷித்து, பிறகு அவள் தன் பர்த்தாவுக்குத் தெரிவித்தாள். உடனே விவாகத்திற்குப் பிரயத்தனஞ்செய்தார் சந்திரசேகரர். அரண்மனைப் புரோகிதனை வரவழைத்து, நல்ல முகூர்த்தநாளேற்படுத்தி, மகதவரசனுக்கும் மற்றுமுள்ள பிரபுக்களுக்கெல்லாம் விவாகப்பத்திரிகை யனுப்பினார்கள். ஆனந்தபுரியைக் கண்டவர்களிக்கும் வண்ணம் அதிக அழகாக அலங்கரித்தார்கள். பிரபுக்களெல்லாம் வந்து தங்குவதற்கு வேண்டிய இடங்களெல்லாம் அமைக்கப்பட்டன. அநேக பிரபுக்கள், ஆனந்தபுரிக்கு வந்தார்கள். மனோகரனுடைய தாய்வர்க்கத்தைச் சேர்ந்த பந்துக்களெல்லாம் வந்து அதிக சந்தோஷத்துடன் அவனைக்கண்டு பேசி மனமகிழ்ந்தார்கள். தன் தந்தையுடன் பிறந்த சுலோசனையை நினைத்துக்கொண்டு மனோகரன் விசனமடைந்தான். குறித்தநாளில் விவாகம் சுபமுகூர்த்தத்தில் வெகு விமரிசையாக நடந்தேறியது. வந்தவர் யாவரும் தம்பதிகளை வாழ்த்தினார்கள். அக்காலையில் அவ்விடம் வந்திருந்த இராமதாசர் மனோகரனையும் சுந்தரியையும் ஆசீர்வதித்தார். கலியாணம் முடிந்த பின்பு அநேகநாள்வரைக்கும் அரண்மனையில் அநேக ஆட்டக்கச்சேரிகளும் பாட்டுக் கச்சேரிகளும் நடந்துகொண்டிருந்தன. வந்த பிரபுக்களெல்லாம் மனோகரனது குணாதிசயத்தையும் மரியாதையுங் கண்டு மறுபடியும் தங்களூர்க்குப் போக மனமிலராகி ஆனந்தபுரியிலேயே அநேகநாள் தங்கினார்கள். பிறகு சந்திரசேகரர் அதிக சந்தோஷத்துடன்

சுந்தரியையும் மனோகரனையும் ஆசீர்வதித்து சத்தியபுரிக்குப் புறப்பட்டார். சந்திரசூடன் சுந்தரியைவிட்டுப் பிரிய மனமில்லாதவனாய் ஆனந்தபுரியிலேயே சிலநாளிருந்து பிறகு சத்தியபுரிக்குச் சென்றான்.

சந்திரசேகரர் பழயபடி தன்னதிகாரங்களை மேற்கொண்டு சுதந்திர மந்திரியுடன் சிலவருஷங்கள் ஊர்களையாண்டிருந்து, பிறகு சந்திரசூடனுக்கு விவாகம் நடத்தி, அவனைத் தன்னுடைய ஊர்களுக்கதிபதியாக்கித் தான் தன்மனைவியுடன் தனியே பம்பாநதிக் கரையோரமாக விருந்த ஆசிரமத்தையடைந்து பகவத்தியானபரரானார். சந்திரசூடனுக்கும் மனோகரனுக்கும் ஒத்தாசைசெய்த கமலமென்னும் ஜடைக்கிழவி ஆனந்தபுரியில் மனோகரப் பிரபுவினால் ஆதரிக்கப்பட்டு, அந்தியகாலத்தில் அவள் அரண்மனையைவிட்டு நீங்கினாள். வஞ்சனை பொறாமை உலோப முதலான தீயகுணங்களையுடைத்தான சுலோசனர் தாசிவீட்டில் வசித்து வருகையில், தேகத்தில் மகாகொடிய வியாதிகண்டு மிகவும் வருத்தப்பட்டு உயிருடன் வெளியில் வராமலே காலத்தைக்கழித்தார். அவர் செய்த கொடியகாரியங்களுக்குத் தக்கதண்டனையை இம்மையிலேயே யடைந்துவிட்டார். 'கெடுவான் கேடுநினைப்பான்' என்னும் பழமொழி அவர் விஷயத்தில் உண்மையாய் பலித்தது. சாந்தம், தயை, இரக்கம், தைரியம், பெரியோரிடத்து மரியாதை, தெய்வபக்தி ஆகிய நற்குணங்களை யுடைத்தான மனோகரன் இளமையிலேயே தாய்தந்தையற்று திக்கற்றவனானபோதிலும், பிரபுவீட்டில் எல்லா சுதந்திரங்களுடன் வளர்ந்து, கொடிய துன்பங்களுக்கெல்லாம்தப்பி, அநேகஊர்களுக்குச் சிற்றரசனாகி, நற்குணமும்நன்னடக்கையும் கூர்மையானபுத்தியும் பொருந்திய மகாபதிவிரதா சிரோமணியாகிய சுந்தரியைமணம்புரிந்து இம்மண்ணுலகில் விண்ணுலகத்தின்பமெல்லாமனுபவித்துக்கொண்டு காலத்தை இனிதாகக் கழித்தான்.

சத்தியத்தைக் கடைப்பிடித் தொழுகுவோர் முதலில் எவ்விதமான கஷ்டங்களை யனுபவித்தபோதிலும், கடைசியாகப் பகவானது அருளைப்பெற்று, இப் பூமியிலேயே ஓர் குறைவுமின்றி மேன்மையான பதவியை யடைகிறார்களென்றும், அதர்மத்தை யாதரவுடன் கைக்கொண்டு மனம்போன வழியேசென்று துஷ்கிருத்தியங்களைச் செய்வோருக்கு, தாங்க ளெண்ணியவண்ணம் காரியம் முடிந்து சுகமடையலாமென்று தோன்றியபோதிலும், ஒருவேளை சுகத்தையடைந்தாலும் அது அற்பசுகமாய்ச் சீக்கிரத்தில் அழிந்துபோய், முடிவில் அவர்கள் கொடிய துன்பங்களை யடைந்து எல்லாராலும் வெறுக்கப்பட்டு இழிவான நரகத்திற்குப் பாத்திரர்களாகிறார்களென்றும் இக்கதையால் பெறப்படுகிறது.

சுந்தரிமனோகரன் கதை

முற்றிற்று.

---



